# காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவில்

## ஓர் ஆய்வு

முனைவர் சி. இரத்தினம்

International Institute Of Tamil Studies

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

# காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவில்

## - ஓர் ஆய்வு


**முனைவர் சி. இரத்தினம்**

தமிழ்ப் பேராசிரியர் (ஓய்வு),
பச்சையப்பன் ஆடவர் கல்லூரி,
காஞ்சிபுரம் - 631 503.



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

தரமணி, சென்னை - 600 113.

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title | : | **Kancheepuram Ekambaranathar Kovil - Or Aayvu** |
| Author | : | **Dr. Rathinam**<br>Professor of Tamil (Retd.), Pachiappa's College For Men, Kancheepuram - 631 503. |
| Publisher | : | **International Institute of Tamil Studies**, C.I.T. Campus, Taramani, Chennai - 600 113. |
| Publication No | : | 291 |
| Language | : | Tamil |
| Date of Publication | : | 1998 |
| Edition | : | First |
| Paper Used | : | TNPL 16kg Super Printing |
| Size of the book | : | 1/8 Demy |
| Printing types | : | 10 points |
| No.of Pages | : | 256 |
| Price | : | Rs. 60/- (Rupees Sixty Only) |
| No.of Copies | : | 1000 |
| Printed by | : | Parkar Computers and Publications 293, Royapettah High Road, Chennai - 600 014. |
| Subject | : | A Study of Ekambaranathar Temple, Kancheepuram |

இந்துசமய அறநிலையத்துறை வழங்கிய நிதியுதவியைப் பெற்று இந்நூல் வெளிவருகிறது.

**ச. சு. இராமர் இளங்கோ**
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை

## அணிந்துரை

யானைகளை நிறையக் கொண்டது சேரநாடு; பசிப்பிணி போக்கும் சோற்று வளத்தைக் கொண்டது சோழ நாடு; முத்து வளத்தைக் கொண்டது பாண்டிய நாடு; சான்றோர்களைக் கொண்டு விளங்கியது தொண்டை நாடு. இவ்வாறு அவ்வையார் சேர, சோழ, பாண்டிய, தொண்டை முதலிய நாடுகளின் சிறப்பியல்புகளைத் தனிப்பாடலில் பாடியுள்ளார்.

சான்றோர்கள் நிறைந்து வாழும் தொண்டை நாட்டில் அமைந்துள்ளது காஞ்சி மாநகர். இது மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகிய முப்பெரும் பெருமைகளைக் கொண்டது. அயோத்தி, வடமதுரை, அரித்துவார், காசி, காஞ்சி, அவந்தி, துவாரகை முதலிய ஏழு நகரங்கள் மக்களுக்கு முத்தியைத் தரும் நகரங்கள் எனச் சமயச் சான்றோர் குறிப்பிடுவர். காசிக்கு இணையாக வைத்துப் போற்றப்படும் நகரம் காஞ்சிபுரம். எனவே, 'காஞ்சியில் பிறந்தால் முக்தி; காசியில் இறந்தால் முக்தி' என்ற பழமொழி பிறந்தது.

காஞ்சிபுரம் புனிதத்தலம் என்று புராணங்கள் போற்றுகின்றன. எனவே புராணங்கள் காஞ்சிபுரத்திற்கு வேறு சிறப்புப் பெயர்களையும் தந்துள்ளன.

பிரம்மதேவன் வழிபட்டதால் 'பிரம்மபுரம்' என்றும் திருமால் வழிபட்டமையால் 'விண்டுபுரம்' என்றும் உமையாள் சிவனை எண்ணித் தவம் இருந்தமையால் 'தபோமயம்' என்றும் சிவபெருமான் உமையாளுக்குக் காட்சித் தந்த இடமாகையால் 'சிவபுரம்' என்றும் புராணக் கதைகள் காஞ்சிபுரத்தைக் குறிக்கும் சிறப்புப் பெயர்களைச் சுட்டியுள்ளன. காஞ்சியில் இருக்கின்ற 'சக்திபீடம்' முதன்மைப் பீடம் ஆகையால் 'ஆதிபீடம்' என்றும் அழைக்கப்படுகிறது.

சங்கப் பாடல்களும் காஞ்சி மாநகரின் சிறப்புகளைக் குறிப்பிட்டுள்ளன. உருத்திரங்கண்ணனார் என்ற சங்கப் புலவர் காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட இளந்திரையனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு பெரும்பாணாற்றுப்படை பாடியுள்ளார்.

'திருமாலின் உந்தியில் உள்ளதும் நான்முகன் இருக்கப் பெற்றதுமான தாமரைப் பொகுட்டைப் போலும் பழமையும் சிறப்பும் தூய்மையும் கொண்டது இந்நகரமாகும்' என்றும், 'விழாக்கள் நிறைந்த பழமையான மூதூர்' என்றும் காஞ்சிமாநகர் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். சிலப்பதிகாரத்திலும் மணிமேகலையிலும் காஞ்சிபுரம் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. மணிமேகலையில் 'கச்சிமாநகர் புக்க காதை' என்ற தனிக் காதையே அமைந்து காஞ்சியின் சிறப்பை எடுத்துக் கூறுகிறது.

இவ்வாறு சங்க இலக்கியங்கள், காப்பியங்கள், புராணங்கள் காஞ்சி மாநகரின் சிறப்பைக் குறிப்பிடுகின்றன (காஞ்சியில் பல்வேறு சமயத்தவர் வாழ்ந்து வந்தனர்). பௌத்தம், சமணம், சைவம், வைணவம் ஆகிய சமயங்கள் பல்வேறு காலகட்டங்களில் காஞ்சியில் சிறந்து விளங்கின. சீனப் பயணியான 'யுவான்சுவாங்' அசோகர் கால புத்தர் தூபி காஞ்சியில் இருந்ததாகக் குறிப்பிட்டுள்ளார். ஆயின் அந்தப் புத்த தூபி இன்று இல்லை. தொல்பொருள் ஆய்வுத் துறையினர் நடத்திய அகழ்வாராய்ச்சியில் புத்த தூபி இருந்ததற்கான தடயம் உள்ளது என்று சுட்டியுள்ளனர்.

காஞ்சியில் பிறந்த 'திக்நாதர்' என்பவர் புத்த சமயத்தைச் சார்ந்தவர். இந்தியாவில் புத்த சமயத்தைப் பரப்பியவர். அரச குடும்பத்தில் பிறந்து புத்த சமயத்தைச் சார்ந்த போதிதருமன் காஞ்சிபுரத்தைச் சார்ந்தவர். சீனாவரை சென்று புத்த சமயத்தைப் பரப்பினார். காஞ்சிபுரத்தைச் சார்ந்த தருமபாலர் நாலந்தாப் பல்கலைக் கழகத் தலைவராக விளங்கியவர்.

இங்ஙனம் காஞ்சியில் தொடங்கிய புத்தசமயக் கல்வி இந்தியா எங்கும் விரிவு அடைந்து உலகமெங்கும் பரவிய பாங்கினை வரலாறு நமக்கு உணர்த்துகிறது. ஒரு காலத்தில் புகழ் பெற்று விளங்கிய புத்த சமயக் கல்விக் கூடங்கள் இன்று காஞ்சியில் ஒன்று கூட இல்லை. பல்வேறு காலகட்டங்களில் நடந்த சமய மோதல்களால் புத்தப் பள்ளிகளும் புத்த விகாரைகளும் அழிந்துபோய்விட்டன எனக் கருதலாம்.

காஞ்சிபுரத்திற்கு அருகில் உள்ள 'திருப்பருத்திக்குன்று' என்ற இடத்தில் சமணர் தங்கி, சமயக் கருத்துகளைப் பரப்பியுள்ளனர்.

இங்கு இரண்டு சமணக் கோயில்கள் உள்ளன. சமண சமயத்தைச் சார்ந்த மக்கள் அங்கு வாழ்ந்து வருகின்றனர்.

பெரிய காஞ்சியைச் 'சிவக்காஞ்சி' என்றும் சின்னக் காஞ்சியை 'விட்ணுக் காஞ்சி' என்றும் பிரித்துக் கூறுகின்றனர். இவ்விருவகையான பகுப்பின் மூலம் இச்சமயங்கள் நகரத்தில் பெற்ற செல்வாக்கை உணரலாம்.

சைவ சமயப் பிரிவினராக இருந்த கபாலிகர், பாசுபதர் ஆகியோர் இந்த நகரங்களில் தங்கி, தங்கள் சமயக் கருத்துகளைப் பரப்பினர். தேவாரம் பாடிய சுந்தரர், திருநாவுக்கரசர், சம்பந்தர் ஆகிய மூவரும் பெரிய புராணத்தைப் பாடிய சேக்கிழாரும் காஞ்சிபுரத்தைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளனர்.

பல்வேறு வகையாகப் பிரிந்திருந்த இந்து சமயத்தை ஒன்றாக்கிய ஆதிசங்கரர் காஞ்சிக்கு வந்துள்ளார். அதன் விளைவாக 'காமகோடி' மடம் உருவாயிற்று. வைணவ சமயத்திற்குப் புதுநெறியை வகுத்துத் தந்த இராமானுசர் இங்கு தங்கி மடங்களைத் தோற்றுவித்தார்.

கல்வியில் கரையில்லாத, காஞ்சி மாநகரில் வடமொழிக்கும், தமிழ் மொழிக்கும் பெருமை சேர்ந்த கவிஞர்கள் தோன்றியுள்ளனர். மகேந்திர வர்மன் ஆட்சிக் காலத்தில் வடமொழி செல்வாக்குப் பெற்று விளங்கியது. 'காவியதரிசனம்' என்ற வடமொழி நூலைத் 'தண்டியலங்காரம்' என்ற பெயரில் தமிழில் எழுதிய தண்டி என்பவர் இந்த நகரத்தில் வாழ்ந்தவராவார். பாரவி என்ற கவிஞர் வடமொழி நூல்கள் பலவற்றை எழுதியுள்ளார். மகேந்திரவர்மன் வடமொழியில் 'மத்த விலாசப் பிரகசனம்' என்ற நூலை எழுதியுள்ளார்.

காஞ்சி மாநகரத்தில் வாழ்ந்த வடமொழி அறிஞர்களால் வடமொழி ஏற்றம் பெற்றது. வடமொழி வரலாற்றில் காஞ்சியின் பங்கு சிறப்பானது. பதி, பசு, பாசம் என்ற சைவ சித்தாந்தக் கருத்துகளை மக்கள் அனைவரும் எளிதில் புரியும்படிச் செய்த சிவஞான முனிவர் 'காஞ்சிப் புராணம்' என்ற நூலை எழுதினார். காஞ்சி மாநகர் சிறப்புக்களை இந்நூல் வழி விளக்கியுள்ளார்.

காஞ்சியில் வாழ்ந்த சிவஞான முனிவரின் மாணவரான கச்சியப்ப முனிவர் 'கந்தபுராணம்' என்னும் நூலையும், அரங்கநாத முதலியார் 'கச்சிக் கலம்பகம்' நூலையும் பாடியுள்ளனர். காஞ்சியின் பெருமையை முழுமையாக விளக்குவதை முதன்மையாகக் கொண்டு மேற்குறித்த நூல்கள் தோன்றின.

பட்டினத்தார் ஏகாம்பரநாதரைப் பாட்டுடைத் தலைவராக்கி, 'திருவேகம்பர் திருவந்தாதி' என்ற நூலைப் படைத்துள்ளார். 20ஆம் நூற்றாண்டில் தமிழ் மக்கள் மத்தியில் மொழி இன உணர்ச்சியையும் சமூக மாற்றத்தையும் உருவாக்கிய பேரறிஞர் அண்ணா அவர்கள் இங்குதான் பிறந்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

காஞ்சிபுரத்தில் 82 கோயில்கள் உள்ளன என்று ஆய்வாளர் முனைவர் ரத்தினம் குறிப்பிட்டுள்ளார். கோயில்களைச் சுற்றி நகரம் அமைந்துள்ளது. காஞ்சியில் ஏகாம்பரநாதர் கோயில், காமாட்சி அம்மன் கோயில், வரதராசப் பெருமாள் கோயில் முதலியன குறிப் பிடத்தக்கன. இவற்றில் முனைவர் ரத்தினம் அவர்கள் 'தேசமெல் லாம் புகழ்ந்தாடுங் கச்சித் திருவேகம் பன்செம்பொற் கோயில்' என்று மாணிக்கவாசகரால் பாடப்பட்ட பெருமையுடைய 'காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோயிலை' தன்னுடைய முனைவர் பட்ட ஆய்விற்கு எடுத்துக் கொண்டுள்ளார். உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் செய்த அவரது முனைவர் பட்ட ஆய்வேட்டை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் நூலாக வெளியிடுவதில் மகிழ்ச்சி அடைகிறது. முனைவர் ரத்தினம் தாம் எடுத்துக் கொண்ட ஆய்வுப் பொருளை நுட்பமாக ஆய்வு செய்யும் திறம் மிக்கவர் என்பதை இவ்வாய்வேடு உறுதிப் படுத்துகிறது.

'காஞ்சி' என்ற சொல்லுக்குரிய பொருளை ஆய்வாளர் ரத்தினம் பின்வருமாறு ஆய்ந்துள்ளார்.

1. கச்சி என்பது காஞ்சிபுரத்தின் மரூஉ ஆகும். காஞ்சி என்பது வடமொழியில் கஞ்சி எனத் திரிந்து, தமிழில் 'கச்சி' என வழக்கில் வந்தது.
2. காஞ்சி என்னும் சொல்லுக்கு மகளிர் இடையில் அணியும் மேகலை என்பது பொருள்.
3. காஞ்சி எனும் திணைக்கு நிலையாமை என்பது பொருள். நிலையாமைக் கருத்துக்களைக் கூறும் தத்துவவாணர்கள் நிறைந்த நகரமாகையால் இப்பெயர் பெற்றது.
4. காஞ்சிபுரத்தை 'க - பிரமன், அஞ்சித்தல் - பூசித்தல், புரம் - நகரம்' எனப் பிரித்து நோக்கினால் பிரமனால் பூசிக்கப்பட்ட நகரம் ஆகையால் காஞ்சிபுரம் எனப் பெயர் பெற்றது.
5. பூவரசு மரங்களைக் காஞ்சி மரங்கள் என்று நம் முன்னோர் கூறினர். காஞ்சிபுரத்தில் பூவரசு மரங்கள் நிறைந்து காணப் படுகின்றன.

இவ்வாறு கூறப்பட்ட ஐந்து பெயர்க் காரணங்களில் இறுதியாகச் சுட்டப்படும் காஞ்சி மரங்கள் (பூவரசு) நிறைந்த ஊர் ஆகையால் இவ்வூர் காஞ்சிபுரம் எனப் பெயர் பெற்றது என்று ஆய்வாளர் ரத்தினம் முடிவு கூறியிருப்பது ஏற்புடைத்தாக அமைகிறது.

இறைவன் எங்கும் நிறைந்தவர். நிலம், நீர், காற்று, நெருப்பு, வான் முதலிய ஐந்து பூதங்களில் நிறைந்து காணப்படுகிறார். தமிழகத்தில் உள்ள ஐந்து சிவன் கோயில்கள் தத்துவ நெறியில் அமைந்த இக்கருத்தை விளக்குகின்றன.

'ஏகாம்பரநாதர் கோயில் நிலம் (மணல்) தலமாகவும்; திருவானைக்கா கோயில் நீர்த்தலமாகவும், திருவண்ணாமலைக் கோயில் நெருப்புத்தலமாகவும், திருக்காளத்திக் கோயில் காற்றுத் தலமாகவும், தில்லை நடராசர் கோயில் வானத் தலமாகவும் விளங்குகின்றன' என்று நூலாசிரியர் குறிப்பிட்டுச் செல்கிறார்.

ஏகாம்பரம் என்ற சொல்லுக்குப் பொருள் கூறுகின்ற பாங்கும் சிறப்புக்குரியது. 'ஒற்றை மாமரத்தடியில் சிவபெருமான் அமர்ந்திருப்பதால் அவருக்கு ஏகாம்பரநாதர்' என்று பெயர் வந்தது என்று கூறுகிறார். பழங்காலத்தில் இறைவனை மக்கள் மரத்தடியில் வழிபட்டு வந்தனர். பின்பு சிலை அமைத்து வழிபட்டனர். இவ் உண்மையை உணர்த்தும் வகையில் ஏகாம்பரநாதர் பெயர் விளங்குகிறது.

சிவஞான முனிவர் இயற்றிய காஞ்சிப் புராணத்தில் 'கச்சி மயானம்' பற்றி ஒரு கதை உள்ளது. அக்காலத்தில் பண்டாசுரன் என்னும் அரக்கன் மக்களின் வீரியத்தை உண்ணும் வரத்தைப் பிரம்மனிடம் பெற்றான். பண்டாசுரன் தொல்லையால் துன்புற்ற மக்கள், தேவர், அசுரர் முதலியோர் சிவனை வழிபட்டு அவ்வரக்கனை அழிக்க வேண்டினர். சிவபெருமான் பண்டாசுரன் உட்பட எல்லோரையும் யாக குண்டலத்தில் போட்டு அழித்தார். பின்னர் இவ்வுலகு தோன்ற இலளிதா தேவியைப் படைத்தார். சிவஞான முனிவர் குறிப்பிட்ட 'கச்சி மயானம்' ஏகாம்பரநாதர் கோயிலில் இடம்பெற்றுள்ளதை நூலாசிரியர் விளக்கியுள்ளார்.

இவ்வாறு முனைவர் ரத்தினம் இலக்கியம், சமயம், தத்துவம், சமூகம் முதலிய பல்வகைப் பார்வையுடன் இந்நூலைப் படைத்துள்ளார். முனைவர் ரத்தினம் அவர்களின் ஆய்வுத்திறன் பாராட்டுக்குரியது.

நிறுவன வளர்ச்சியில் ஆக்கமும் ஊக்கமும் காட்டி வருகின்ற நிறுவனத் தலைவர் மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி - பண்பாடு

மற்றும் இந்து சமய அறநிலையத்துறை அமைச்சர் முனைவர் மு. தமிழ்க் குடிமகன் அவர்களுக்கும்,

தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத் துறைச் செயலாளர் திரு. த. இரா. சீனிவாசன் இ.ஆ.ப. அவர்களுக்கும்,

இந்நூலினை வெளியிட நிதி நல்கிய இந்துசமய அற நிலை யத் துறை ஆணையர்க்கும்,

காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் திருக்கோயில் அதிகாரிகளுக்கும் எங்கள் நெஞ்சார்ந்த நன்றி.

இந்நூலினைச் சிறப்பான முறையில் நூலுருவாக்கம் செய்த திரு. வே. கருணாநிதி அவர்கட்கும் எங்கள் நன்றி.

**இயக்குநர்**

# என்னுரை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் என்னைப் பகுதி நேர ஆய்வாளராகச் சேர்த்துக் கொண்டு, இந்த ஆய்வினை இந்நிறு வனத்தில் மேற்கொள்வதற்கு பேருதவி புரிந்த முன்னாள் இயக்குநர் பேராசிரியர் டாக்டர் ச.வே. சுப்பிரமணியன் அவர்களுக்கு என் உளங் கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மற்றும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் முன்னாள் இயக் குநர்கள் பேராசிரியர் டாக்டர். ஏ. என். பெருமாள், பேராசிரியர் டாக்டர். க.த. திருநாவுக்கரசு, டாக்டர். சிலம்பொலி சு. செல்லப்பன் ஆகியோர் கட்கும் இந்நாள் இயக்குநர் டாக்டர் ச. சு. இராமர் இளங்கோ அவர் கட்கும் என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சீரிய கருத்துக்களை மிகுந்த ஊக்கமுடன் மேன்மையான முறை யில் வழங்கி நெறிப்படுத்தி உதவிய என் நெறியாளர் டாக்டர் திருமதி ர. விசயலக்குமி அவர்களுக்கு என்றும் என் உளம் நிறைந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவில் ஆய்வினை மேற்கொள் வதற்கு ஆர்வத்தை வளர்த்து ஊக்குவித்த பேராசிரியர்கள் டாக்டர் அரங்கசாமி, சி.அ. விமலானந்தம், டாக்டர். சி. விநாயகம், டாக்டர். பி. பிரகாசம், புலவர். சிவ. கன்னியப்பன், எஸ். சோமசுந்தரம் ஆகி யோர்க்கு நன்றிக் கடப்பாடுடையேன்.

இந்த ஆய்வுக்குரிய நற்சான்றுகளையும் கல்வெட்டுக்கள் பற் றிய தகவல்களையும் பெறுதற்குப் பல நிலைகளில் உதவி புரிந் தவர்கள் பலராவர். அவர்களுள் சென்னை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவன நூலகர்கள் திருமதி. எ. யோகம், திருமதி. ஆர். பார்வதி, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகப் பொது மேலாளர் இரா. முத்துக் குமாரசாமி அவர்களும் காஞ்சிபுரம் பச்சையப்பன் ஆடவர் கல்லூரி நூலகர் பி. அப்புராஜ் அவர்களும் சென்னை அடையாறு நூலகத் திலுள்ள சீதா நீலகண்டன் அவர்களும் குறிப்பிடத்தக்கவராவர்.

இவர்கள் தவிர சென்னை, ஆவணக் காப்பகம், மறைமலை யடிகள் நூலகம், சென்னைப் பல்கலைக் கழக நூலகம், கன்னிமரா

நூலகம், திருவான்மியூர் உ.வே. சாமிநாதையர் நூலகம் ஆகியவற் றின் பொறுப்பாளர்கள் புரிந்த உதவிகளுக்கு நான் நன்றியுடையேன்.

இந்த ஆய்வேடு இறுதி வடிவம் பெற்ற நேரத்தில் உடனிருந்து பேருதவிகள் புரிந்த சிவ. சண்முகசுந்தரம், எஸ். ஏகாம்பரம் ஆகி யோர்க்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பகுதி நேர ஆய்வாளராக விளங்கி, இவ்வாய்வு மேற்கொள் வதற்கு அனுமதியளித்த சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு என் றும் நன்றியுடையேன்.

சிறந்த முறையில் அச்சிட்டுக் கொடுத்த சென்னை - 14இல் உள்ள பார்க்கர் கம்பியூட்டர்ஸ் வே. கருணாநிதிக்கும்,

நிழற்படங்கள் எடுத்துதவிய சண்முகம் நிழற்பட அரங்கத்தின் உரிமையாளருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**சி. இரத்தினம்**

## பொருளடக்கம்

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| உரை | - | உரையாசிரியர் |
| கா. | - | காதை |
| செ. | - | செய்யுள் |
| சை.சி.நூ.ப.க. | - | சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம் |
| சொல் | - | சொல்லதிகாரம் |
| தொ. | - | தொகுதி |
| தொகு. | - | தொகுப்பாசிரியர் |
| நூ. | - | நூற்பா |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| பதி. | - | பதிப்பாசிரியர் |
| பா. | - | பாடல் |
| பா-ள் | - | பாடல்கள் |
| பொருள் | - | பொருளதிகாரம் |
| மு.கா.நூ. | - | முற்காட்டிய நூல் |
| வ-ள் | - | வரிகள் |
| A.R. No | - | Annual Report Number |
| A.R.E. | - | Annual Reort of Epigraphy |
| A.R.I.E. | - | Annual Report of Indian Epigraphy |
| A.R.S.I.E | - | Annual Report of South Indian Epigraphy |
| E.C. | - | Epigraphica Carnatica. |
| Ed. | - | Edition |
| Edt. | - | Editor. |
| H.O.T.T. | - | History of the Tamils |
| Ibid | - | Ibidem |
| I.H.Q. | - | Indian Historical Quarterly. |
| J.O.R. | - | Journal of Oriental Research |
| K.I.E.S.I.H | - | Kancheepuram in early South Indian History. |
| M.A.R. | - | Mysore Archaeological Report |
| Op.cit | - | Opera citato-in the work cited. |
| p. | - | Page. |
| P.P. | - | Pages |
| S.I.I. | - | South Indian Inscriptions. |
| S.I.T.I. | - | South Indian Temple Inscriptions. |
| Vol | - | Volume. |

# முன்னுரை

## ஆய்வுப் பொருள்

"காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவில் ஓர் ஆய்வு" என்பது இந்த ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட பொருளாகும்.

தமிழ்நாட்டில் உள்ள நகரங்களுள் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்தனவாகக் கருதப்படுவன காஞ்சி, உறையூர், பூம்புகார், தஞ்சை மதுரை முதலியன. அவற்றுள் தொன்மையும் கலைச்சிறப்பும் பெற்று இன்று வரையில் சிறந்து விளங்குவது காஞ்சிமா நகரமாகும்.

தமிழகத்தின் வடவெல்லையில் அமைந்துள்ள காஞ்சிபுரம் பல்லவ,[1] சோழ,[2] பாண்டிய,[3] விசய நகர மன்னர்களால்[4] ஆட்சி செய்யப் பட்டுள்ளது. தொன்றுதொட்டு விளங்கும் நகரங்களுள் இந்நகரம் மிகப் பெரியதாகும். இந்நகர எல்லைக்குள் நாயன்மார்களின் தேவாரப் பாடல் பெற்ற சிவத்தலங்கள் ஐந்தும்[5] ஆழ்வார்களால் மங்களா சாசனம் பெற்ற திருப்பதிகள் பதினான்கும்[6] உள்ளன. இவையன்றி மற்றும் பல திருக்கோவில்கள் உள்ளன.

கோவில்கள் மக்களை நன்னிலைப் படுத்தவே உருவாக்கப் பட்டன. பழங்கால மக்கள் அச்ச உணர்வின் அடிப்படையிலேயே இறைவனை வணங்கத் தொடங்கியுள்ளனர். இறைவழிபாட்டுடன் ஐம்பூத வழிபாட்டையும் மக்கள் மேற்கொண்டிருந்தனர். இவ் வைம் பூத வழிபாட்டில் ஒளி வழிபாடு குறித்த செய்தியினைத் தொல்காப் பியத்தில் காணலாம். இதனைப் பின்வரும்,

**கொடிநிலை கந்தழி வள்ளி என்ற**
**வடு நீங்கு சிறப்பின் முதலன மூன்றும்**
**கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே**

என்ற தொல் காப்பியப் பாடலால் அறியலாம்.

இவ்வாறு இயற்கையை வணங்கும் வழிபாட்டு முறை பின்னர், மனிதனது கலை உணர்வால் வளர்ந்து வளம் பெற்றது. அதன்

பலனாகக் கோவில்கள் முதலில் உருவாகி அங்கு மூர்த்திகள் நிறுவப் பட்டன. இவ்வாறு உருவாகிய கோவில்களுள் சிவமூர்த்தியின் வழி பாட்டுத் தலம் அமைந்த இடங்களுள் ஒன்று காஞ்சிபுரம்.

காஞ்சியில் விளங்கும் சிறப்புடைக் கோவில்களின் எண்ணிக்கை எண்பத்து இரண்டாகும். அவற்றைச் சைவக் கோவில்கள், வைணவக் கோவில்கள் என இரண்டாகப் பிரிக்கலாம். சைவக் கோவில்களுள் ஒன்றே ஏகாம்பர நாதர் கோவிலாகும். சைவர்களிடையே கோவில் என்ற சொல் காஞ்சிபுரத்தில் உள்ள ஏகாம்பர நாதர் கோவிலையே குறிக்கும்.

## ஆய்வின் நோக்கம்

பண்டைக் காலந்தொட்டு இன்று வரையில் கோவில்களைச் சார்ந்தே பெரும்பாலும் கவிதை, காவியம், இன்னிசை, நாட்டியம், சித்திரம், சிற்பம் என்னும் அருங்கலைகள் எல்லாம் வளர்ந்து வரு கின்றன. கலை வளர்ச்சிக்கு மட்டுமல்லாமல், சமுதாய வளர்ச்சிக்கு உதவும் நிலையங்களாகவும் கோவில்கள் விளங்குகின்றன. இக் கோவில்களில் நடைபெற்ற கல்விக் கூடங்கள், ஆதுலர் (வறியோர்) சாலைகள் போன்றவை சிறப்புடையன. அத்துடன் வரலாற்றை அறிந்து கொள்ளக் கோவில்களில் உள்ள கல்வெட்டுகளும் பெரிதும் துணை புரிகின்றன. இம்முறையில் தமிழகத்திலுள்ள பெரிய கோவில் களுள் ஒன்றான ஏகாம்பர நாதர் கோவில் தமிழக வரலாற்றில் பெறும் இடத்தையும் பண்டைய கலைச் சிறப்புகளையும் பண்பாட்டினையும் அறிய இக்கோவில் எந்த அளவிற்கு உறுதுணையாய் விளங்குகிறது என்பதனை ஆய்ந்தறிவதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

## ஆய்வு மேற்கொண்ட முறை

காஞ்சிபுரம் ஏகாம்பர நாதர் கோவில் பற்றிய இவ்வாய்வு கள ஆய்வில் திரட்டப்பட்ட செய்திகளின் அடிப்படையில் மேற்கொள்ளப் பட்டது. காஞ்சிபுரம், ஆய்வாளரின் சொந்த ஊராகும். எனவே ஆய் வாளர் அக்கோவிலுக்குப் பன்முறை நேரில் சென்று கோவிலுடைய அமைப்பு முறை, கோவிலிலுள்ள கல்வெட்டுகள், கலைச் சிறப்புகள் முதலியவற்றைக் கண்டறிந்தார். இத்துடன் வழிபாட்டு முறை, விழாக்கள் முதலிய செய்திகளை அக்கோவில் குருக்கள் வாயிலாக அறிந்தார். நிர்வாகம், அதன் உடைமைகள் பற்றிய செய்திகளை அறங்காவலர்கள், செயல் அலுவலர், தக்கார் ஆகியவர்களுடனும் கோவிலுடன் தொடர்புடைய பிறரிடமும் நேரில் கேட்டறிந்து செய்தி கள் சேகரிக்கப்பட்டன.

கோவிலிலுள்ள ஆவணங்களிலிருந்து வேண்டிய குறிப்புகள் குறித்துக் கொள்ளப்பட்டன. இவற்றுடன் இக்கோவிலின் தொன்மை, பெருமை, சிறப்பு ஆகியன இலக்கியங்கள், புராணங்கள், கல்வெட்டு நூல்கள் வாயிலாக அறியப்பட்டன.

இவ்வாய்வேடு ஐந்து இயல்களை உடையது. அவை,

1. கோவிலின் தோற்றமும் வளர்ச்சியும்
2. கோவிலின் அமைப்பும் சிற்பங்களும் ஓவியங்களும்
3. கோவிலின் உடைமைகளும் ஆட்சி முறையும்
4. நாள் வழிபாடும் திருவிழாக்களும்
5. கோவிலும் சமுதாயமும்

என்பனவாம்.

“காஞ்சிபுரம் ஏகாம்பர நாதர் கோவிலின் தோற்றமும் வளர்ச்சியும்” என்னும் முதல் இயலில், காஞ்சிபுரத்தின் வரலாற்றுச் சிறப்பு, இந்நகரின் பெயர்க்காரணம், இலக்கியங்கள் வாயிலாக ஏகாம்பர நாதர் பற்றியறிய உதவும் செய்திகள் முதலியன கூறப்பட்டுள்ளன.

இக்கோவிலின் வளர்ச்சியினைத் தெளிவு குறித்துக் கால அடிப் படையில் சங்க காலம், முற்காலப் பல்லவர் காலம், பிற்காலப் பல்ல வர் காலம், சோழர் காலம், பாண்டியர் காலம், விசய நகர அரசர்கள் காலம், ஆங்கிலேயர் காலம் முதற்கொண்டு இக்காலம் வரை எனப் பகுத்துக் கூறப்பட்டுள்ளன.

“கோவிலின் அமைப்பும் சிற்பங்களும் ஓவியங்களும்” என்னும் இரண்டாம் இயலில் கோவிலின் கட்டட அமைப்பு, கோவிலின் கட்ட டங்கள் அமைந்திருக்கும் வகையும் அவை சுட்டும் தத்துவங்களும் விளக்கப்படுகின்றன. அத்துடன் கோபுரம், இராச கோபுரம், திருச் சுற்று, பலிபீடம், கொடிமரம், அதிகார நந்தி, கருவறை, அர்த்த மண்டபம், மகாமண்டபம், பரமான்மாவின் தத்துவம் முதலிய பொதுச் செய்திகளும், சிறப்பாக இக்கோவிலுக்குரிய பதினாறு கால் மண்ட பம், நான்கு கால் மண்டபம், விநாயகர், நந்தவனம், கம்பைத் தீர்த்தம், ஆயிரக்கால் மண்டபம், விகட சக்கர விநாயகர், சிவகங்கைத் தீர்த் தம், கரிகால் சோழன், பவித்திர மண்டபம், வாகன மண்டபம், அடிய வர் மூவர், கருவறை, வெள்ளக் கம்பர், கள்ளக் கம்பர், மத்தள மாதேசு வரர், மார்க்கண்டேசுவரர், அகத்தீசுவரர், நிலாத்துண்டப் பெருமாள், நல்ல கம்பர், சூரியன், பிரளயங்காத்த பத்தினி, சபாநாயகர் மண்ட பம், பஞ்சமுக விநாயகர், மாவடி, ஆயிரத்தெட்டு லிங்கம், ஏலவார் குழலி, மாவடி முருகர், பள்ளியறை, அம்பலவாணர் சந்நிதி, பைரவர்,

அறுமுகர், யாக சாலை, நவக்கிரகம், இடபேசுவரர், பெரிய நந்தி, வாலீசுவரர், திருக்கச்சி மயானேசுவரர், சிவசிவ ஒலி மண்டபம், சரபேச மண்டபம், சுப்பிரமணியர், மதில் ஆகியவற்றின் விளக்கங்களும் தரப்பட்டுள்ளன.

இக்கோவில் கட்டடத்தில் காணப்படும் சிற்பங்களும் ஓவியங்களும் என்னும் பகுதியில் சங்க காலம், பல்லவர் காலம், சோழர் காலம், விசய நகர மன்னர் காலம் என்று கால அடிப்படையில் சிற்பங்களும் ஓவியங்களும் நோக்கப்பட்டு விளக்கங்கள் தரப்படுகின்றன.

'கோவிலின் உடைமைகளும் ஆட்சி முறையும்' என்னும் மூன்றாம் இயலில் கோவிலுக்குரிய உடைமைகளான பயிரிடும் நிலங்கள், அவை உள்ள ஊர்கள், நிலத்தின் பரப்பு, அவற்றின் வாயிலாக வரும் வருவாய் முதலியனவும், கோவிலுக்குரிய வீடுகள், கட்டடங்கள் ஆகியவை உள்ள இடம், அளவு, அவற்றைத் தற்போது பயன்படுத்துவோர், அவற்றின் வாயிலாக வரும் வருவாய் முதலிய செய்திகளும் முதலிற் கூறப்பட்டுள்ளன. அதைத் தொடர்ந்து கோவிலுக்குரிய அணிகலன்கள், பொன், வெள்ளி, முலாம் பூசிய அணிகள் என்ற பாகுபாட்டின் அடிப்படையில் பகுத்துக் காட்டப்படுகின்றன.

கோவிலின் ஆட்சி முறை பற்றிக் கூறுங்கால் ஆங்கிலேயர் காலத்திற்கு முந்திய கோவிலின் நிர்வாகம், கோவிலுக்குரிய வேலைகளைச் செய்யும் பணியாட்கள், கர்ணத்தான், பண்டாரத்தார் ஆகியோர் பணிகள், கோவிலின் கட்டுப்பாடு, அறங்காவலர் கடமைகள், தக்கார், செயல் அலுவலர் ஆகியோர் கடமைகள் ஆகியன விளக்கப்பட்டுள்ளன.

"நாள் வழிபாடும் திருவிழாக்களும்" என்னும் நான்காம் இயலில் பண்டைக்கால வழிபாட்டுமுறை, வழிபாடு என்னும் சொல்லின் பொருள் விளக்கம், வழிபாட்டின் அவசியம், வழிபடும் முறை, திருவேகம்பர் கோவிலின் வழிபாட்டுக் காலங்கள் ஆகியன விளக்கப்படுகின்றன. அடுத்து ஏகாம்பரநாதரை வழிபட்டுப் பேறு பெற்றவர்கள் உமையம்மை, உருத்திரர், பிரமன், திருமால், வாலி, சமய குரவர்கள், நால்வர், பட்டினத்தடிகள், இரட்டைப் புலவர்கள் வழிபாட்டுச் சிறப்பு ஆகியன இலக்கிய ஆதாரங்களுடன் எடுத்துக் காட்டப்படுகின்றன.

கோவிலில் தொடர்ந்து நடைபெறும் சித்திரைத் திருவிழா, பாலூர் திருவிழா, தெப்பத் திருவிழா, ஆனித் திருமஞ்சனம், ஆடிப் பூர விழா, பவித்திர விழா, விநாயகர் திருவிழா, நவராத்திரி விழா, கார்த்திகை வி. க்கு, மாணிக்க வாசகர் விழா, திருவாதிரை விழா,

பொங்கல் விழா, தவன விழா, பங்குனி உத்திரப் பெருவிழா பதினான்கு நாட்கள் கொண்டாடப்படுவதற்குரிய வரலாற்றுக் காரணங்கள், அவற்றின் சிறப்பு ஆகியன நோக்கப்படுகின்றன.

'கோவிலும் சமுதாயமும்' என்னும் ஐந்தாம் இயலில் ஏகாம்பரநாதர் கோவிலுக்கும் அக்காலத்துச் சமுதாயம், பொருளாதாரம், கைத்தொழில் ஆகியவற்றிற்குமிடையே உள்ள தொடர்பு விளக்கப்பட்டுள்ளது. சிறப்பாகப் பிரமதேயம், சதுர்வேதி மங்கலம், முதலியன பற்றியும் அரசர், அந்தணர், மன்றாடியார், தேவரடியார், கலைஞர் ஆகியோர் பணிகள் பற்றியும் கூறப்பட்டுள்ளன.

அடுத்து இக்கோவில் ஏழைகளுக்குப் புகலிடமாவது பற்றியும் வலங்கை இடங்கைக் குலத்தினர் விவசாயிகளுக்கும், வாணிபத்திற்கும், கைத் தொழிலுக்கும், கோவிலுக்கும் எவ்வாறு உதவி செய்தனர் என்பது பற்றியும் நோக்கப்படுகின்றன. இவற்றினைத் தொடர்ந்து கோவிலின் நிலங்களும் தோட்டங்களும் மக்களால் எவ்வாறு பயிர் செய்யப்பட்டன, அவற்றால் மக்கள் அடைந்த பயன்கள் ஆகியன விளக்கப்பட்டுள்ளன.

முற்காலத்தில் கோவிலில் பயன்படுத்தப்பட்ட அளவு முறைகள் வழக்கத்திலிருந்த நாணயங்கள், மக்கள் சமயப் பூசல்களின்றி விழாக்களைக் கொண்டாடியதன் மூலம் ஏற்படும் நன்மைகள் ஆகியன பற்றிக் கூறப்படுகின்றன.

நிறைவுரையில் ஐந்து இயல்களிலும் விளக்கப்பட்ட கருத்துகள் தொகுத்தளிக்கப்பட்டுள்ளன.

**அடிக்குறிப்புகள்**

1. பல்லவர் (கி.பி. 610-630) முதலாம் மகேந்திர வர்மன்.
2. சோழர் (கி.பி. 1178-1216) மூன்றாம் குலோத்துங்கன்.
3. பாண்டியர் (கி.பி. 1253) ஜடவர்ம சுந்தர பாண்டியன்
4. விசய நகர அரசர் (கி.பி. 1509-1529) கிருட்டின தேவராயர்.
5. 1) திருவேகம்பம்
   2) திருநெறிக்காரைக்காடு
   3) திருமேற்றளி
   4) திருவோண காந்தன்றளி
   5) திரு அனேகதங்காவதம்.
6. 1. திரு. அட்டபுயகரம் (அட்டபுசம்)

2. திரு. அத்தியூர்.
3. திரு வூரகம் (உலகளந்தப் பெருமாள் கோவில்)
4. திருக் கள்வனூர் (இந்தச் சந்நிதி காஞ்சிபுரம் காமாட்சி யம்மன் திருக்கோவிலுக்குள் இருக்கிறது)
5. திருக்காரகம் (உலகளந்தப் பெருமாள் கோவில் தென் திருச் சுற்றில் உள்ளது)
6. திருக்கார் வானம் (உலகளந்த பெருமாள் கோவிலுக்குள் உள்ளது)
7. திருத்தண்கா (விளக்கொளிப் பெருமாள் திருக்கோவில்)
8. திருநிலாத் துண்டம் (இஃது ஏகாம்பர நாதர் கோவிலில் உள்ளது)
9. திருநீரகம் (உலகளந்த பெருமாள் கோவிலில் உள்ளது)
10. திருப்பரமேச்சுர விண்ணகரம் (வைகுண்டப் பெருமாள் கோவில்)
11. திருப்பவளவண்ணம் (பவள வண்ணர் கோவில்)
12. திருப் பாடகம் (பாண்டவத் தூதர் கோவில்)
13. திரு வெஃகா (யதோக்தகாரி கோவில்)
14. திரு வேளுக்கை (முகுந்த நாயகர் கோவில்)

# ஏகாம்பரநாதர் கோவிலின் தோற்றமும் வளர்ச்சியும்

இந்திய நாட்டின் இருபெரும் பிரிவுகள் வட இந்தியா, தென் இந்தியா என்பன. இவ்விரு பிரிவுகளுள் திருக்கோவில்களை அதிகமாகப் பெற்றிருப்பது தென் இந்தியாவேயாகும். இத்தென்னிந்தியாவில் சிறப்புற்று விளக்குவது தொண்டைநாடு. இதனை,

மாதவம் செய்தது தொண்டை நன்னாடு[1]

என்னும் சேக்கிழார் வாக்கால் அறியலாம்.

தொண்டை நாடென்பது தற்காலத்தில் செங்கல்பட்டு அண்ணா, திருவண்ணாமலை சம்புவராயர், வட ஆற்காடு அம்பேத்கார், தென் ஆற்காடு ஆகிய மாவட்டங்களைக் கொண்டது. இந்நாடு சான்றோர்களை மிகுதியாக உடையதாயிருந்தது. இதனைத்

தொண்டை நன்னாடு சான்றோருடைத்து

என்னும் ஔவையார் வாக்கால் அறியலாம்.

### காஞ்சிபுரத்தின் சிறப்பு

தொண்டை நாட்டின் இரு கண்கள் எனப்போற்றப்படும் பெருமை வாய்ந்த தலங்கள் இரண்டு. அவை காஞ்சிபுரம், திருத்தணி என்பன. இவ்விரண்டினுள்ளும் முதற்கண் வைத்துப் போற்றப்படும் பெருமையுடையது காஞ்சிபுரம்.

உச்சிக்கு மிஞ்சின நேரமுமில்லை<br>
கச்சிக்கு மிஞ்சின பதியுமில்லை[2]

என்னும் பழமொழியினால் காஞ்சிபுரத்தின் சிறப்பை அறியலாம்.

தொண்டை நாட்டில் இருபத்து நான்கு பிரிவுகள்[3] இருந்தன. ஒவ்வொரு பிரிவும் கோட்டம் எனப்பட்டது. தொண்டை மண்டலத்து

இருபத்து நான்கு கோட்டங்களுள் ஒன்று எயிற்கோட்டம். காஞ்சிபுரம் எயிற்கோட்டத்தில் உள்ளது. "எயில்" என்ற சொல்லுக்குக் கோட்டை என்பது பொருள்.

காஞ்சியின் எயில், நெடுந் தொலைவிலிருந்து காண்பவர்களுக்குத் தோகை மயில் போல இருந்தது என்பர். நகரின் இருபுறமும் இருந்த ஏரிகள், மயிலின் இறகு போலவும் அடர்த்தியான காடு, மயிலின் விரிந்த தோகையைப் போலவும் கோட்டையின் மதிற்சுவர், மயிலின் வயிறு போலவும் கடல் போலும் கருநிறத்தினையுடைய திருமாலின் அத்தியூர், அதன் வாய் போலவும் தோற்றமளித்தன என்று தண்டியலங்காரம்[4] கூறியுள்ளமையினின்று உணரலாம்.

அத்தியூர் என்னும் பகுதி இக்காலத்தில் சிறிய காஞ்சிபுரம் என்று வழங்கப்படுகிறது. காஞ்சிபுரம், காஞ்சிபுரம் மாவட்டத்தில் அதன் தலைநகராய் விளங்குகிறது.

இந்நகரைச் சுற்றி வடகிழக்கில் திருப்பெரும்புதூர் வட்டமும், தெற்கில் உத்திரமேரூர் வட்டமும், கிழக்கில் செங்கல்பட்டு வட்டமும் மேற்கில் திருவண்ணாமலை மாவட்டமும் உள்ளன.

காஞ்சிபுரம் நாட்டு வரைபடத்தில் 70°.45' நில நேர்க்கோட்டுக்கும், 12°.50' நிலநிரைக் கோட்டுக்கும் இடையில், கடல் மட்டத்திற்கு மேல் 275அடி (82½ மீட்டர்) உயரத்தில் உள்ளது. இந்நகரம் பாலாற்றின் வடகரையில் அமைந்துள்ளது. இந்நகரின் தென்திசையில் வேகவதி ஆறு உள்ளது. இந்நகரம் சென்னைக்குத் தென்மேற்கே 77 கிலோமீட்டர் தொலைவில் உள்ளது.

### வரலாற்றுச் சிறப்பு

காஞ்சிபுரம் மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகிய முச்சிறப்புக்களையும் பெற்றுள்ளது. கி.மு.150-இல் வாழ்ந்த வடமொழி இலக்கண உரையாசிரியரான பதஞ்சலி காலத்தில், காஞ்சிபுரம் புகழ் மிக்க நகராய் இருந்துள்ளது.[5]

கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்தவனும் வடமொழி இலக்கியத்தில் சிறந்த கவிஞனுமாகிய காளிதாசன்,

பூவெனப் படுவது பொறிவாழ் பூவே

எனத் தமிழர் கூறும் முறையிலேயே,

நகரெனப் படுவது காஞ்சி நகரே

(நகரேஷு காஞ்சி) என்று காஞ்சியைச் சிறப்பித்துக் கூறியுள்ளான். இதனால் வடமொழி வாணர் காஞ்சிக்கு அக்காலத்திலேயே கொடுத்த உயர்வினை அறியலாம்.

இந்திய நாட்டின் தெய்வத்தன்மை வாய்ந்த நகரங்கள் என வட மொழி வாணர் வகுத்தவை ஏழு. அவை அயோத்தி, வட மதுரை, மாயா (அரித்துவார்), காசி, காஞ்சி, அவந்தி, துவாரகை என்பன. இவற்றுள் காசி, காஞ்சி, அவந்தி நீங்கலாக மற்றைய நான்கும் புராணப் புகழ் உடையவையேயன்றி, வரலாற்றுப் புகழ் உடையவை அல்ல. இம்மூன்றனுள்ளும் கூட இப்பாகுபாடு ஏற்பட்ட காலத்தில், அவந்தி சிறிது புகழ் அடைந்திருக்கிறது. ஆனால் அவந்தி வரலாற்றில் நிலைத்த புகழினைப் பெறவில்லை. எனவே ஏழு நகரங்களுள் மிகுந்த வரலாற்றுப் புகழ் உடையவை காஞ்சியும் காசியுமே என்பர்.

காஞ்சிபுரத்தில் உள்ள கோயில்கள், சிறிய நகரங்களைப் போன்றே அமைந்திருந்துள்ளன. அவை கலைக்கழகங்கள், நூல் நிலையங்கள் ஆகியவற்றின் இருப்பிடமாக விளங்கியுள்ளன. காசி, என்றும் காஞ்சியைப் போல எந்த அரசுக்கும் தலைநகராய் இருந்ததில்லை. மேலும் காஞ்சி பிற்காலத்தில் கருநாடகப் போர்களில் ஆங்கிலேயர்களின் காவற்கோட்டையாக விளங்கியுள்ளது. இவற்றால் காசியினும் காஞ்சியே வரலாற்றுச் சிறப்புடையதெனலாம்.

கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த கதம்ப நாட்டு மன்னன் மயூரசன்மன் காஞ்சியிலிருந்த "கடிகா" என்ற கல்லூரியில் வடமொழி பயில வந்திருந்தான். இக் கல்லூரியில் அந்தணர்களே ஆசிரியர்களாக இருந்தனர். இங்கு அரசர், அந்தணர் ஆகியோர்களுக்கு மட்டுமே கல்வி கற்பிக்கப்பட்டது[6] என்பதனைக் காசாக்குடி, வேலூர் பாளையம் கல்வெட்டுகள் விளக்குகின்றன.[7] காஞ்சியிலுள்ள கயிலாசநாதர் கோவிலில் சில பகுதிகள் இக் கடிகைக்காகவே கட்டப்பட்டன. திருநாவுக்கரசர்,

கல்வியில் கரையிலாத காஞ்சிமா நகரம்

என்று பாடியுள்ளதும் இங்கு நினைவு கூரத்தக்கதாகும்.

## காஞ்சிபுரத்தின் பெயர்க் காரணம்

இந்நகரம் சிவகாஞ்சி, விட்டுணுகாஞ்சி, புத்தகாஞ்சி, ஜைன காஞ்சி என நான்கு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. சிவகாஞ்சி என்பது பெரிய காஞ்சிபுரத்தைச் சார்ந்ததாகவும், விட்டுணுகாஞ்சி என்பது சிறிய காஞ்சிபுரத்தைச் சார்ந்ததாகவும் இன்று விளங்குகின்றன. இவ்விரண்டும் காஞ்சி நகர எல்லைக்குட்பட்டு உள்ளன.

தற்காலத்தில் பௌத்த காஞ்சிக்குரிய இடத்தைக் குறிப்பாகச் சுட்டிக்காட்ட இயலவில்லை. அப்பகுதி பெரிய காஞ்சிபுரத்திலேயே அடங்கி விடுகிறது.

காஞ்சியை அடுத்துள்ள திருப்பருத்திக்குன்றம் ஜைன காஞ்சியின் அடையாளமாக உள்ளது. அவ்விடத்தில் ஜைனர்களின் கோவில் உள்ளது. அக்கோவிலைச் சுற்றி ஜைனர்களின் இல்லங்கள் இன்றும் உள்ளன.

காஞ்சிபுரம் புண்ணிய யாத்திரை மேற்கொள்பவர்களின் முக்கியத்தலமாக விளங்குகிறது. இது காஞ்சிபுரம் மாவட்டத்தின் தலைநகராய் உள்ளது.

காஞ்சிபுரத்திற்குக் காஞ்சீ[9], காஞ்சி[10], கச்சி[11], கச்சிப்பேடு[12] என்ற பெயர்களும் உள்ளன. இந்நகரினை முப்புவனசாரம்[13], காஞ்சி[14], காமபீடம்[15], தபோமயம்[16], மும்மூர்த்திவாசம்[17], துண்டிரபுரம்[18], இலயசித்து[19], பிரமபுரம்[20], விண்டுபுரம்[21], சிவபுரம்[22], சருவசித்தி கரம்[23], கன்னிகாப்பு[24] என்ற பன்னிரு பெயர்களால் காஞ்சிப் புராணத்தில் கச்சியப்ப முனிவர் சுட்டிக்காட்டியுள்ளார். இந்நாளில் காஞ்சிபுரம்[25] என்ற பெயரே அரசு ஆவணங்களில் காணப்படுகின்றது.

கச்சி என்பது காஞ்சிபுரத்தின் மரூஉ ஆகும். காஞ்சி என்பது கஞ்சி என வடமொழியில் திரிந்து வழங்கிப் பின்னர், கஞ்சி என்பது கச்சி எனத்திரிந்தது என்பர்.[26]

காஞ்சி என்பது மகளிர் இடையில் அணியும் மேகலையாம்.[27] நிலமகள் இடையிலணியும் ஆபரணம் போல காஞ்சி இவ்வுலகில் அமைந்துள்ளதால் இப்பெயர் பெற்றதென்பர்.

காஞ்சி என்னும் சொல்லுக்கு நிலையாமை என்ற பொருளும் உண்டு. மக்கள் வீடு பேறு பெறுவதற்காகப் பல்வேறு நிலையாமைக் கருத்துகளைச் சொல்லுதல், காஞ்சித் திணையாகும். அவ்வாறு சொல்லும் சான்றாண்மையோர் பலர் வாழ்ந்ததால் காஞ்சி என்ற பெயர் பெற்ற தென்பர்.[28]

காஞ்சிபுரத்தை, க - பிரமன்; அஞ்சித்தல்-பூசித்தல், புரம்-நகரம் எனப் பிரித்து நோக்கில், பிரமனால் பூசிக்கப்பட்ட நகரம் காஞ்சி புரமாயிற்றென்பர் சிலர்.

இவ்வூர் விட்டுணு பூசித்தமையால்[29] விண்டுபுரம் என்றும், இங்குள்ள மக்களுக்குக் கலியுகத்திலும் கலியால் துன்பம் நேரிடா தாகையால் கலிசித்து என்றும் வழங்கப்படுகின்றது.

ஊழிக்கால முடிவில் திருக்கூத்து இயற்றும் இடமாகையால் இலயசித்து எனவும், உயிரினங்களுக்கு வரும் இடையூறுகளை அகற்றிச் சகல சித்திகளையும் வழங்குதலால், சகலசித்திபுரம் எனவும் பெயர் பெற்றது.

உமையம்மையார் காஞ்சியில் மெய்த்தவம் செய்ததால் தபோமயம் எனவும், காமாட்சி முப்பத்திரண்டு அறம்[30] செய்து காத்தமையால் "கன்னிகாப்பு" என்றும் பெயர் பெற்றது என்பர்.

சிவபிரான் உமாதேவியின் வழிபாட்டை ஏற்றுக் கொண்டு, காட்சி கொடுத்ததனால் சிவபுரம்[31] எனப் பெயர் பெற்றது என்பர்.

காஞ்சி, சக்தி பீடங்களில் முதலிடம் பெறுவதால், 'ஆதிபீடம்' எனவும், பிரம்மா யாகம் செய்ததனால் 'பிரமபுரம்'[32] எனவும் பெயர் பெற்றது என்பர்.

காஞ்சி என்ற மரம் (பூவரசு மரம்), காஞ்சிபுரத்தில் அகலமாயும் பரந்தும் காணப்படுகிறது. எனவே அதன் நிழல் சூரியன் உதயமாகும் போதும், மேற்கடலில் விழும் போதும், அதனடியிலேயே விழுந்து விடுகிறது. இம்மரத்தின் பெருமையால் காஞ்சிபுரம் 'தன் நிழல் பிரியாத காஞ்சி' எனப் பெயர் பெற்றது. இதனைக் கச்சியப்ப சிவாசாரியார், காஞ்சிமாநகருக்குத்

தன் நிழல் பிரியாத[33]

என்ற அடைகொடுத்துக் கூறியுள்ளமையினால் அறியலாம்.

'புரம்'[34] என்னும் சொல்லுக்கு ஊர் என்பது பொருளாகிறது. எனவே காஞ்சி மரத்தையுடைய ஊர் காஞ்சிபுரம் ஆகிறது என்பது சிறப்புக்குரியதும் இயற்கையோடு இயைந்த பெயராகவும் விளங்குகிறது.

மேற்கூறியவாறு காஞ்சிக்குப் பல பெயர்கள் இருப்பினும், காஞ்சி என்ற மரம் இருந்த காரணத்தால், 'காஞ்சிபுரம்' எனக் கூறப்படுவதே.மிகவும் பொருத்தமுடையதாகிறது எனலாம்.

## காஞ்சி ஏகாம்பரநாதர் பற்றியறிய உதவும் இலக்கியங்கள்

காஞ்சிபுரத்தில் அமைந்துள்ள ஏகாம்பரநாதர் கோவிலைப் பற்றி அறிய இலக்கியச் சான்றுகளும் கல்வெட்டுச் சான்றுகளும் பிற செய்திகளும் துணை புரிகின்றன. முதலில் இக்கோவில் குறித்துக் கிடைக்கும் இலக்கியச் சான்றுகள் நோக்கப்படுகின்றன.

காஞ்சிமா நகரிலுள்ள ஏகாம்பரநாதரைப் பற்றிச் சிறப்பாக அறிய மூவர் தேவாரம், திருவாசகம், பெரிய புராணம், கந்தபுராணம், திருப்புகழ், திருவேகம்பமுடையார் திருவந்தாதி, கச்சிக் கலம்பகம், தனிப்பாடல் திரட்டு ஆகிய நூல்கள் உதவுகின்றன.

பொது வழக்கில் ஏகாம்பரநாதர் கோவில் என வழங்கி வந்தாலும், இக்கோவிலைத் "திருக்கச்சியேகம்பம்" என்றே நூல்கள் குறிப்பிடுகின்றன. இது கச்சியம்பதியில் உள்ளதாகையால் கச்சியே கம்பம் என்றதுடன் 'திரு' என்ற அடைமொழி சேர்த்து 'திருக்கச்சியே கம்பம்' என வழங்கப்படுகின்றது.

இக்கச்சியேகம்பத்தின் தோற்றத்தினையும் வளர்ச்சியினையும் காண முற்படுவோம்.

ஓர் ஊரின் நடுவில் அமைந்துள்ள சிவன் கோவிலைத் திருக்கோவில் அல்லது ஸ்ரீ கோவில் என்பர். நடுநாயகமாக உள்ள கோவிலை உள்ளடக்கி, ஊரைச் சுற்றிலும் பல சிறு கோவில்கள் அமைந்திருக்குமானால் அச்சிறு கோவில்களைத் திருமுற்றமென்பர்.

கோவில்கள், கடலோரங்களிலும் குன்றுகளிலும் மற்ற விடங்களிலும் பொதுவாக ஏதாவதொரு தல விருட்சத்துடன் அமைக்கப்பட்டுள்ளன. இதன் காரணமாக அக்கோவிலின் மூலவருக்குப் பெயர் ஏற்படுவதுண்டு. இதுபோன்றே, காஞ்சிபுரத்தில் ஒரு மாமரத்தின் அடியில் ஏகாம்பரநாதர் எழுந்தருளியுள்ளமையால், இக்கோவிலின் இறைவர் ஏகாம்பரர் எனப்படுகின்றார். அஃதாவது ஏகம்[35] என்றால் ஒன்று. ஆம்ரம்[36] என்றால் மாமரம்.

ஏகம்+ஆம்ரம் - ஏகாம்ரம் என்பது வடமொழி வழக்கு.

அதனைத் தமிழில் ஏகாம்பரம் எனப் பகர உயிர்மெய் இடையிட்டு வழங்குவது தமிழ்மொழி வழக்காகிறது.

தமிழகத்தில் தத்துவங்களின் பிரதிபிம்பமாகச் சில கோவில்கள் கட்டப்பட்டுள்ளதைக் காண்கின்றோம். நிலம், நீர், தீ, வளி, வான் என்ற ஐம்பூதங்களையும் முறையே பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என வடமொழியிற் கூறுவர். இவற்றினால் ஆன இலிங்கங்களைக் கொண்டு விளங்கிய ஐம்பெருங்கோவில்கள் தென்னகத்தில் காணப்படுகின்றன.

காஞ்சிபுரம் பிருதிவித் தலமாகவும்,

திருவானைக்கா நீர்த் தலமாகவும்,

திருவண்ணாமலை நெருப்புத் தலமாகவும்,

திருக்காளத்தி வாயுத் தலமாகவும்,

திருத்தில்லை ஆகாயத் தலமாகவும் விளங்குகின்றன.

இவற்றுள் பிருதிவித் (மணல்) தலமாக விளங்குவது காஞ்சிபுரத்திலுள்ள ஏகாம்பரநாதர் கோவிலாகும். இக்கோவிலின் தோற்றமும் வளர்ச்சியும் பல்வேறு காலங்களில் எவ்விதம் அமைந்துள்ளன என்று காண்பதே இவ்வியலின் நோக்கமாகும்.

தெளிவு குறித்து ஏழு காலப்பகுதிகளாக இவ்வியல் பிரிக்கப் பட்டுள்ளது. அவை சங்க காலம், முற்காலப் பல்லவர் காலம், பிற் காலப் பல்லவர் காலம், சோழர் காலம், பாண்டியர் காலம், விசய நகர அரசர்கள் காலம், ஆங்கிலேயர் காலம் முதற்கொண்டு இக்காலம் வரை என்பன.

## சங்க காலம் (கி.பி. 300 ஆண்டு வரை)

சங்க காலத்தில் இலக்கியங்களின் வாயிலாகக் காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவிலைப் பற்றி அறிய இயலவில்லை. எனினும் ஆங்காங்குக் காணப்படும் சில குறிப்புகளைத் தொடர்புபடுத்தி இக் கோயில் பற்றிய சில செய்திகள் இங்கு ஒன்று கூட்டப்படுகின்றன.

இலிங்கம் என்ற சொல் பண்டைக்காலத்தில் உள்ள நூல்களில் இல்லை. ஆனால் கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் குடிமியான் மலை, களத்தூர் ஆகிய ஊர்களில் இலிங்கம் இருந்தனவாக அறியப் படுகிறது.[37]

இலிங்கம் மனோ வாக்குகளுக்கும், ஐம்புலன்களுக்கும் எட்டா தது என்றும் 'அருட்குறி'[38] என்றும் கூறுவர். இவ் இலிங்கத்தின் பிண்டிகையே சக்தியுருவாகும். இலிங்கம் சிவவுருவாகும். எனவே இலிங்கம், ஞானசக்தி வடிவம் என்றும் பீடம், கிரியா சக்தி வடிவம் என்றும் கொள்ளலாம்.

இலிங்கத்தில் சலம், அசலம் என இரு பிரிவு உண்டு. சலப் பிரிவைச் சார்ந்த இலிங்கங்களை வீடுகளில் வைத்து மக்கள் பூசிப் பர். அசலப் பிரிவைச் சார்ந்த இலிங்கங்களை ஆலயங்களில் வைத் துப் பூசிப்பர்.[39]

அசல இலிங்கம் ஐந்து வகைப்படும். அவை ஸ்திர லிங்கம், தைவிகம், காணபம், ஆரிஷம், மானிஷ்யம் என்பன. ஸ்திர லிங்கம் என்பது தானே உண்டானது. இதைச் சுயம்பு லிங்கமென்பர். காஞ்சி புரம் ஏகாம்பரநாதர் கோவிலில் உள்ள இலிங்கம் தானே தோன்றிய தனால் அதனைச் சுயம்பு லிங்கமெனலாம்.

தைவிகம் என்பது தேவர்களால் பூசிக்கப்பட்டது. காணபலிங்கம் என்பது விநாயகரால் பூசிக்கப்பட்டது. ஆரிஷலிங்கம் என்பது ரிஷி களால் உண்டாக்கப்பட்டது. மானுஷ்ய லிங்கம் என்பது மனிதரால் தோற்றுவிக்கப்பட்டது என்பர். சங்க காலத்தில் இலிங்க வழிபாடு இருந்ததாக முன்னரே குறிப்பிடப்பட்டிருக்கிறது.[40]

சங்க காலத்தில் வாழ்ந்த கரிகால் சோழன் (கி.மு.1 அல்லது கி.பி.1 ஆம் நூற்றாண்டு) உருவச் சிலை எனக் கூறப்படும் ஒரு சிலை ஏகாம்பரநாதர் கோவிலில் பச்சையப்பர் மண்டபத்திற்கு எதிரில் தனியாக இருக்கிறது. இச்சிலைக்குப் பூசை வழிபாடுகள் நிகழ்த்தப் படுவதில்லை.

கரிகால் சோழன் காஞ்சிபுரத்தையும் தொண்டை நாட்டையும் உட்படுத்திக் கோதாவரி ஆறுவரை ஆண்டுள்ளான். இவன் இமய மலைக்குச் செல்லும் பொழுது, வேடன் ஒருவனால் காஞ்சிபுரத்தின் பெருமையை அறிந்து கொண்ட பின்னர், இந்நகரத்தை நான்கு காத[41] தூரத்திற்குச் சுற்றெல்லை உடையதாக விரிவுபடுத்தியுள்ளான். இங்குக் குன்று போல் மதிலை எழுப்பி, பல மக்களைக் குடியேற்றி யுள்ளான். இந்நிகழ்ச்சியைச் சேக்கிழார்,

என்று முள்ளவிந் நகர்கலி யுகத்தி
லிலங்கு வேற்கரி காற்பெரு வளத்தோன்
வன்றி றற்புலி யிமையமால் வரைவேல்
வைக்க வேகுவோன் றனக்கிதன் வளமை
சென்று வேடன்முன் கண்டுரை செய்யத்
திருந்து காதநான் குட்பட வகுத்துக்
குன்று போலுமா மதில்புடை போக்கிக்
குடியி ருத்தின கொள்கையின் விளங்கும்[42]

இக்கூற்றிலிருந்து கரிகாலன் காஞ்சி நகரைச் சீர்திருத்தினான் என்று புலப்படுகிறது. இந்த அரிய செயலினைக் கருத்திற்கொண்டு, இவ னது உருவச் சிலையைக் கோவிலில் வைத்திருக்கிறார்கள் என்று எண்ணப்படுகிறது.

மேலும் இக்கரிகாலன் காஞ்சிபுரத்தில் காமாட்சி அம்மையார் இடங் கொண்ட ஏகாம்பரநாதர் கோவில் இருப்பதை அறிந்துள்ளான். முதலில் காமாட்சி அம்மையை வணங்கியுள்ளான். அந்தக் கோவி லில் சாஸ்தாவின் திருவுருவம் உள்ளது. அத்திருவுருவத்தின் கையில் செண்டு என்ற சவுக்கு இருந்ததைக் கரிகாலன் பெற்றுக் கொண்டு வடக்கே சென்றுள்ளான். அவன் செல்லும் வழியில் தன்னை எதிர்த்த அரசர்களை வென்று, இமயமலையை அடைந்துள்ளான்.

அவ்விடத்தில் கரிகாலன் செண்டால் அடித்துத் தன் நாட்டின் புலிச் சின்னத்தைப் பொறித்துள்ளான். இச் செய்தி,

> கச்சி வளைக்கச்சி காமக்கோட்டங் காவல்
> மெச்சி யினிதிருக்கு மெய்ச்சாத்தன் – கைச்செண்டு
> கம்பக் களிற்றுக் கரிகாற் பெருவளத்தான்
> செம்பொற் கிரிதிரித்த செண்டு[43]

என்று சிலப்பதிகாரத்தில் அடியார்க்கு நல்லார் உரையில் மேற் கோளாகச் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

இக்கரிகாலனைச் சங்க காலத்திலேயே மாமூலனார், பரணர் என்ற ஆண்பாற் புலவர்களும் வெண்ணிக் குயத்தியார் என்ற பெண் பாற் புலவரும் பாடியுள்ளனர்.

சங்க காலப் புலவர்களுள் மாமூலனார் என்ற புலவர் ஒருவர் இருந்தார் எனத் தெரிய வருகிறது. மாமூலனார் என்ற பெயருக்கு மாமரத்தின் அடியில் உள்ளவர் என்பது பொருள். ஏகாம்பரநாதர் திருப் பெயர் மாமூலனார் என்பதே மாவடியான் என்று இன்றும் வழங்கப் படுகிறது. எனவே இப்பெயரினைப் பழங்காலப் புலவர் ஒருவர் வைத்துக்கொண்டு இருப்பதனால் அக்காலத்தில் ஏகாம்பரர் வழி பாட்டினை மக்கள் மேற்கொண்டிருந்தனர் என்பதை உய்த் துணரலாம்.

சங்க காலத்திலேயே (கி.பி. மூன்றாம் நூற்றாண்டில்) வாழ்ந் துள்ள கோச்செங்கணான் என்ற சோழ அரசன் மிகுந்த சிவ பக்தனாக விளங்கியுள்ளான். இவன் தமிழகத்தில் ஒவ்வொரு கோவிலுக்கும் ஒவ்வொரு மரத்தை உரிமையாக்கியுள்ளான்.[44] சான்றாகக் காஞ்சிக் கோவிலுக்கு மாமரத்தையும், தில்லைக் கோவிலுக்குத் தில்லை மரத் தையும், மதுரைக் கோவிலுக்குக் கடம்ப மரத்தையும், குற்றாலக் கோயிலுக்குக் குறும்பலாவையும் அமைத்துள்ளான்.

இவ்வாறு அமைக்கப்பட்ட கோவில்களே பிற்காலத்தில் வளர்ச் சியடைந்து, பெருங்கோவில்களாக விளங்கின எனலாம்.

சங்க காலத்தையடுத்த முற்காலப் பல்லவர் காலத்தில் கோவி லின் வளர்ச்சியை நோக்குவோம்.

## முற்காலப் பல்லவர் (கி.பி.300 – கி.பி.600)

பல்லவப் பேரரசைத் தமிழகத்தில் சிறப்பாக நிலை நாட்டியவர் மூன்றாம் சிம்மவர்மர் எனலாம். இவர் ஒரு சிவபக்தர். இவர் நாட்டு மக்களால் "ஐயடிகள் காடவர்கோன்" என்று பாராட்டப்பட்டார். இவர் பரமசிவனிடத்தில் கொண்ட அளவிலா அன்பே மேலானதெனக்

கொண்டதனால் அரசாட்சி என்பது துக்கத்திற்கு அடிப்படையானது என்று உணர்ந்தார். எனவே அரச பதவியைத் தன் மகன் சிம்ம விட்டுணு வுக்குக் கொடுத்து விட்டார்.

பின்னர் இவர் சிவத்தல யாத்திரை மேற்கொண்டு, திரு வெண்பா பாடித் துதித்து, முத்தி அடைந்தார். இவர் அருளிய பிரபந் தங்கள் ஷேத்திரத் திருவெண்பாவாகும். இந்நூல் பதினோராம் திரு முறையில் சேர்க்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு வெண்பாவிலும் ஒரு சிவன் கோவில் குறிக்கப்பட்டுள்ளது. இவ்வெண்பாக்கள் ஒவ் வொரு வரும் இறக்கும் நேரத்தில், துன்பங்கள் வருவதற்கு முன் "இன்ன தலத்து இறைவனை நினை" என்று மனதிற்கு அறிவுறுத் துவனவாக உள்ளன.

ஐயடிகள் காடவர்கோன் நாயனார் காஞ்சிபுரத்தில் உள்ள ஏகாம் பர நாதரைக் கண்டு,

> என் நெஞ்சே உன்னை இரந்தும் உரைக்கின்றேன்
> கன்னஞ்செய் வாயாகிற் காலத்தால் – வன்னெஞ்சேய்
> மாகம்பத் தானை உரித்தானை, வண்கச்சி
> ஏகம்பத் தானை இறைஞ்சு[45]

என்று உளமுருகிப் பாடியுள்ளார். இவருடைய உருவச் சிலை ஏகாம் பரநாதர் கோவிலில் உள்திருச்சுற்றில் முதலில் காணலாம்.

முற்காலப் பல்லவர் காலத்தில் வாழ்ந்திருந்த திருமூலர், திரு மந்திரம் என்னும் நூலை இயற்றியுள்ளார். இவர் தலயாத்திரையின் போது கேதாரம், நேபாளம் ஆகிய இடங்களில் உள்ள கோயில்களுக் குச் சென்று இறைவனை வணங்கினார். பின்னர் காஞ்சியில் இருந்த யோக முனிவர்களுடன் கலந்துரையாடியதோடு ஏகாம்பர நாதரையும் வணங்கியுள்ளார்.

இக்காலத்திலேயே சாக்கிய நாயனார் என்ற பௌத்த மதத்தைச் சார்ந்தவரும் வாழ்ந்திருந்தார். இவர் பௌத்த நூல்களை நன்கு கற்று ஆராய்ச்சி செய்தார். பின்னர் சைவசமயம் சிறந்ததெனக் கண்ட இவர் பௌத்த மதத்தில் இருந்து கொண்டே இலிங்க வழிபாட்டினையும் செய்தார். அஃதாவது இவர் அகத்தில் சிவலிங்கத் திருவுருவத்தை வெளிப்படையாகக் கண்டு, கல்லினை மலராக எண்ணி, எறிந்து வந்துள்ளார். இவ்வாறு நாள் தோறும் தவறாமல் செய்து வருகையில் ஒரு நாள் மறந்து, உணவு உட்கொள்ள அமர்ந்த போது, நினைவு தோன்றியது. உடனே இவர் ஓடிச்சென்று, கல் ஒன்றை எடுத்து எறிந்தார்.

அவ்வமயம் சிவமூர்த்தி இவருக்கு முத்தி அளித்தார் என்று சேக்கிழார் பெரியபுராணத்தில் அறிவித்துள்ளார்.[46] இவர் வழிபட்ட இலிங்கம் காஞ்சிபுரத்தில் 'விரட்டாசம்' எனப்படுகிறது. இவ்வாறு சாக்கியர், காஞ்சியிலுள்ள இறைவரைப் பூசித்துப் பேறு பெற்றதால் இவருடைய உருவச்சிலை ஏகாம்பரநாதர் கோவிலில் உள் திருச் சுற்றில் உள்ளது.

முற்காலப் பல்லவர் காலத்தில் பரணதேவ நாயனார் வாழ்ந் துள்ளார். இவர் சங்க காலப் பரணரினின்றும் வேறானவராவர். இவர் சிவபெருமான் திருவந்தாதியைப் பாடியுள்ளார். இந்த அந்தாதியில் குறிப்பிட்டுள்ள சிவத்தலங்களில் காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவில் ஒன்றாகும். இவர் பாடியுள்ள சிவபெருமான் திருவந்தாதி பதினோராம் திருமுறையில் உள்ளது.[47]

முற்காலப் பல்லவர்களையடுத்த காலத்தைய பிற்காலப் பல்ல வர்களுள் (கி.பி.600 - 900) முதலாம் மகேந்திரவர்மன் (கி.பி. 610 - 630) காலம் முதல் பல்லவராட்சி பெயரும் புகழும் பெற்றது. இவன் கட்டடக்கலை வல்லுநன் ஆவான். அழியாத நிலையில் உள்ள குகைக் கோயில்களும், ஒற்றைக்கல் கோயில்களும், கற்களை அடுக்கிக் கட்டப்பட்ட கோயில்களும் இவன் காலத்தில் தோன்றிய னவாம். இவன் காஞ்சிபுரத்தில் ஏகாம்பரநாதர் கோவிலில் 'வெள் ளுவர்' என்ற பௌர்ணமி மண்டபத்தைக் கட்டியுள்ளான்.[48] உவா என்றால் பருவ நிலா என்பது பொருள். வெள்ள என்பது வெள் என்றா யிற்று. வெள்ளுவா என்பது வெள்+உவா என்றாகும்.

அஃதாவது வெண்மையான நிலா என்று பொருள் தரும். இது பௌர்ணமியைக் குறிக்கும். இம்மண்டபத் தூண்களில் மகேந்திர வர்மன் விருதுப் பெயர்கள் பொறிக்கப்பட்டுள்ளன. தமிழ் நாட்டில் மகேந்திர வர்மனுக்கு முன்பு கோவில்களே இல்லையென்று சோவன் துப்ராயில் என்ற ஆராய்ச்சியாளர் கூறியுள்ளார். அவர் ஏகாம்பர நாதர் கோவிலில் வெள்ளுவா மண்டபத் தூண்களைக் கண்ட பின்னர், மகேந்திர வர்மன் காலத்துக்கு முன்பும் கோவில்கள் இருந்துள்ளன என்ற கருத்தை ஏற்றுக் கொண்டுள்ளார்.[49]

மகேந்திரவர்மனால் கட்டப் பெற்று அழிந்த ஒரு கற்கோவிலில் இருந்து கொண்டுவரப்பட்ட தூண்களே, ஏகாம்பரநாதர் கோவிலில் வெள்ளுவா மண்டபத் தூண்களாகும் என்று சிலர் கூறுகின்றனர். இம்முடிவை நாம் ஏற்கும் போது, மகேந்திரவர்மனால் கட்டப்பெற்ற வேறு பல கற்கோவில்களும் செங்கற்கோவில்களும் இருந்திருக்க

வேண்டும் என்று ஊகிக்கமுடிகிறது. அவை ஒருகால் காலப்போக்கில் அழிந்திருக்கலாம்.

ஏகாம்பரநாதர் கோவிலின் பழமைக்கு மற்றொரு எடுத்துக் காட்டு உள்ளது. அஃதாவது, காஞ்சியில் உள்ள சிவாலயங்களில் மிகப் பழமையானது ஊரின் மேற்புறத்தே, உயர்ந்தோங்கிக் காணப் படும் கயிலாசநாதர் கோயில்தான் என்று வரலாற்றுப் பேரறிஞர்கள் கூறுவர். இக்கோவில் இரண்டாம் நரசிம்மனாகிய இராச சிம்மனால் (கி.பி.685 - 705) கட்டப்பட்டதாகும். ஆனால் அவன் காலத்துக்கு முந்தைய கல்வெட்டுக்கள் பௌர்ணமி மண்டபத்தில் காணப்படு கின்றன என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

மேற்கூறியவற்றிலிருந்து காஞ்சியில் கயிலாசநாதர் ஆலயம் கட்டுவதற்கு முன்னரே, சிறுகோவில் அளவிலோ சிறு மண்டப அளவிலோ ஒரு சிவன் கோவிலாக ஏகாம்பரநாதர் கோவில் இருந் துள்ளது என்பது தெளிவாகிறது. அச்சிறு கோவில் செங்கற்களால் கட்டப்பட்டு, முன்மண்டபம் மட்டும், கருங்கற் தூண்களால் அமைக் கப் பட்டதாகக் கூட இருந்திருக்கலாம் என்று கொள்ள வேண்டி யிருக்கிறது.

பல்லவப் பேரரசர்களின் தொடக்கக் காலத்தில், தமிழகத்தில் சமணம், பௌத்தம், சைவம், வைணவம் முதலிய சமயங்கள் இருந் துள்ளன. இவைகளுள் சில சீர்கேடான நிலையில் இருந்துள்ளன. சான்றாகக் கபாலிக சமயத்தைக் கூறலாம். அக்காலத்தில் இந்து மதத்தின் பெருமையைச் சீர் குலைக்கச் செய்தது கபாலிக சமயம்.

அஃதாவது, கபாலிக சமயத்தான் ஒருவன் நமச்சிவாய மந் திரத்தை ஓதிக்கொண்டே ஒழுக்கம் கெட்ட கபாலினியுடன் மதுவைக் குடிப்பதற்குக் கடைக்குச் சென்றுள்ளான். பின்னர் அவன் கோவிலுக் குச் சென்று, தனக்குப் பக்தி, ஞானம், துறவு ஆகியன வேண்டும் என்று கடவுளிடத்தில் கேட்டுள்ளான். இத்துடன் தனக்கு வீடு பேறு மிகச் சுலபமாகக் கிடைத்து விட்டது என்று மற்றவர்களிடம் கூறி யுள்ளான். மேலும் அவன் காஞ்சி தேவி (காமாட்சி) கள்ளை விரும்பு கின்றாள் என்றும் பொதுமக்களிடம் கூறியுள்ளான்.

மேற்கூறிய கபாலிகன் ஏகாம்பரநாதர் கோவிலில் இருந்து கொண்டே, பிறரும் வெறுக்கத்தக்க இழிசெயல்களைச் செய்து உள்ளதைச் சைவ சமயக் குரவர்களான திருஞானசம்பந்தரும் திரு நாவுக்கரசரும் கண்டித்துள்ளரார்கள்.[50] இவர்கள் கபாலிகனைக் கண் டித்து, பொதுவாக இந்து சமயத்திற்கும் சிறப்பாகச் சைவத்திற்கும் உயிரும் ஒளியும் கொடுத்துள்ளார்கள் எனலாம்.

## திருஞான சம்பந்தர் தேவாரம்

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஆகிய மூவரும் இயற்றிய பாக்களுக்குத் தேவாரம் எனப்படும். திரு ஞான சம்பந்தர் தேவாரத்தில், கச்சி ஏகம்பரைத் தொழுதலால் துன்பம் நீங்கும் என்று பாடியுள்ளார். இவர் ஏகாம்பர நாதரை,

வேதங்களை அருளிச் செய்தவன்;
சடையின்கண் பொருந்திய வெண்பிறையை உடையவன்;
பெண்ணுருவும் ஆண் உருவும் ஒருங்கேயுள்ள பெருமான்;[51]

என்றெல்லாம் உளமுருகிப் பாடியுள்ளார்.

இவர், திருவேகம்பம் அடைவாரைத் தன் சிரமேல் கொள்வார் என்பதனைத்

திருவேகம்பம் மேயானை மேவுவார் என்தலை மேலாரே[52]

என்று போற்றிப் புகழ்வதினின்றும் அறியலாம்.

திருஞானசம்பந்தர் காலத்தவராகிய அப்பர் என்ற திருநாவுக் கரசர் தலயாத்திரை செய்யும்போது காஞ்சிபுரத்திற்கு வந்துள்ளார்.

## திருநாவுக்கரசர் தேவாரம்

இவர் கச்சிப் பெருமானைத் தம் மனத்துள் வைத்துப் போற்றி யதை,

அப்போது மலர்தூவி ஐம்புலனும்
அகத்தடக்கி என்மனத்தே வைத்தேனே[53]

என்று பாடியுள்ளதால் தெளியலாம். இத்துடன் கச்சிப் பெருமானை, தலையினால் வணங்க வல்லவர்கள் தலைவர்க்குத் தலைவர் ஆவார்[54] என்றும், கையினால் தொழ வல்லார்கள் கடுவினைக் களைவர்[55] என்றும், வருத்தி நின்று அடிமை செய்வார்கள் வல் வினையை மாய்ப்பர்[56] என்றும் பாடுகின்றார்.

ஏகாம்பரர் எழுந்தருளியிருக்கும் பகுதி பெரிய காஞ்சிபுரம் என்று அப்பர் காலத்திலேயே வழங்கப்பட்டது என்பதனைப்

பெருங்காஞ்சி எம் பிஞ்ஞகனே[57]

என்று அவர் பாடியுள்ளதால் விளங்குகிறது.

அப்பர், காஞ்சி ஏகாம்பரர் மேற்கொண்ட அன்பு பின்வரும் அடி களால் நன்கு புலப்படுகின்றது.

கச்சி ஏகம்பனைத் தொழுமின்[58]

என்றும்,

நமை ஆளும் அவனைத் தொழுமின்[59]

என்றும்,

இடுகு நுனிஇடை ஏந்திள மென்முலை
வடிவின் மாதர் வையன்மின்[60]

என்றும்,

அப்பர், கச்சிப்பதிகத்திருக் குறுந்தொகையில் இராவணன் ஏகம்பனை நினைந்தே உய்ந்தனன் என்பதனை,

இலங்கை வேந்தன் இராவணன் சென்றுதன்
விலங்க லையெடுக் கவ்விர லூன்றலும்
கலங்கிக் கச்சியே கம்பவோ வென்றலும்
நலங்கொள் செலவளித் தானெங்கள் நாதனே"[61]

என்றும் பாடியுள்ளார்.

இதன் விளக்கமாவது இலங்கை வேந்தனாகிய இராவணன் மிகுந்த செருக்குடன் சென்று, இறைவனுடைய கயிலாய மலையைப் பெயர்த்து எடுக்க முயற்சி செய்துள்ளான். அவ்வமயம் அவன் மீது இறைவன் தம்முடைய மெல்லிய திருவடியின் விரல் ஒன்றினால் ஊன்றினார். அப்பொழுது அவன் மிகவும் நடுங்கி, கச்சி ஏகம்பனே! என்று அடைக்கலக்குரல் இட்டுள்ளான். இவ்வாறு இராவணன் கதறிய அளவில் அவனுக்கு விடைகொடுத்து, அனுப்பியருளினான் திருவேகம்பப் பெருமான்.

மேலும் அப்பர் மக்களின் வாழ்க்கையில் மூப்பு, வெறுப்பு, உணர்ச்சி முதலான நிலைகளை அடையுமுன், காஞ்சிக்குச் சென்று, ஈடேற வேண்டும் என்பதை,

மூப்பி னோடு முன்வுறுத் தெந்தமை
ஆர்ப்ப தன்முன் மணிஅம ரர்க்கிறை
காப்ப தாய கடிபொழில் ஏகம்பம்
சேர்ப்ப தாகநாஞ் சென்றடைந் துய்துமே[62]

என்று இயம்பியுள்ளார்.

காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவிலில், கச்சிமயானம் என்ற ஒரு சிறு கோவில் உள்ளது. இதனை வைப்புத்தலம் என்பர். வைப்புத் தலமென்றால் தனக்கெனப் பதிகம் பெறாமல், வேறொரு தலப்

பதிகத்தில், இத்தலம் குறித்துப் பாடப்பட்டிருப்பதே யாகும். இக் கச்சி மயானத்தை அப்பர்,

மைப்படிந்த கண்ணாளுந் தானுங் கச்சி
மயானத்தான் வார்சடையான் என்னினல்லான்
ஒப்புடைய னல்லன் ஒருவ னல்லன்
ஒரூர னல்லன் ஒருவம னில்லி[63]

என்று பாடியுள்ளார்.

மேற்கூறிய பாடலிலிருந்து கச்சிமயானத் திறைவனுக்கு ஒப் பாக யாரையும் கூற இயலாது என்றும், அவன் நிறமற்றவன் என் றும் இவ்விறைவனை, உயிர்களுக்கு அவன்காட்டும் அருளால் காணலாமேயன்றி, வேறு ஒருவரால் காட்டக் காண இயலாது என்றும் அறியலாம்.

சைவ சமய குரவர்களில் அப்பருக்கு அடுத்து சுந்தரர் காஞ் சிக்கு வந்து அவரை ஏத்திப் பாடியுள்ளார்.

## சுந்தரர் தேவாரம்

இவர் காஞ்சிபுரத்திலுள்ள ஏகாம்பரநாதரைப் பாடிய பதிகத் தில், தனது வாழ்க்கை வரலாற்றின் ஒரு பகுதியை நன்கு உணர்த்தி யுள்ளார். அஃதாவது, சுந்தரர் காஞ்சியிலுள்ள ஏகாம்பரநாதரை வணங்கி, இடக்கண் பார்வையைப் பெற்றுள்ளார். இதனை அறிவிக் கும் இவர் வரலாறு நான்காம் இயலில் கூறப்பட்டுள்ளது.

இத்தலத்து இறைவியின் பெயர் ஏலவார் குழலி என்பதை உணரும் பொருட்டுச் சுந்தரர்,

ஏலவார் குழலா ளுமை நங்கை
யென்று மேத்தி வழிபடப் பெற்ற
கால காலனைக் கம்ப னெம்மானைக்
காணக்கண் ணடியேன் பெற்ற வாறே[64]

என்று பாடியுள்ளார். இப்பதிகத்தால் இறைவி, இறைவனை வழி படப் பெற்ற சிறப்பினை நன்கு அறிய முடிகிறது.

சுந்தரர் ஏகம்பப் பெருமானின் தன்மையைப் பாடும்போது 'ஆலம்' என்னும் கொடிய நஞ்சினை விரும்பி, அமுது போல உண்டவன்; எல்லாவற்றிற்கும் மூல முதலாகத் திகழ்பவன்; தேவர்கள் தொழுது வணங்குகின்ற சீலமுடையவனாய்ச் சிறந்து விளங்குபவன்; தன்னைத் தியானிப்பவர் மனத்தில் எப்பொழுதும் நீங்காது இருப்பவன்[65] என் றெல்லாம் பாடியுள்ளார்.

சுந்தரரது பாடலால் காஞ்சி ஏகம்பரப் பெருமான், உருத்திரர் பூசித்த இலிங்கம் 'நல்லகம்பர்'[66] என்றும் திருமால் பூசித்த இலிங்கம் 'கள்ளக் கம்பர்'[67] என்றும் அறிந்து கொள்ள முடிகிறது.

பல்லவர் ஆட்சியின் இறுதிக் காலத்தில் (கி.பி.8ஆம் நூற்றாண்டு) ஆதிசங்கரர் (கி.பி.788-820)திக்கு விசயம் செய்யும் போது, கன்னியாகுமரி, திருச்செந்தூர், காளஹஸ்தி முதலான தலங்களைக் கண்டு வணங்கியுள்ளார். இவரது பயணத்தின் இறுதியில் காஞ்சிமா நகரை அடைந்துள்ளார். சங்கரரது வேண்டுகோளின் பேரில் சோழ நாட்டிற்குத் தலைவனாகவும் நற்குணம் உடையவனாகவும் விளங்கிய இராசசேனன் என்ற அரசன், காஞ்சிமா நகரில் ஸ்ரீ ஏகாம்பரநாதருக்கும், காமாட்சி தேவிக்கும் வரதராசருக்கும் தனித் தனிக் கோவில்களைக் கட்டியுள்ளான்.[68] இராசசேனன் ஏகாம்பரநாதர் கோவிலைக் கட்டிய பின்னர், சைவ சமய குரவர்களில் ஒருவராகிய மாணிக்கவாசகர் தாம் இயற்றிய திருவாசகத்தில், "காஞ்சியிலுள்ள ஏகாம்பரநாதர் தேசமுழுவதும் கொண்டாடுகின்ற சிறப்பினையுடையவர்"[69] என்றும், இவ்விறைவன் திருவுத்தரகோசமங்கையில் எழுந்தருளியிருப்பது போன்று காஞ்சிபுரத்தில் ஏகம்பத்திலும் எழுந்தருளியுள்ளார் என்றும் பாடியுள்ளார்.

மேற்கூறிய செய்திகளால் பல்லவர் காலத்தில் காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவில் பெற்ற பெருமையினையும் வளர்ச்சியினையும் அறியமுடிகிறது.

காஞ்சியில் ஏகாம்பரநாதர் கோவிலில் பிற்காலப் பல்லவர் காலத்தையடுத்து, சோழர் காலத்திலும் குறிப்பிடத்தக்க வளர்ச்சி ஏற்பட்டுள்ளது.

சோழ அரசர்களும், சிற்றரசர்களும் பல்லவ அரசர்களைப் பின்பற்றிப் பழைய கோவில்களைக் கற்றளியாக்கியுள்ளனர். பின்னர், பாடல் பெற்ற கோவில்களைக் கற்கோவிலாக்கியுள்ளனர்.

தமிழ்நாட்டில் ஒவ்வொரு சிவன் கோவிலும் வரவு செலவு கணக்குகள், சண்டேசுரர் என்ற மூர்த்தியின் பெயராலேயே நடைபெற்று வந்துள்ளன. சோழ அரசர்கள், மூலவர் இருக்கிற கருவறையைக் கோவிலாக்கிய பின்னர், சண்டேசுரரின் சிறு கோவிலினைக் கற்கோயிலாக்கியுள்ளனர்.[70]

இதுபோன்றே கோயில்களின் வளர்ச்சியில் திருக்குளங்களும் உண்டாக்கப்பட்டுள்ளன. அத்துடன் மக்களின் ஆர்வமும் கவனிப்பும் உள்ள இடங்களில் முதல் திருச்சுற்றும் இரண்டாம் திருச் சுற்றும் அமைக்கப்பட்டுள்ளன.

மக்களின் செல்வாக்கிற்கேற்ப, கோவில்களில் மண்டபங்கள், யாகசாலைகள் அமைக்கப்பட்டுள்ளன. பெரிய கோவில்களில் மடங்கள் இருந்துள்ளன. சான்றாக ஏகாம்பரநாதர் கோவிலில் சுந்தர மடமும்,[71] ஈசான தேவர் மடமும்[72] இருந்துள்ளன. இவற்றில் சைவ சாத்திரங்களில் வல்ல துறவிகளும் சாத்திர மாணவர்களும் தங்கி வாழ்ந்தனர் என்பர்.

பல்லவர் காலத்தில் அம்மன், சிவனுக்கு எழுப்பப்பட்ட கோவிலிலேயே "போக சக்தி அம்மன்" என்ற பெயருடன் திகழ்ந்தாள். இராசராசசோழன் (கி.பி.984-1014) அம்மனை 'உமாபரமேசுவரி' என்று குறிப்பிட்டுள்ளான். அவன் காலத்துக்குப் பின்னர் அம்மனுக்குத் தனிக் கோவில்கள் கட்டப்பட்டன. பல்லவ, சோழ மன்னர்களைத் தொடர்ந்து சிற்றரசர்களும் கோவிலுக்குத் திருப்பணி களைச் செய்துள்ளனர். சோழ அரசர்களோடு அவர்களது தேவியர்களும் திருப்பணி செய்துள்ளனர்.

## சிற்றரசர்களின் திருப்பணி

சோழ அரசர்களில் கோப்பெருஞ்சிங்கன் என்னும் சிற்றரசன் ஒருவன் இருந்துள்ளான். இவன் மகன்கள் மகாராஜ சிம்மனும், வைதும்ப மகாராஜனும்[73] காஞ்சிபுரத்திலுள்ள கோவில்களுக்கு முப்பத்திரண்டு நற்பசுக்கள் அளித்துள்ளனர். இவர்கள் எந்தெந்தக் கோவில்களுக்கு முப்பத்திரண்டு நற்பசுக்கள் அளித்தனர் என்று அறிந்து கொள்ள இயலவில்லை. இவர்கள் அளித்த நிவந்தங்களுள் சைவக் கோயிலாகவும் உள்ள ஏகாம்பரநாதருக்கு மேற்கூறிய நிவந்தங்கள் அளிக்கப்பட்டிருக்கலாமென நம்பப்படுகிறது.

## அரச மாதேவியர், மக்கள் திருப்பணிகள்

காஞ்சிபுரத்தில் முதல் குலோத்துங்கனின் (கி.பி.1070-1120) மனைவியர் மூவர் திருப்பணிகள் செய்துள்ளதாகக் கல்வெட்டுகளில் காணப்படுகின்றன.[74] இவர்கள் எந்தக் கோயிலுக்குத் திருப்பணி செய்துள்ளனர் என்று அறிய இயலவில்லை. பெரும்பாலும் ஏகாம்பரநாதர் கோவிலுக்கு இருக்கலாமென எண்ணப்படுகிறது.

திருக்கோயிலுக்கு சோழநாட்டு மக்களும் திருப்பணி செய்து உள்ளனர். ஒரு சாதாரணப் பெண் தன் நகைகளை விற்று, திருக்கோயிலுக்கு நிலம் வாங்கிக் கொடுத்துள்ளாள்.[75] ஆனால் அப்பெண் எந்தக் கோயிலுக்குக் கொடுத்துள்ளாள் என்று அறிய முடியாததாய் இருக்கிறது.

தமிழகத்தில் சைவர்களால் கோயில் என்று குறிப்பிடுவது சிதம்பரத்தில் உள்ள நடராசப் பெருமான் கோயிலையே ஆகும். அஃதேபோல் காஞ்சிபுரத்தில் கோயில் என்றால் அங்குள்ள ஏகாம்பர நாதர் கோவிலையே குறிக்கும் என்பதனைக் காஞ்சியில் வாழும் சைவப் பெருமக்களின் வழக்கில் இன்றும் உள்ளதால் உறுதிப்படுத் தப் படுகின்றது. பெரும்பாலும் மேற்காட்டிய செய்தியின் அடிப்படை யிலேயே காஞ்சிபுர ஏகாம்பரநாதர் கோவில் கட்டப்பட்டிருக்கலாம்.

மேற்கூறிய செய்திகளிலிருந்து சோழர் காலத்தில் அரசர் முதல் குடிமக்கள் வரை யாவரும் கோயிலுக்குத் தானமளித்துள்ளனர் என் பது தெரிய வருகிறது.

தமிழகத்தில் சேர, சோழ, பாண்டியர் ஆகிய மூவேந்தர்களுள் நூற்றுக்கணக்கான சிவன் கோவில்களைக் கட்டியவர்கள் சோழர் களே எனலாம். சோழ அரசன் கோச்செங்கணான் எழுபது சிவன் கோவில்களைக் கட்டியுள்ளமையே இதற்கு நற்சான்றாகும்.

ஏகாம்பரநாதர் கோவிலில் உள்ள கல்வெட்டுகளில் தானத்தைப் பற்றியும், அதைச் செயலாற்ற வேண்டிய முறை பற்றியும் அத் தானத்தைச் செய்யத்தவறினால் வரும் தீங்கு பற்றியும் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன. இக்கோவிலில் உள்ள கல்வெட்டுகளுள் சில தானங்கள் இப்பூவுலகில் சூரியர், சந்திரர் இருக்கும் வரை நிலைத் திருக்க வேண்டுமெனக் குறிக்கப்பட்டுள்ளன. இத்தானங்களைச் சரியாகச் செய்யாதவர்கள் காராம் பசுவைக் கொன்றதை ஒத்தபழி சேர்வார்கள் என்று தெரிவிக்கப்பட்டுள்ளது.

காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவிலின் வளர்ச்சிக்காகச் சோழப் பேரரசர்கள் பல நிவந்தங்களை அளித்துள்ளனர். அவற்றுள் சிறந்த வற்றைப் பார்ப்போம்.

## ஏகாம்பரநாதர் கோவிலுக்குச் சோழர் பணி

முதலாம் குலோத்துங்கன்,[76] இரண்டாம் இராசராசன்,[77] மூன் றாம் குலோத்துங்கன்,[78] மூன்றாம் இராசராசன்[79] ஆகியோர் கல் வெட்டுகள் ஏகாம்பரநாதர் கோவிலில் காணப்படுகின்றன. இவற் றுடன் காகதீய மன்னன் கல்வெட்டு[80] ஒன்றும் இங்குள்ளது. இக்கல் வெட்டுச் சான்றுகளால் மேற்கூறிய சோழ அரசர்கள் காலத்தில் தான் (கி.பி.907-1246) காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவில் விரிவாக்கப் பட்டுள்ளதெனக் கொள்ளக் கிடக்கின்றது. இவ்வரசர்கள் காலத்தி லேயே ஏகாம்பரநாதர் கோவிலில் அகத்தீசுவரர் மண்டபமும், சபா நாதர் மண்டபமும் கட்டப்பட்டுள்ளன.

பிற்காலச் சோழர் காலத்தில் (கி.பி.11,12-ஆம் நூற்றாண்டுகள்) நூற்றுக்கால் மண்டபம் ஒன்று ஏகாம்பரநாதர் கோவிலில் அமைக்கப்பட்டுள்ளது. இம்மண்டபம்தான் விசய நகர மன்னர்கள் காலத்தில் (கி.பி.1346-1641) ஆயிரக்கால் மண்டபமாக மாற்றப் பட்டு விட்டதாகத் தெரிகிறது. தற்போதைய ஆயிரக்கால் மண்டபத் திலும் ஏகாம்பரநாதர் சந்நிதியினையொட்டிக் கட்டப்பட்டுள்ள திருச் சுற்றுமாளிகையிலும் காணப்படும் தூண்களுள் ஒரு சிலவற்றில் 'விக்கிரம சோழன் நூற்றுக்கால் மண்டபம்' என்றும் குறிக்கப்பட்டுள் ளதைக் காணலாம்.

பிற்காலச் சோழர் காலத்தில்தான் பட்டினத்தடிகள் வாழ்ந் துள்ளார். இவர் காலம் கி.பி.10ஆம் நூற்றாண்டாகும். இவர் காஞ்சி புரத்தில் தங்கியிருந்தபோது திருவேகம்பர் திருவந்தாதி என்னும் நூலை இயற்றியுள்ளார்.

## திருவேகம்பர் திருவந்தாதி

பட்டினத்தடிகள் தென்னாட்டில் உள்ள திருக்கோவில்களுக்குச் சென்று ஆங்காங்குள்ள இறைவனை வணங்கியுள்ளார். காஞ்சிபுரத் திற்கு இவர் வந்தபோது திருவேகம்பத்தில் உள்ள ஏகாம்பரநாதரை வணங்கியுள்ளார். இவர் இங்குள்ள இறைவனைப் புகழ்ந்து பாடிய பாடல்கள் 'திருவேகம்பர் திருவந்தாதி' எனப் பெயர் பெற்றுள்ளது. இந்நூல் வாயிலாக ஏகாம்பரர் கோவில் பற்றிய செய்திகள் சில அறியமுடிகின்றது. அத்துடன் ஏகாம்பரநாதர் மேலுள்ள அன்பைப் பல்வேறுவகையில் இவர் வெளிப்படுத்துகிறார்.

உலகையாளும் அரசராயினும், கச்சி ஏகம்பப் பெருமானைப் பணிந்து வணங்காதவர்கள், காட்டில் வேட்டையாடித்திரியும் வேடுவர் நிலைக்குத் தாழ்வுடையராவர்[81] என்று இவர் கருதுகின்றார்.

சீலமின்றி, அறிவின்றிக் கொலை, களவு முதலிய தீமை புரிந் தொழுகும் கீழ்க்குல மக்களாயினும் ஏகம்பத்திறைவனுடைய திரு வடிகளுக்குத் தொண்டரராயின், அவர்கள் போற்றத் தக்கவர்களாக விளங்குவர் எனக் கொள்கிறார்.

அழகான வீடு, அன்பான மனைவி, ஆசையான மக்கள், அருமை யான எழில் உடம்பு, எண்ணற்ற செல்வம், பெருஞ்சுற்றம், ஆட்களின் அதிகாரங்கள், சுகவாழ்க்கை இவையாவும் வெளி மயக்கமேயாகும்; நிலையானவை என்று கூற முடியாது; நல்லவர்கள் இணக்கம்,[82] ஞானம், இறைவனுக்குச் செய்யும் பூசை ஆகியவையே நிலை யானவையாகும்.

மயக்கம் தரும் மனைவி, மக்கள், ஆட்களின் அதிகாரங்கள் மற்றும் சுகவாழ்க்கை ஆகியன யாவும் நமக்குத் துன்பத்தையே தரு கின்றன. இவற்றை ஞானப்பாடல் வாயிலாக எண்ணிப்பார்க்கச் செய் கின்றார் பட்டினத்தடிகள்.

பிழைகளுக்கெல்லாம் பெரும்பிழை ஞானத்தைப் பெருக்கிக் கொள்ளாத பிழைதான் என்றார் பட்டினத்தடிகள். இவர் 'கச்சி ஏகம் பனே! என்று உருக்கமுடன் கூறியதோடு, கல்லாப்பிழை, கருதாப் பிழை, கசிந்து உருகி நில்லாப் பிழை முதலான எல்லாப் பிழைகளை யும் பொறுத்தருள வேண்டும்'[83] என்று ஏகம்பரை வணங்கிக் கேட்டுக் கொண்டுள்ளார்.

அத்துடன் தனது கச்சித்திருவகலில் மானிடப் பிறவி பெறுதற் கரிய பிறவியாகும். அதனைப் பெற்ற மானிடர், மாதருடைய அவய வங்களை விரும்பிப் பலவாறு வருணித்துரைத்து, மீளா நரகத்தில் செல்ல வேண்டாம். இந்த இழிவுச் செயலினை விட்டு, முக்தியைத் தரக்கூடியனவாகிய சிவபெருமான் திருவடியை வணங்கினால், அவன் பிறவா உடலைத் தருவான்[84] என்று பட்டினத்தடிகள் கூறியுள்ளமை யும் அவர் ஏகாம்பரநாதர் மேற்கொண்ட அன்பை எடுத்துக் காட்டு கிறது. பட்டினத்தடிகள் போல் ஏகாம்பரரைப் பூசித்த இன்னொருவர் கந்தபுராண ஆசிரியரான கச்சியப்ப சிவாசாரியார். இவர் ஏகாம்பர நாதர் கோவிலில் உள்ள விகட சக்கர விநாயகரை வணங்கியுள்ளார்.

கச்சியப்ப சிவாசாரியார் கி.பி.11ஆம் நூற்றாண்டில் வாழ்ந்துள் ளார். இவர் ஏகம்பரநாதர் கோவிலில் உள்ள விகட சக்கர விநாயகர் முன், தாம் இயற்றிய கந்தபுராணம் என்னும் நூலை அரங்கேற்றம் செய்துள்ளார்.

காஞ்சிபுரத்தின் தல விநாயகர் விகட சக்கர விநாயகர் ஆவார். கச்சியப்ப சிவாசாரியார் ஒரு மாமரத்தின் அடியில் எழுந்தருளி யிருக்கும் முருகக் கடவுளைக்

காஞ்சி மாவடி வைகும் செவ்வேள் மலரடி போற்றி[85]

என்று கந்தபுராணத்தில் பாடியுள்ளார்.

கச்சியப்ப சிவாசாரியரையடுத்து சேக்கிழார், பெரிய புராணத் தில் ஏகாம்பரநாதரைப் புகழ்ந்துள்ளார்.

## பெரிய புராணம்

காஞ்சிபுரத்தில் அன்னை காமாட்சி அம்மையார் இறைவரிடம் இரு நாழி நெல் பெற்றுக் கொண்டு முப்பத்திரண்டு அறங்களைச்

செய்துள்ளார் என்பர். இச் செய்தியினைப் பெரிய புராண ஆசிரியரான சேக்கிழார்.

மண்ணின் மேல்வழி பாடுசெய் தருளி
　　மனையறம் பெருக்குங் கருணையினா
னண்ணு மன்னுயிர் யாவையும் பல்க
　　நாடு காதலி னீடிய வாழ்க்கைப்
புண்ணியத்திருக் காமக்கோட் டத்துப்
　　பொலிய முப்பதோ டிரண்டறம் புரக்கும்[86]

என்று பாடியுள்ளார்.

பெரிய புராணத்தில் சேக்கிழார் ஏகாம்பரநாதர் கோவிலின் சிறப்பினைக் கூறும்போது,

அன்பர்கள் திரண்டு நிற்கும் கோவில்[87]

கம்பை நதி பெருக்கெடுத்து வர இறைவி தாம் வழிபடும்
இறைவர்க்குத் தீங்கு ஏற்படுமே என்று மிக அஞ்சி
ஆரத் தழுவிக் கொண்ட கோவில்[88]

.......................................தொல்லுலக
முழுதுமளித் தழித்தாக்கு முதல்வர்திரு வேகம்பம்[89]

அணியேகாம் பரம்[90]

கம்பவாணர் கோயில்[91]

திருக்கச்சி யேகம்பம்[92]

என்றெல்லாம் பாடுகின்றார்.

சேக்கிழார் ஏகாம்பர நாதரைப்,

பாவை தழுவக் குழைகம்பர்[93]

மாமலையான் முலைச்சுவடும் வளைத்தழும்பு மணிந்தமதிப்
பூமலிவார் சடையார்[94]

உருகியவன் புள்ளலைப்ப வுமைதழுவக் குழைந்தவரை[95]

வளைத்தழும்பர்[96]

கருவார் கச்சி யேகம்பர்[97]

மங்கைதழு வக்குழைந்தார்[98]

செம்பொன்மலைக் கொடித்தழுவக் குழைத்தருளுந்
திருமேனிக் கம்பர்[99]

திருவேகம் பத்தமர்ந்த செழுஞ்சுடர்[100]

என்றெல்லாம் சிறப்பித்துப் பாடியுள்ளார்.

பட்டினத்தடிகள் பாடிய திருவேகம்பத் திருவந்தாதி, கச்சித் திருவகவல் ஆகிய நூல்களாலும், சேக்கிழார் இயற்றிய பெரிய புராணத்தினாலும், கச்சியப்ப சிவாச்சாரியார் எழுதிய கந்தபுராணத் தினாலும் சோழ அரசர்களின் திருப்பணிகளாலும் பிற்காலச் சோழர் காலத்தில் காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவில் மிகுதியான பெருமை யினையும் வளர்ச்சியினையும் பெற்றுள்ளதாகத் தெரிகிறது.

## பாண்டியர்கள்

பிற்காலச் சோழர் காலத்துக்குப் பின்னர், காஞ்சியில் பாண்டியர் கள் (கி.பி.1216 முதல் 1352 வரை) ஆட்சி செய்துள்ளனர். கி.பி. 1276 ஆம் ஆண்டில் இரண்டாம் ஜடவர்ம சுந்தர பாண்டியன், ஏகாம் பரநாதர் கோவிலின் வளர்ச்சிக்குத் திருக்கச்சூர் கிராமத்தில் உள்ள நிலத் தைத் தானமளித்துள்ளான்.[101]

இதைத் தவிர வேறு எவ்வித வளர்ச்சியும் பாண்டியர் காலத்தில் காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவில் பெற்றதற்கு இன்றைய நிலை யில் சான்றில்லை.

தமிழகத்தில் பாண்டிய மன்னர்களை யடுத்து விசய நகர மன்னர்கள் காலத்தில் (கி.பி.1352-1576) ஏகாம்பரநாதர் கோவில் மிகச் சிறந்த முன்னேற்றத்தை அடைந்திருக்கிறது.

## விசய நகர மன்னர்கள்

விசய நகரப் பேரரசர் கிருஷ்ண தேவராயரால் கி.பி.1509 ஆம் ஆண்டில் ஏகாம்பரநாதர் கோவில் தெற்கு வாயில் இராசகோபுரம் கட்டப்பட்டுள்ளது.[102] இவரது பெயர் தெற்கு இராச கோபுர நுழை வாயிலின் மேல்தளத்திலுள்ள ஒரு கல்லில் பொறிக்கப்பட்டுள்ளதை இப்பொழுதும் காணலாம்.

விசய நகர அரசர்கள் குகைக்கோயில்களை அமைக்கவில்லை; கற்றளிகளைத்தான் அமைத்துள்ளனர். சிவன் கோவில்களில் சனீசு வரன் கோவில், நவக்கிரகக் கோவில் ஆகியவை மிகப் பிற்காலத் திலேயே புதியதாகச் சேர்க்கப்பட்டவை என்பர்.

விசயநகர ஆட்சியில் மல்லிகார்சுனனுடைய (கி.பி.1445 - 1465) மூன்று கல்வெட்டுகளில் புதுப்பாக்கம், வேளையூர் ஆகிய

கிராமங்களை ஏகாம்பரநாதர் கோவிலுக்கும் காமாட்சியம்மன் கோவிலுக்கும் வழங்கிய செய்திகள் காணப்படுகின்றன.[103]

இக்காலத்தைச் சார்ந்தவைகளான காஞ்சித் தலத்தைப்பற்றி அறிவிக்கும் புராணநூல்கள் மூன்று உள்ளன. அவற்றுள் முதற் காஞ்சிப் புராணம் என்பது பண்டைய காஞ்சிப் புராணம். இது வாலியூர்ப் பிரதாப முதலியாரால் இயற்றப்பட்டுள்ளது. அடுத்தது இன்று பெருவழக்காய் உள்ள சிவஞான யோகிகள் என்று அழைக்கப்படும் சிவஞான முனிவராலும் மூன்றாவது சிவஞான முனிவரின் மாணவர், கச்சியப்ப முனிவராலும் இயற்றப்பட்டுள்ளன. சிவஞான முனிவர் இயற்றிய காஞ்சிப்புராணம் செந்தமிழ் மொழியில் உள்ளது. இவர் வடமொழி, தென்மொழி ஆகிய இரண்டிலும் தோய்ந்தவர்.

## காஞ்சிப் புராணம்

காஞ்சியில் உமையம்மை ஒரு மாவின் கீழ்ப் பெருமானை வழிபடுவதற்காகக் கயிலையிலிருந்து வந்ததற்குப் பொதுவாகக் கூறப்படும் காரணம், சிவபெருமான் திருக்கண்களைத் தாம் மூடியதால் ஏற்பட்ட பாவம் நீங்குவதற்கேயாகும். இச் செய்தியினைக் காஞ்சிப் புராணங்கள் மூன்றும் மாறுபாடின்றிக் கூறுகின்றன.

கச்சியப்ப முனிவர் இயற்றியுள்ள காஞ்சிப்புராணத்தில், காஞ்சிக்கு வந்த உமையம்மைக்கு ஏகாம்பரநாதர் எதிரே காட்சியளித்தார் என்று அறிவித்துள்ளார். பின்னர், அவர் தன்னுடைய தேரில் உமையம்மையை ஏற்றிக் கொண்டு, காஞ்சிபுரத்தில் தாம் எழுந்தருளியிருக்கும் எல்லாத் திருத்தலங்களையும் சுட்டிக் காட்டியுள்ளார். அத்தலங்கள் முறையே திருநெறிக்காரைக்காடு, திரு அநேகதங்காவதம், திருமேற்றளி, திரு ஓணகாந்தன்தளி, திருக் கச்சியேகம்பம் என்பர்.

ஏகாம்பரநாதர், உமையம்மைக்குக் கச்சியேகம்பத்தின் பெருமையைக் கூறியதோடு அங்கு ஒரு மாமரத்தின் அடியில் என்றும் நிலைத்திருக்கும் தம்மை வழிபாடு செய்யுமாறு அருளிச் செய்துள்ளார்.

ஏகாம்பரநாதர் அறிவித்தபடியே உமையம்மையும் ஒரு மாமரத்தின் அடியில் எழுந்தருளியிருக்கும் திருமேனியைத் தொழுது வழிபட்டுள்ளார் என்பதைக் காஞ்சிப் புராணத்தில் உள்ள தழுவக் குழைந்த படலம்[104] அறிவிக்கிறது.

ஏகாம்பர நாதரை மனத்தில் எண்ணி வழிபடச் சென்ற உமையம்மைக்கு ஏகாம்பரநாதர் சோதனையை நிகழ்த்தியுள்ளார். அம்மையாரின் வழிபாட்டைச் சோதிப்பதற்காகவே இறைவர் வெள்ளம்

பெருக்கெடுத்து வரச் செய்துள்ளார். இவ்வெள்ளத்தினின்று பெருமானைக் காக்க, உமையம்மை தழுவிக் கொண்டுள்ளார். அன்புக்கு உருகும் பெருமான், உமையம்மையின் வளைத்தழும்போடு முலைத் தழும்பும் ஏற்றுத் தழுவக் குழைந்தவரானார்.[105]

மேற்கூறிய அருள் நிகழ்ச்சியிலிருந்து ஏகாம்பரநாதர் உள்ளத்தால் நெகிழ்ந்து வழிபடுவோர்க்கு, உடலாலும் நெகிழ்ந்து நிற்பவர் என்பதை அறியலாம்.

காஞ்சிப்புராணத்தையடுத்து கச்சிக் கலம்பகம், காஞ்சி இறைவனின் பெருமையை நன்கு விளக்குகிறது.

## கச்சிக் கலம்பகம்

இந்நூல் அரங்கநாத முதலியாரால் இயற்றப்பட்டது. இதற்கு முன் பதினான்காம் நூற்றாண்டில் இயற்றப்பட்டதாகக் கொள்ளப்படும் கச்சிக்கலம்பகம் என்ற நூல் கிடைக்கவில்லை.

கச்சிக்கலம்பகம் தரும் செய்திகளிலிருந்து காஞ்சியிலுள்ள ஏகாம்பரநாதர் படமெடுத்தாடும் பாம்பினை அரையில் கச்சாகக் கட்டியவர்,[106] நறுமணக் கொன்றை மாலையைச் சூடியவர்,[107] அடியார்களின் குறைகளை விரைந்து நீக்குபவர்,[108] அடியார்கள் வேண்டிக் கொள்ளும் வரங்களை அளிப்பவர்,[109] நெற்றிக் கண்ணையுடையவர்,[110] குளிர்ந்த பிறைச் சந்திரன் தங்கும் முறுக்குண்ட சடையையுடையவர்,[111] உமாதேவி தங்கும் இடப்பாகத்தையுடையவர்[112] என்றெல்லாம் அறியப்படுகிறது.

இவ்வாறு பல்லவர், சோழர், விசய நகர மன்னர் காலங்களில் காஞ்சிபுரம் ஏகாம்பர நாதர் கோவில் நன்கு மதிக்கப் பெற்று வளர்ச்சியடைந்துள்ளது.

பிற்காலத்தில் இந்தியாவில் ஆங்கிலேயர் ஆட்சி முதலில் கி.பி.1750 ஆம் ஆண்டு ஏற்பட்டபோது, செங்கற்பட்டு மாவட்டத்துக்கு ஆட்சித் தலைவராக இருந்துள்ள ஆட்சன் துரை என்பவர் ஏகாம் பரநாதர் கோவிலின் கிழக்குப்புற மதிலைப் புதுப்பித்துள்ளார்.[113] இச்செய்தி அம்மதிற் சுவரில் காணப்படுகிறது.

காஞ்சி நகரப் பெருமக்கள் சார்பாகப் பச்சையப்ப வள்ளல் அவர்கள் கி.பி.1774ஆம் ஆண்டில் மார்ச்சு மாதம் 27ஆம் நாள் ஏகாம்பர நாதர் கோவிலில் பலி நாயகர், சிவகாமியம்மை என்னும் இரண்டு திரு உருவங்களை அமைத்து கும்பாபிடேகம் செய்துள்ளார். கும்பா

பிடேகத்திற்குப் பின்னர் பச்சையப்பர், பங்குனி உத்திர கலியாண மண்டபத்தைக் கட்டியுள்ளார்.[114]

கி.பி.1900 ஆம் ஆண்டில் தேவகோட்டை ரா.மெ.அ. இராம நாதன் செட்டியாரும், ராம.செ.அ. இலட்சுமண செட்டியாரும் ஏகாம்பர நாதர் கோவிலின் கும்பாபிடேகத்தை இருபது இலட்சம் ரூபாய் செல வில் செய்துள்ளனர்.

பின்னர் இக்கோவிலுக்குக் கி.பி.1922 ஆம் ஆண்டு ஜூன் மாதம் கண்டனூர் வயி. இராமநாதன் குடும்பத்தார் ரூபாய் எழுபதா யிரத்தில் சில திருப்பணிகள் செய்துள்ளனர். பின்னர் இவர்களே ஏகாம்பரநாதர் கோவிலுக்குக் கும்பாபிடேகத்தையும் செய்துள்ளனர்.

மேலும் இக்கோவிலுக்கு ரூபாய் ஆறாயிரம் செலவில் கண்ட னூர் வயி. இராமநாதன் குடும்பத்தினரால் வேதபாடசாலையும், ரூபாய் பதினாயிரம் செலவில் தேவகோட்டை ராம.மெ. இலட்சுமணன் குடும்பத்தினரால் ஆகம பாடசாலையும், ரூபாய் மூவாயிரம் செலவில் கண்டனூர் ராம. வயி. அருணாசலம் குடும்பத்தாரால் பசுமடம், திரு நந்தவனம் ஆகியவைகளும், ரூபாய் பதினாயிரம் செலவில் தேவ கோட்டை நா.ராம.அருணாசலம், மெ.லெ. இராமநாதன் குடும்பத் தினர்களால் குருபூசை மடமும் நிறுவப்பெற்றுள்ளன.[115]

ஏகாம்பரநாதர் கோவிலில் இரண்டாம் திருச்சுற்று எனப்படும் மாவடித் திருச்சுற்றினை நகரத்தார்[116] கட்டியுள்ளார்கள்.

மேற்கூறியுள்ள திருப்பணியாளர்கள் ஏகாம்பரநாதர் கோவிலின் இராசகோபுரத்திற்கு எதிரில் ஒரு கட்டடத்தைக் கட்டியுள்ளனர். அங்கு வேதபாடசாலையைத் திருப்பணியாளர்கள் நடத்தி வந்தனர். இப்பாடசாலை கி.பி.1930 ஆம் ஆண்டு வரை நன்கு நடைபெற்று வந்துள்ளது.

பின்னர் இப்பாடசாலையை யாரும் நடத்த முன்வராததால் இக் கட்டடம், காஞ்சிபுரம் நகராண்மைக் கழகத்தாருக்கு வாடகைக்கு விடப்பட்டுள்ளது. நகராண்மைக் கழகத்தார் ஒரு நடுநிலைப் பள்ளியை மேற்கூறிய கட்டடத்தில் நடத்திக் கொண்டு வருகின்றனர். மெ.லெ. இராமநாதன் குடும்பத்தினர் காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவிலுக்குத் தொடர்ந்து திருப்பணிகள் செய்து வந்துள்ளதைக் கண்ட இவர்களது உறவினர்களான மெ.லெ.மெய்யப்பன் குடும்பத் தார் திருவிடை மருதூர் மகாலிங்க சுவாமி கோவிலையும், பெரிய மைனர் மெ. அரு. நாராயணன் குடும்பத்தார் திருக்காளத்திக் கோயிலையும், ராம.மெ. சிதம்பரம் குடும்பத்தார் திருமருகல்

கோவிலையும் கட்டித் திருப்பணி புரிந்தனர் என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

கி.பி. 1971ஆம் ஆண்டில் ஏகாம்பரநாதர் கோவிலின் திருக் குளமான சிவகங்கைத் தீர்த்தத்தின் படிகள் அறங்காவலர்களால் செப்பம் செய்யப்பட்டுள்ளன.

கி.பி.1979ஆம் ஆண்டு இக்கோவிலின் கும்பாபிடேகம் ஜகத் குரு ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகளின் பெரு முயற்சியாலும் நகரப் பெருமக்களின் ஒத்துழைப்பாலும் நிறை வேற்றப்பட்டுள்ளது.

பக்தர்கள் வழங்கிய பொருள்களைக் கொண்டு ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் இக்கோவிலின் மூலத்தான விமான கலசத்தைத் தங்கத்தால் அமைத்துக் கொடுத்துள்ளார்கள். மேற்கூறிய செய்தி கள் காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவிலின் தோற்றத்தினையும் வளர்ச்சியினையும் விளக்கி நிற்கின்றன.

இதைத் தொடர்ந்து இக் கோவிலின் அமைப்பு முறையினையும் அதில் காணப்படும் கலைச் சிறப்பினையும் இரண்டாம் இயலில் காண்போம்.

**அடிக்குறிப்புகள்**

1. சேக்கிழார், பெரியபுராணம் ஏழாம்பதிப்பு, (சென்னை: வித்தியாநு பாலன யந்திரசாலை, 1929) திருக்குறிப்புத் தொண்ட நாயனார் புராணம், பாடல் (பா.) 1.பக்கம் (ப.) 169.
2. காஞ்சிபுரத்தில் வழங்கும் பழமொழிகளுள் ஒன்று.
3. 1. புழல், 2. ஈக்காடு, 3. மணவில், 4. செங்காடு, 5. பையூர், 6. எயில், 7. தாமல், 8 .ஊற்றுக்காடு, 9. களத்தூர், 10. செம்பூர், 11. ஆம்பூர், 12. வெண்குன்றம், 13. பல்குன்றம், 14. இளங் காடு, 15. காலியூர், 16. செங்கரை, 17. படுவூர், 18. கடிகூர், 19. செந்திருக்கை, 20. குன்ற வட்டானம், 21. வேங்கடம், 22. வேலூர், 23. சேத்தூர், 24. புலியூர்.
4. "ஏரி இரண்டும் சிறகா எயில் வயிறாக்
காருடை பீலி கடிகாவா-நீர்வண்ணன்
அத்தியூர் வாயா அணிமயிலே போன்றதே
பொற்றேரான் கச்சிப் பொலிவு"

   தண்டி, தண்டியலங்காரம், நூற்பா. 39. செங்கை மாவட்ட வரலாற் றுக் கருத்தரங்கு, நாகசாமி, இரா. பதிப்பாசிரியர் (பதி.) (சென்னை: தொல் பொருள் ஆய்வுத்துறை, 1977), ப.41.

5. Srinivasan,C.R., Kanchipuram Through the ages, (Delhi: Agamkala Prakashan, 1979) page (p.) 9.

6. Epigraphica Carnatica (E.C.) Volume V, No.178, p.402.

7. South Indian Inscriptions (S.I.I.) Vol.II

Kasakudi plates of Nandivarman Inscriptions, part 3, page 349.

8. திருநாவுக்கரசு சுவாமிகள், தேவாரப் பதிகங்கள், (திருச்சிராப் பள்ளி சிட்டிபிரஸ், 1949) திருமேற்றளி, நான்காம் திருமுறை, பா. 8. ப. 433.

9.-12. S.I.I. Volume (Vol) I (Madras:1955) pages(p.p) 113-114, 139, 140,141,143.

13-24. கச்சியப்ப முனிவர், காஞ்சிப்புராணம், குமாரசாமி, பொன். (பதி.) (காஞ்புரம்:மெய்கண்டார் கழகம், 1953), பன்னிருநாமப்படலம், பா. 8, ப.181.

கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள், கந்தபுராணம், எட்டாம் பதிப்பு, ஆறுமுகநாவலர் (பதி.) (சென்னை: வித்யாநுபாலன யந்திர சாலை, 1952) திருநகரப்படலம்பாடல்கள் (பா-ள்) 64-74, பக் கங்கள் (பக்.) 23,24.

25. S.I.I. Vol. IV (Madras, 1955) No.134

ஆளவந்தார். ஆர்.,கல்வெட்டில் ஊர்ப்பெயர்கள். (சென்னை: உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், 1983) பின்னிணைப்பு-1. ப.73.

26. கந்தசாமி முதலியார், மோசூர்., கச்சிக்கலம்பகம், மறுபதிப்பு, (சென்னை:சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், (சை.சி.நூ.ப.க.) 1956) உரைப்பாயிரம், ப.1.

27. "ஒரு மரப் பெயரு மோரிசைப் பெயரும்
கச்சிப் பதியுமே கலையுங் காஞ்சி"
பிங்கல முனிவர், (பிங்கல நிகண்டு (சென்னை: சை.சி.நூ. ப.க. 1968) பா.3343, ப.417.

28. மாணிக்கம், வெ.தே. காஞ்சிகாமாட்சி, காஞ்சிமலர் (சென்னை: ஏசியன் அச்சகம், 1979) ப.63

29. விட்டுணு பூசித்த இடம் காஞ்சியில் கச்சபேசம் எனப்படுகிறது.

30. பின்னிணைப்பு - 1 காண்க.

31. திருக்கயிலையில் உமையம்மை. சிவபிரான் திருக்கண்களை மூடிய தால் ஏற்பட்ட குற்றம் நீங்கக் காஞ்சியில் வழிபாடு செய்தாள். இதற்குச் சிவபிரான் காட்சி கொடுத்ததால் 'சிவபுரம்' எனப்பட்டது.

ஆள்வந்தார். ஆர்., மு. கா.நூ. ப. 160

32. சிவஞான முனிவர். காஞ்சிப்புராணம், (காஞ்சிபுரம்: முத்தமிழ் அச்சகம், 1964) திருவேகம்பப் படலம், பா. 58. ப.577.

33. கச்சியப்பசிவாசாரியார், மு.கா.நூ., பா. 94

34. "புரம் - ஊர், நகரம் "
கழகத் தமிழ் அகராதி, கழகப் புலவர் குழுவினர் (பதி.)
(சென்னை: சை.சி.நூ.ப.க. 1969) ப. 686.

35. 'ஏகம் - ஒன்று'
கழகத் தமிழ் அகராதி மு.கா.நூ. ப. 214

36. 'ஆமிரம்' - மாமரம்
கழகத் தமிழ் அகராதி மு.கா.நூ. ப.80

37. இந்து சமயச் சிலைகள், பகுதி-II பிரிவு I பக். 55-57 இராசமாணிக்கனார், மா. சைவசமய வளர்ச்சி (சென்னை: ஔவை நூலகம், 1958) ப.26.

38. கழகத் தமிழ்க் கையகராதி, சேலை சகதேவ முதலியார், (தொகு.) (சென்னை: சை.சி.நூ.ப.க. 1960) ப.21.

39. சிங்காரவேலு முதலியார். ஆ. அபிதான சிந்தாமணி (புதுதில்லி: ஏசியன் எடுகேஷனல் சர்வீசஸ், 1983) ப. 215.

40. இயல் - ஒன்றில் காண்க.

41. காதம் - பத்துமைல் தொலை தூரம்.
கழகத் தமிழ் அகராதி மு.கா. நூ. ப. 317

42. சேக்கிழார்., மு.கா. நூ., திருக்குறிப்புத் தொண்டர் புராணம், பா.85, ப.177.

43. இளங்கோவடிகள், சிலப்பதிகாரம், (தஞ்சாவூர்: தமிழ்ப் பல்கலைக் கழகம், 1985 ) இந்திர விழா எடுத்த காதை, வரிகள் (வ.ள்) 95 - 98, ப.161.

44. பரமசிவானந்தம், அ.மு. தமிழக வரலாறு, (சென்னை: தமிழ்க் கலைப் பதிப்பகம், 1958). ப. 179

45. ஐயடிகள் காடவர்கோன் நாயனார், க்ஷேத்திர வெண்பா, பதினோராந் திருமுறை (ஸ்ரீ வைகுண்டம்: ஸ்ரீ குமரகுருபரன் அச்சகம், 1950) பா.20, ப.30.

46. சேக்கிழார்., மு.கா. நூ., ப. 444

47. "எரியாடி ஏகம்பம் என்னாதார் மேனி
எரியாடி யேகம்ப மாகும் - எரியாடி
ஈமத் திடுங்காடு தேரும் இறைபணிப்ப
ஈமத் திடுங்காடு தான்"

பரணதேவ நாயனார், சிவபெருமான் திருவந்தாதி. பதினோராந் திருமுறை. மு. கா. நூ., பா-22. ப.187.

48. Annual Report of Epigraphy (A.R.E.) 82 of 1921.

இந்தியக் கலை வரலாறு, தங்கவேலு.கோ. (சென்னை: தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம், 1976) ப.442.

49. Joukeon Dubreuil, Kanchipuram inscriptions of Mahendravarma - I, Pondicherry, 1919.

தங்கவேலு. கோ., மு.கா. நூ., ப. 442.

50. பொன்னுசாமி.வ., பல்லவர் காலம். தமிழக வரலாறு (சென்னை: சை.சி.நூ.ப.க.1954)ப. 103

51. திருஞானசம்பந்த சுவாமிகள் தேவாரம் (ஸ்ரீவைகுண்டம்:ஸ்ரீ குமர குருபரன் அச்சகம், 1971) திருக்கச்சியேகம்பம், இரண்டாம் திரு முறை பா.1.ப.651

52. மேற்படி, பா.8. ப.652.

53. திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம், (திருச்சிராப்பள்ளி: சிட்டிபிரஸ், 1949) திருக்கச்சியேகம்பம், நான்காம்திருமுறை பா.3, ப. 421

54. மேற்படி, திருநேரிசை பா.3, ப. 422.

55. மேற்படி, பா.5, ப. 422

56. மேற்படி, பா.10,ப. 423

57. மேற்படி, திருவிருத்தம் பா. 4, ப.424

58. மேற்படி, ஐந்தாம் திருமுறை பா.2, ப.425

59. மேற்படி, பா.4, ப. 425

60. மேற்படி, பா.10,ப.426

61. மேற்படி, பா.11, ப.426

62. மேற்படி, ஐந்தாம்திருமுறை, திருக்குறுந்தொகை பா.7, ப.427

63. மேற்படி, ஆறாம் திருமுறை, வினாவிடைத்திருத்தாண்டகம் பா.10, ப.532

64. சுந்தரர்தேவாரம் மூவர் தேவாரம், மு.கா.நூ., திருக்கச்சியே கம்பம், ஏழாம் திருமுறை பா.1, ப.1301.

65. மேற்படி, பா.1, ப. 1301.

66. மேற்படி, பா.5, ப.1302.

67. மேற்படி, பா.10, ப.1303.

68. ஆசிரியர் இல்லை, ஸ்ரீ காஞ்சி மஹிமை, மூன்றாம் பதிப்பு, (காஞ்சிபுரம்: ஸ்ரீ பக்த ஜன சபா, 1979), பக்.4-5

69. "தேச மெல்லாம் புகழ்தாடுங் கச்சித்
திருவேகம்பன் செம்பொற் கோயில்"

-மாணிக்கவாசகர், திருவாசகம், இரண்டாம் பதிப்பு, (தஞ்சாவூர்: அப்பர் புத்தக நிலையத்தார், 1964), திருப்பொற்கண்ணம் பா.4, ப. 175.

70. A.R.E. 658 of 1909
இராசமாணிக்கனார். மா., மு. கா. நூ., ப. 181.

71. பாலூர் கண்ணப்ப முதலியார், தொண்டை நாட்டுப் பாடல்பெற்ற சிவத்தலங்கள் (சென்னை: ரத்னம் கிளை அச்சகம், 1969) ப. 17.

72. Srinivasan C.R.S, op.cit. p.252

73. A.R.E. 4 of 1893
இராசமாணிக்கனார். மா., மு. கா. நூ., ப.177

74. A.R.E. 197,198,202 of 1905.
இராசமாணிக்கனார். மா., மு. கா. நூ., ப.176.

75. A.R.E. 431 of 1919
இராசமாணிக்கனார். மா., மு. கா. நூ., ப.180.

76. A.R.E. 1 of 1893
Srinivasan C.R. op.cit. p.298.

77. A.R.E. 9 of 1893

78. A.R.E. 10 of 1893.

79. A.R.E. 6 of 1893

80. A.R.E. 2 of 1893. இக் கல்வெட்டு பெருமளவு சிதைந்தும் முடிவுறாமலும் உள்ளது.

81 பட்டினத்தார், திருவேகம்ப முடையார் திருவந்தாதி பட்டினத்தார் பிரபந்தத்திரட்டு, சிங்காரவேலு முதலியார் (உரை.) (சென்னை: திருமகள் அச்சகம், 1956) பா.31, பக். 366-367.

82. மேற்படி, திருவேகம்பமாலை பா. 5, ப. 478.

83. மேற்படி, திருவேகம்ப மாலை, பா.9, ப. 480.

84. "பச்சிலை யிடினும் பத்தர்க் கிரங்கி
மெச்சிச் சிவபத வீடருள் பவனை
முத்தி நாதனை மூவா முதல்வனை
அண்ட ரண்டமு மனைத்துள புவனமும்
கண்ட வண்ணலைக் காட்சியில் கடவுளை
ஏக நாதனை யிணையடி யிறைஞ்சுமின்
போக மாதரைப் போற்றுத லொழிந்தே"

பட்டினத்தடிகள் பிரபந்தத் திரட்டு, சிங்காரவேலு முதலியார் (உரை) கச்சித்திருவகவல், 64-70, ப.463.

85. கந்தபுராணம், மு.கா.நூ., சுப்பிரமணியர் காப்பு, ப.2.

86. சேக்கிழார், மு.கா. நூ., திருக்குறிப்புத் தொண்டநாயனார் புராணம். பா.71, ப. 176

87. "ஈண்டு தொண்டர் பெருகு திரு வேகாம் பரஞ்சென் றெய்தினார்"

சேக்கிழார், மு.கா. நூ., ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணம் பா. 186, ப. 417

88. மேற்படி, பா. 188, ப. 417

89. மேற்படி, பா. 285, ப.426

90. மேற்படி, திருக்குறிப்புத் தொண்ட நாயனார் புராணம் பா. 127, ப.181.

91. மேற்படி, திருஞானசம்பந்தர் புராணம், பா, 993, ப.371.

92. மேற்படி, திருநாவுக்கரசு நாயனார் புராணம் பா. 329, ப.229

93. மேற்படி, ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணம் பா. 193, ப. 417.

94. மேற்படி, பா. 290, ப. 427

95. மேற்படி, திருஞானசம்பந்த நாயனார் புராணம், பா. 997, ப.371.

96. மேற்படி, திருக்குறிப்புத் தொண்ட நாயனார்புராணம் பா.125, ப.181

97. மேற்படி, திருநாவுக்கரசு நாயனார் புராணம், பா.332, ப.228

98. மேற்படி, மு.கா.நூ., ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணம் பா.287, ப.427

99. மேற்படி, திருஞானசம்பந்த நாயனார் புராணம், பா.994, ப.371.

100. மேற்படி,பா. 999, ப.371

101. Annual Report of south Indian Epigraphy (A.R.S.I.E.) No.310, 1909

Srinivasan. C.R., op. cit., p.251.

102. பரமசிவானந்தம், அ.மு.தமிழகவரலாறு, (காஞ்சிபுரம்: முத்தமிழ் அச்சகம், 1958) ப. 312

103. Srinivasan. C.R., op.cit., p. 253.

104. சிவஞான முனிவர்., மு.கா.நூ., தழுவக்குழைந்த படலம், ப-ள் 354-372, பக்.682-687

105. மேற்படி., தழுவக்குழைந்த படலம் பா-ள் 360-372, பக். 684-687.,

106. பூண்டி அரங்கநாத முதலியார், கச்சிக்கலம்பகம், மறுபதிப்பு, (சென்னை: சை.சி. நூ. ப.க., 1959) பா.14, பக், 46-47.

107. மேற்படி, பா.75, ப. 123

108. மேற்படி, பா.88, ப. 139

109. மேற்படி, பா.3, ப. 29

110. மேற்படி, பா.71, ப. 117-118

111. மேற்படி, பா.94, ப. 145-146

112. மேற்படி, பா.82, ப. 133.

113. சாரி, டி.வி. ஆர்., காஞ்சியின் கவின்மிகு கோவில்கள், இரண்டாம் பதிப்பு (காஞ்சிபுரம்: ஸ்ரீ காமாட்சியம்பாள் தேவஸ்தானம், 1982) ப. 67

114. சிங்காரவேலு முதலியார், மு.கா. நூ., ப. 1006. பாலூர் கண்ணப்ப முதலியார்., மு.கா. நூ., ப. 16

115. சோமலெ., 19,20 ஆம் நூற்றாண்டுகளில் காஞ்சியில் நகரத்தார் திருப்பணிகள், காஞ்சிமலர், மு.கா.நூ., ப. 29

116. சங்க காலத்தில் தன வணிகர்கள் காஞ்சிபுரத்தில் வசித்துக் கொண்டிருந்தனர். இவர்கள் மாமல்லத் துறை முகத்தின் மூலம் கடல் வாணிகம் செய்து கொண்டிருந்துள்ளனர். இவர்களுள் சிலர் இடம் பெயர்ந்து காவிரிப்பூம்பட்டினத்திற்குக் குடியேறியுள்ளனர். அவ்வாறு வேறு இடங்களுக்குக் குடியேறியவர்கள் நகரத்தார் என அழைக்கப்படுகின்றனர்.

கம்பன் அடிப்பொடி, நகரத்தாரும் காஞ்சியும்
காஞ்சி மலர், மு. கா. நூ., பா. 20.

# ஏகாம்பரநாதர் கோவிலின் அமைப்பும் சிற்பக் கலையும் ஓவியக் கலையும்

ஏகாம்பரநாதர் கோவிலின் தோற்றமும் வளர்ச்சியும் முதல் இயலில் ஆய்வுசெய்யப்பட்டுள்ளது. அதைத் தொடர்ந்து இக்கோவிலின் அமைப்பு விரிவாக இவ்வியலில் நோக்கப்படுகின்றது. கோவிலின் அமைப்பு முறையினைத் தெளிவு குறித்து,

(அ) கோவிலின் கட்டட அமைப்பு

(ஆ) இக்கட்டடத்தில் காணப்படும்

சிற்பங்களும் ஓவியங்களும் என இரு பிரிவாகப் பிரித்து விளக்கப்பட்டுள்ளது.

## (அ) கோவிலின் கட்டட அமைப்பு

இந்தியக் கோவிலமைப்பு மனித உடலமைப்பின் பிரதி பிம்பமாகவே காணப்படுகின்றது என்பர். மனிதன், மதம் சம்பந்தப்பட்ட கலைகளில் உள்ள விருப்பத்தால் கோவிலைத் தன்னைப் போன்ற வடிவத்திலேயே அமைத்தான்.

இறைவன் எழுந்தருளியுள்ள இடம் 'கோவில்' என்ற பெயராலும், 'ஆலயம்' என்ற பெயராலும் வழங்கப்படுகின்றது. கோவிலைக் கோ + இல் எனப் பிரித்துப் பொருள் காணில் இறைவன் இருக்கும் இடம் எனப் பொருள்தரும். 'ஆலயம்' என்னும் சொல்லை ஆ + லயம் எனப் பிரிக்க, 'ஆ' என்பது 'பசு' என்ற பொருளையும் 'லயம்' என்பது ஒடுங்குதல் என்ற பொருளையும் குறிக்கும். இங்கு, 'பசு' என்பது சீவான்மாவைக் குறிக்கும். எனவே ஆலயம் என்பது சீவனைத் தன்னிடம் ஒடுங்கச் செய்வது எனக் கொள்ளலாம்.

கோவில் அமைப்பு முறை என்பது கோவிற் கட்டடங்கள், மண்ட பங்கள், திருச்சுற்றுகள், அங்குள்ள திருவுருவங்கள், அவற்றிற்கான இடங்கள், யந்திரங்கள் (பொறிகள்), கோவில் கொள்ளுவித்தல் (பிரதிட்டை)[1] முதலியவை அமைக்கப்பட்டிருக்கும் முறை ஆகியன வற்றைக் கொண்டிருக்கும்.

ஏகாம்பரநாதர் கோவிற் கட்டட அமைப்பைச் சிறப்பாக நோக்கு வதற்கு முன் கோவிலின் தத்துவத்தை அறிந்து கொள்வது இன்றி யமையாததாகின்றது.

## கோவில் கட்டட அமைப்பும் அது சுட்டும் தத்துவங்களும்

ஆலய அமைப்பின் முதன்மையான நோக்கம் ஆன்ம தத்து வத்தை உணர்த்துவதேயாகும். அந்த ஆன்மா ஆறு விதமான வேறு பாடுகளைக் கொண்டுள்ளது. ஆன்மாவின் வேறுபாடுகளையும் வேறுபட்ட நிலைகளையும் அவற்றிற்கான காரணங்களையும், 'சர்வ ஞானோத்தரம்' என்னும் ஆகமம் கூறுகின்றது.[2]

ஒருவன் தன் பூத உடம்பைத் தானாகக் கொண்டு, அதுவே தானாக உணர்ந்து ஒழுகும்போது, அவன் பூதான்மா எனப்படுவான். ஒருவன் தன் இச்சைகளையும், விருப்பு வெறுப்புகளையும் தானா கவே கொள்ளும் போது, அவன் 'அந்தரான்மா' எனப்படுவான். நிலம் முதல் ஆண்தன்மை வரையிலுள்ள ஆன்ம தத்துவங்களை அறியும் கருவியாகிய மனத்தையே தானாக உணரும்போது, அவன் தத்து வான்மா எனப்படுவான். நான் பிரம்மம் என்ற முனைப்பு ஒருவனுக்கு உண்டாகும்போது, அவன் சீவான்மா எனப்படுவான். யான், எனது என்ற நிலையை ஒருவன் நீக்கவும் பேரின்ப வீட்டைப் பெறவும் விரும்பி, மந்திரத்தில் மனம் ஒன்றி நிற்கும்போது, அவன் மந்தி ரான்மா எனப்படுவான். இறைவனோடு ஒருவன் இரண்டறக் கலந்து நிற்கும் நிலையில் 'பரமான்மா' எனப்படுவான்.

இந்தியாவில் மேற்கூறிய ஆன்மாவின் ஆறு நிலைகளையும் உணர்த்தும் வகையில் பெரும்பாலான கோவில்கள் விளங்குகின்றன. கோவில்களின் முன் கோபுரம் பூதான்மாவையும் (தூலலிங்கத்தை யும்) மகாபலிபீடம் அந்தரான்மாவையும் (பத்திரலிங்கத்தையும்) கொடிமரம் தத்துவான்மாவையும் (துவஜலிங்கத்தையும்) மூலவர் சீவான்மாவையும் (சதாசிவலிங்கத்தையும்) ஆசிரியர் மந்திரான்மா வையும் (ஆன்மலிங்கத்தையும்) பரவெளிபரமான்மாவையும் (அகண்ட லிங்கத்தையும்) சுட்டிக் காட்டுகின்றன.[3]

ஆலயத்தின் உயிர்நிலையாக விளங்குவது மூலத்தானத்தில் உள்ள திருவுருவமேயாகும். கோவிலில் முதலாகக் காண்பது திருக்

கோபுரம். இக்கோபுரம் கோவிலின் மூலத்தானத்திற்கு அடுத்த நிலையில் சிறப்புற்று விளங்குவதாகும். மூலத்தானம் என்று வழங்கப்படுவது கோவிலின் கருவறையைக் குறிப்பதாகும்.

கோவிலில் கோவில் கொள்ளச் (பிரதிட்டை) செய்யாத திருவுருவங்கள் அருள்புரிவதில்லை என நம்பப்படுகின்றது. எனவே, மூலவர் கோவில் கொள்ளச் செய்யப்பட்டும் கோபுரம் குட முழுக்குச்[4] செய்யப்பட்டும் வழிபடப்படுகின்றது. கோவிலின் கருவறையில் உள்ள திருவுருவம் இறைவனின் அருள் உருவமாகவும் கோபுரம் இறைவனின் அருள் சின்னமாகவும் விளங்குகின்றன.

## கோபுரம்

கோபுரக் காட்சி, கடவுளது காட்சி என்பர். இக்கோபுரம் மனிதனது மயக்கத்தை நீக்கியருள வல்லது. மக்கள் தம் உடம்பைத் தாம் என்ற அகங்காரத்துடன் கொள்வது மயக்கமாகும். இம் மயக்கத்தினால் மக்கள் தம் ஒழுக்கத்தையும் உலகச் சூழல்களையும் வகுத்துக் கொள்கின்றனர். அதனால் போட்டிகளும் சண்டைகளும் உண்டாகின்றன. எனவே, கோவிலுக்குச் செல்லும் மனிதன், கோவிலைக் கண்டவுடன் "நான் இந்த உடம்பல்ல, உள்ளிருக்கும் ஆன்மா" என்ற உண்மையை உள்ளத்திற்கு உணர்த்திக் கொள்ள வேண்டும். அப்போதுதான் நாம் ஒவ்வொருவரும் பிறரைக் காணும் போது, அவர்களை உடம்பாகக் கருதாமல் ஆன்மாவாகக் காணும் தன்மை ஏற்படும். இத்தத்துவத்தை உணர்த்தவே கோவில்களில் கோபுரம் அமைக்கப்படுகிறது. கோவிலில் முதன்மையான வாயிலில் உள்ளது இராச கோபுரம்.

## இராச கோபுரம்

ஒரு கோவிலில் இராசகோபுரம் என்பது அக்கோவிலிலுள்ள மற்றக் கோபுரங்களை விட, உயர்ந்ததாக இருக்கும். இந்தக் கோபுரத்தைத் தூலலிங்கம் என்பர். இதில் தேவர் வடிவங்கள், மனிதர் வடிவங்கள், விலங்குகள், பறவைகள், சிற்றுயிர்கள், சில அருவருக்கத்தக்க வடிவங்கள் முதலியவை இங்குக் காணலாம். உலகத்தில் இன்ன பொருள் இருக்கின்றது. இன்ன பொருள் இல்லை என்று பாகுபடுத்த முடியாது என்னும் கொள்கையை இராச கோபுரம் விளக்குகிறது.

இராசகோபுரத்தின் வாயில்கள் ஒற்றைப்படை எண்ணில்தான் இருக்கும். இவ்வாயில்களை 'நிலைகள்' என்றும் கூறுவர். இராச கோபுரத்தில் மூன்று வாயில்களாக இருப்பன விழிப்பு (ஜாக்கிரத),

கனா (சொப்பன), புலன்கள் செயலற்று உறங்கும் நிலை (சுஷிப்தி) ஆகியவற்றைக் குறிக்கின்றன.

இராசகோபுரத்தில உள்ள ஐந்து வாயில்கள் மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகளைக் குறிக்கின்றன. இராசகோபுரத்தில் உள்ள ஏழுவாயில்கள் மேற்கூறிய ஐம்பொறிகளோடு மனம், அறிவு ஆகிய இரண்டும் சேர்ந்த ஏழினைக் குறிப்பதாகும். இராசகோபுரத்தில் உள்ள ஒன்பது வாயில்கள் மேற்கூறிய ஏழினோடு உள்ளம், முனைப்பு (அகங்காரம்) ஆகிய இரண்டும் சேர்ந்து ஒன்பதைக் குறிப்பதாகும். இறைவன் கோபுரத்திலும் விமானத்திலும் வாயிற் படியிலும் மண்டபங்களிலும் பலிபீடத்திலும் மூல இலிங்கத்திலும் எப்போதும் இருக்கின்றார் என்று சிவாகம நூல்கள் கூறுகின்றன.[5] எனவே கோபுரத்தை வணங்கியே இறைவனை வழிபடுதல் வேண்டும் என்பர். கோயிலின் கோபுரத்திற்குள் காலை வைத்தவுடன் சிவகணங்கள் நம்மிடம் வந்து சூழ்ந்து கொள்வதாக நம்பப்படுகின்றன. அவை திரும்பிச் சென்று, கோபுர வாயிற்படியினைச் சேரும் வரையில், நாம் தூய்மையுடன் இருக்க வேண்டும்.

காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவிலின் இராசகோபுரம் 192 அடி உயரமுடையது[6] இஃது ஒன்பது நிலைகளைப் பெற்று விளங்குகிறது.

ஏகாம்பரநாதர் கோவிலில் உள்ள இவ்வொன்பது நிலைகளை உடைய கோபுரத்தைப் பற்றிச் சிவஞான முனிவர், 'நவக்கிரகங்கள் உலாவித் தங்குவதற்கு ஒன்பது மாளிகைகள் அடுக்காகச் செய்தாற் போல, ஒன்பது வகை மணிகள் கொண்டியற்றப்பட்ட, ஒளி மிகுந்த ஒன்பது நிலைகளைத் தழுவிய கோபுரம்' என்று குறிப்பிட்டுள்ளார்.[7] அதேபோல் கோபுரம் என்பது இறைவனை அன்போடு வணங்கியவர்கள் உயிர் விடுங்காலத்தில் சிவலோகப் பேற்றினை அடைவதற்கு வைக்கப் பெற்ற ஏணியை நிகர்க்கும் என்று சிவஞான முனிவர் கூறி இருப்பது இங்கு நோக்கத்தக்கதாகும்.[8]

பொதுவாக எல்லாச் சிவன் கோவில்களிலும் கோபுரத்தின் நுழைவாயிலின் இடப்பக்கத்தில் விநாயகரும் வலப்பக்கத்தில் முருகரும் இருக்கக் காணலாம். ஆனால் ஏகாம்பரநாதர் கோவிலின் நுழை வாயிலில் இடப்பக்கத்தில் முருகரும் வலப் பக்கத்தில் விநாயகரும் இடம் மாறி காட்சியளிக்கின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது.

இக்கோபுரம் முன்னரே முதலாம் இயலிற்குறிப்பிட்டபடி கி.பி. 1510 ஆம் ஆண்டில் தெலுங்குப் பேரரசனான விசய நகர அரசன் கிருட்டின தேவராயரால் கட்டப்பட்டது.[9] இதற்குச் சான்றாக இராச

கோபுரத்தில் கிருட்டின தேவராயர், அவரது அரசியல் அலுவலர் களோடு ஆராய்ச்சி நிகழ்த்துவது போன்ற உருவங்களைக் காணலாம்.

இக்கோபுரத்தின் வாயில் மிகவும் உயரமாகவும் அகலமாகவும் இருக்கிறது. அதனால் இங்கு இனிமையான காற்று எப்பொழுதும் வீசிக் கொண்டிருக்கிறது. இதனாற்றான் போலும் காளமேகப் புலவர்,

**சற்காற்றுக் கம்பத் தடியில்**[10]

என்று சிறப்பாகப் பாடியுள்ளார்.

தென்திசையில் அமைந்த இந்த இராசகோபுரம் தவிர மூன்று கோபுரங்கள் ஏனைய மூன்று புறங்களிலும் உள்ளன. அவை தென் திசைக் கோபுரம் போலப் பெரியன அல்ல. கோபுர வாயிலைக் கடந்த பின் கோவிலின் திருச்சுற்றைக் காணலாம்.

## திருச்சுற்று (பிராகாரம்)

கோவிலின் கோபுரத்தைக் கடந்ததும் திருச்சுற்றுகள் உள்ளன. கோவிலில் எழுந்தருளியிருக்கும் இறைவனைத் திருச்சுற்று மதிற் சுவர்கள் மறைத்துக் கொண்டுள்ளன.

திருச்சுற்று மதிற்சுவர் மனிதனின் உடம்பைப் போன்றது என்பர். காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவிலில் நான்கு திசைகளிலும் கோபுர வாயில்கள் உள்ளன. எனினும், பக்தர்களின் உள் நுழைவை ஒழுங்கு படுத்தும் நோக்குடன் இக்கோவிலில் முதன்மையான வாயில் எனப் படும் தெற்கு வாயில் வழியாகவே கோயிலுக்குச் சென்று இறை வனை வழிபட முடியும். மனிதனிடத்திலுள்ள ஆன்மாவை எளிதில் யாவரும் அறிய முடியாத முறையில் உடம்பு அமைந்திருக்கிறது. இவ்வாறே கோவில் மதிற்சுவர்கள் இறைவனைக் காண முடியாத வகையில் அமைந்துள்ளன.

திருச்சுற்று வலமாக வரும்போது கருவறையைச் சுற்றிலும் அர்த்தமண்டபம் (சுவாதிஷ்டானம்), மகாமண்டபம் (மணிபூரகம்), அபிடேக மண்டபம் (அனாகதம்), அலங்கார மண்டபம் (விசுத்தி), சபா மண்டபம் (ஆஞ்ஞை) ஆகியவை உள்ளன.

திருச்சுற்று மதிற்சுவர்களின் மறைப்பு உடம்பின் மறைப்பை அறிவித்தலாகும். காஞ்சி ஏகாம்பரநாதர் கோவிலில் ஐந்து திருச் சுற்றுகள் உள்ளன. இந்த ஐந்து திருச்சுற்றுகளும் பருவுடல், (அன் னமயம்), வளியுடம்பு (பிராணமயம்), மனத்தின் தன்மை நிறைவு (மனோமயம்), அறிவுடம்பு (விஞ்ஞானமயம்), இன்ப உறை (ஆனந்த மயம்) என்னும் உடம்புகளைக் குறிக்கின்றன.

இக்கோவிலில் மூன்று திருச்சுற்றுகளை மேற்கொண்ட பின்னர் பலிபீடத்தை அடையலாம்.

## பலிபீடம்

மனிதன் பலிபீடத்தை நெருங்கியதும் தன் இச்சைகளாகிய மிருகங்களைப் பலி கொடுக்கிறான். இதனால் அவன் அந்தரான்ம நிலையினனாகிறான். பலிபீடம் பிணிப்புகளின் நீக்கத்திற்குக் காரண மாகிறது என்பர். எனவே இதனைப் பலிநாதர் எனவும் கூறுவர். கோவிலில் எட்டுத் திக்கு மூலைகளிலும் எட்டுப் பீடங்கள் உள்ளன. அவை இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் என்னும் எட்டுப் பாலகர்களை அறிவுறுத்தும். மேற்கூறிய எட்டுப் பீடங்களுக்கெல்லாம் முதன்மையான (தலைமையான) பீடமே பலிபீடமாகும்.

பலிபீடம் என்பது சூழவுள்ள தேவதைகளுக்குப் பலி (பூசை) போடுமிடம். இவ்விடத்தில் தான் மக்கள் முதலில் வணங்குவர். இங்கு நான் என்ற அகங்காரத்தைப் பலி கொடுத்து, தன்னை மறந்து, தியானம் செய்வர். கோவிலில் பலிபீடத்தையடுத்து அமைக் கப்பட்டுள்ளது கொடிமரம்.

## கொடிமரம்

கொடிமரம் என்பதை வடமொழியாளர் துவஜஸ்தம்பம் என்பர். இது அந்தரான்ம நிலையினனுக்குத் தத்துவான்ம நிலையை உணர்த்தும் அடையாளமாகும்.

பூதான்மா, அந்தரான்மா, தத்துவான்மா ஆகிய மூன்று ஆன்மாக் களும் கொடிமரத்தின் உச்சியில் மூன்று நிலைகளில் அமைக்கப் பட்டுள்ளன. இவற்றுள் பூதான்மா உண்ணல், உடுத்தல், முகர்தல், பார்த்தல், கேட்டல் ஆகிய ஐம்புல நுகர்ச்சிகளை விரும்புவதாகும்.

அந்தரான்மா நிலையில் உள்ளவர்கள் மண், பெண், பொன், ஆகியவற்றை விரும்புவார்கள். இவர்கள் சமுதாயத்தில் எழும் நன்மை, தீமைகளில் பங்கேற்பர். தத்துவான்மா நிலையில் உள்ளவர் கள் மிகவும் விரும்புவது புகழும் போற்றுதலுமாகும்.

கோவிலில் கொடிமரம் மூலத்தானத்திற்கு நேராக நிறுத்தப் பட்டுள்ளது. யார் ஒருவர் கோவிலில் கொடிமரம் வைக்கின்றாரோ, அவர் அந்தப் புண்ணியத்தால் அரனடி சேர்வர் என்பது மக்கள் நம்பிக்கையாகும். கொடி மரத்தின் அருகே பலி பீடமும் நந்தியும் அமைக்கப்பட்டிருக்கும்.

கொடிமரம் அமைக்க சந்தனம், தேவதாரு, செண்பகம், வில்வம், மகிழம் முதலிய மரங்கள் முதல் தரமானவை; மா, பலா, முதலிய மரங்கள் நடுத்தரமானவை; கமுகு, தென்னை, பனை முதலிய மரங்கள் கீழானதரத்தையுடையவை என்பர். கொடிமரத்தில் முப்பத்து மூன்று கணுக்கள் இருப்பது நல்லது என்பர். இதன் நீளம் கோவிலின் உயரத்திற்கு ஏற்ப இருக்கும். தீயவர்களை அகற்றவும் சிவகணங்களையும் தேவர்களையும் அழைக்கவும் பக்தர்களைப் பாதுகாக்கவும் கொடிமரம் நிறுவப்படுகிறது.

சிவன் கோவில் கொடிமரத்தின் மேல்பாகத்தில் எருதாகிய நந்தியையும், தேவி கோவில்களில் சிங்கத்தையும் விட்டுணு கோவிலில் கருடனையும், விநாயகர் கோவிலில் எலியையும் முருகன் கோவிலில் மயிலையும் அமைப்பர்.

கொடிக் கம்பத்தில் 1/5 பாகம் பூமியில் இருக்கும்படி நடுவர். இதன் அடிப்பாகத்திலிருந்து உச்சிவரை ஏழுபாகமாக்கிச் சதுர, கோண, விருத்த வடிவங்களில் அமைப்பர். கொடிக் கம்பத்தின் அடிப்பாகம் சதுரமாக இருக்கும். இது பிரம்மன் பாகமாகும். இதன் மேல் உள்ள பாகம் எண் கோணமாய் இருக்கும். இது விட்டுணு பாகமாகும். இதற்கு மேல் உருண்டு நீண்ட பாகம் உருத்திரனைக் குறிக்கும். இது அழித்தல் தொழிலின் அறிகுறி ஆகும்.[11] எனவே கொடிமரம் மும்மூர்த்தகளையும் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களையும் உணர்த்துகிறது என்பர்.

கொடிக் கம்பத்தின் பீடத்தைப் பத்திரபீடம் என்பர். ஒவ்வொருவரும் கோவிலுக்குச் செல்லும்போது பிணிப்பு அறுமாறு மனத்தைப் பலியிட வேண்டும். இதன் பொருட்டே, ஆன்மாவைப் பாசக்கயிறு சுற்றியுள்ளதை நினைவு கூரும் வகையில் கொடிக்கம்பத்தில் கயிறு சுற்றியிருக்கும்.

கோவ்லில் ஆகம விதிப்படி கொடியேற்று விழா நடைபெறும். கொடிமரம் சிவபெருமானையும் கொடிக்கயிறு திருவருட் சக்தியையும் கொடித்துணி ஆன்மாவையும், தருப்பைக்கயிறு பாசத்தையும் நினைவு படுத்தும் வகையில் அமைப்பர்.

ஆணவம், கன்மம், மாயை ஆகியவற்றின் வயப்படும் ஆன்மா, திருவருள் சக்தியினாலே பாசமற்று, சிவஞான வடிவாகிய இறைவன் திருவடியை அடைதல் என்னும் முறையையே இக்கொள்கை சுட்டிக் காட்டுகிறது.

கோவிலில் மூலவருக்குச் செய்யும் குட முழுக்கு, அலங்காரம் ஆகிய அனைத்தும் கொடிமரத்திற்கும் செய்யப்பட வேண்டும்.

கொடிமரத்திற்கு அடுத்துள்ள அதிகார நந்தி அமைக்கப் பட்டுள்ளதன் நோக்கம் அடுத்து விளக்கப்படுகிறது.

## அதிகார நந்தி

சிவபெருமான் வாகனமாகிய நந்தி, சீவான்மாவைக் குறிக்கின் றது. இறைவனைச் சென்றடைய வேண்டுவது சீவான்மாவின் குறிக் கோள். நந்தி இறைவனையே என்றும் நோக்கி இருப்பது போல, நம் மனமும் எப்போதும் இறைவன் நாட்டத்திலேயே இருக்க வேண்டும் என்னும் கோட்பாட்டை இவ்வாகனம் விளக்கிக் கொண் டிருக்கின்றது. அன்பர்கள் வலம் வரும் போது, வாகனத்தையும் சேர்த்துத்தான், வலம் வருவர். மூலவருக்கும் இந்த வாகனத்திற்கும் குறுக்கே செல் வது முறையன்று என்பர்.

கோவிலில் ஒரே வரிசையில் உள்ள சிவலிங்கம், அதிகார நந்தி, கொடிமரம் ஆகிய மூன்றையும் பதி, பசு, பாசம் என்று சைவ நூல்கள் கூறும்.[12] கோவிலின் கருவறையில் மூலவர் என்கின்ற சிவலிங்க மூர்த்தி எழுந்தருளியுள்ளார்.

### கருவறை

கோவிலில் கருவறை முக்கியமான இடமாகும். இங்குள்ள இலிங்கத்தை வணங்குவதற்கு முன் துவார பாலகர்கள் எனப்படும் வாயிற்காவலர்கள் முன் சென்று, 'அடியேன் உள் சென்று இறைவனை வணங்குவதற்கு இசைவு அளிக்கவும்' என்று வேண்டிக் கொண்டு செல்வதாக மக்கள் நம்பிக்கை. மக்கள் கருவறை முன்னுள்ள வாயிற் படி வரைதான் அனுமதிக்கப்படுகின்றனர்.

கருவறையைக் கர்ப்பக் கிருகம் என்றும் மூலத்தானம் என்றும் சொல்லுவார்கள். இதுவே கோவிலில் முதன்மையான மூர்த்தி எழுந் தருளியுள்ள இடமாகும். நம் இதயத்தில் இறைவன் இருப்பதற் கறிய அடையாளமாக இஃது எண்ணப்படுகிறது.

இறைவன் உலகைப் படைக்க நினைத்த காலத்து, அவரது அருட்சக்தியை மாயை இடத்தே நிலை நிறுத்தச் செய்கின்றார் என்பது கருத்தாகும். கருவறையில் காணும் மூலமூர்த்தி, மனிதனுக் குச் சீவான்மா நிலையை உணர்த்தும் சின்னமாக விளங்குகின்றார். இறைவனை வழிபடுபவர் இம்மூல மூர்த்தியை வணங்கிய பின்னர், உள்திருச்சுற்றுக்களில் உள்ள ஒவ்வொரு கடவுளையும் வணங் குவர். அவ்வாறு வணங்கும்போது அர்த்தமண்டபம், மகா மண்டபம், ஸ்தபன மண்டபம், அலங்கார மண்டபம் ஆகியவற்றைக் காணலாம்.

## அர்த்த மண்டபம்

கோவிலின் இலக்கணம் கர்ப்பக்கிருகம், அர்த்த மண்டபம், மகாமண்டபம் என்னும் மூன்றனுள் அடங்கும். அம்முறைப்படிப் பார்க்குங் காலத்து ஏகாம்பரநாதர் கோவிலின் அரிய அமைப்பு நமக்கு நன்கு புலனாகும்.

இங்கு முதலில் மகாமண்டபமும், பின்னர் அர்த்த மண்டபமும், அதற்குப் பின்னால் கருவறையும் காணப்படுகின்றன. மகா மண்டபத்திலிருந்து, அர்த்த மண்டபத்திற்கு இரண்டு வழிகள் உள்ளன. ஒவ்வொரு வழியிலும் ஏறி, இறங்குவதற்குப் படிகள் அமைந்துள்ளன. பக்தர்கள் அர்த்த மண்டபத்திலிருந்தே மூல மூர்த்தியை வணங்குவர்.

## மகா மண்டபம்

கோவிலில் கருவறைக்குப் பக்கத்தில் உள்ளது அர்த்த மண்டபம். அன்பர்கள் இறைவனை வழிபட அர்த்த மண்டபம் வரைதான் செல்வர். அர்த்த மண்டபத்திற்கு அடுத்துள்ளது மகாமண்டபம். இம் மகா மண்டபத்திற்குச் செல்ல இடம் குறுகலாக அமைக்கப்பட்டுள்ளது.

குருக்கள் என்றும் ஆசாரியர் என்றும் கூறப்படுகின்ற ஆன்ம லிங்கம் இருக்கின்ற இடம் மகாமண்டபம். இறைவனை வழிபட வரும் பக்தர்கள் வழிபாட்டிற்குரிய பொருள்களான பூ, தேங்காய், பழம், வெற்றிலை, பாக்கு ஆகியவற்றினை ஆன்மலிங்கமாகிய குருக்களிடம் கொடுப்பார்கள். அவர் அவற்றினை ஏறறுக் கொண்டு, இறை வழிபாட்டினைச் செய்வார். குருக்கள் இறைவனுக்கு எதிரில் மந்திரங்களைக் கூறுவர். இந்நிலையே மந்திரான்மா நிலையாகும். மந்திரான்மா நிலையை உணர்த்துபவராகிய ஆசிரியரை ஆன்ம லிங்கம் என்பர். மந்திரான்மா நிலையை யடுத்தது பரமான்மா நிலை.

கோவில் அமைப்பிலே கருவறை, உற்சவ மண்டபம், திரு மஞ்சன மண்டபம், அலங்கார மண்டபம், பலிபீடம் ஆகிய ஐந்தும் சிறப்புடன் விளங்கும்.

மேற்கூறியவற்றை வடமொழி வாணர் முறையே துருவபேரம், உற்சவபேரம், ஸ்தபன பேரம், கௌதுகபேரம், பலிபேரம் என்பர். பொதுவாக மேற்கூறியவற்றைப் “பஞ்சபேரங்கள்”என்பர்.

துருவ பேரத்துக்கு மூலத்தானம் என்ற பெயர் வழங்கப்படுகிறது. கோவில் இருதய கமலாலயத்துக்கு எடுத்துக்காட்டாக அமைக்கப்பட்டதாகும்.

இருதயக் கமலாலயம் அகக்கோயில். முன்பு குறிப்பிடப்பட்டு உள்ளவாறு அமைக்கப்பட்டுள்ள கோவிலின் அமைப்பு, புறக் கோவிலாகும்.

தாமரை இலை, மலர் ஆகியவற்றிற்குக் கிழங்கு எவ்வாறு இன்றியமையாததோ அவ்வாறே கோவிலில் உள்ள வடிவங்களில் கருவறையே சிறந்ததாகும். இக்கருவறையிலேயே இறைவர் எழுந் தருளியிருக்கின்றார்.

தாமரைக் குளமானது தாமரைப் பூக்களையும் இலைகளையும் கொடிகளையும் கிழங்குகளையும் கொண்டிருப்பது போல, கோவிலில் கருவறையானது விமானத்தையே நீராகக் கொண்டு, பலிபீடம், திரு மஞ்சன மண்டபம், அலங்கார மண்டபம், ஆகியவற்றை இலை களாகவும் உற்சவ மண்டபத்தை மலர்களாகவும் கருவறையைக் கிழங்காகவும் கொண்டு விளங்குகின்றது என்பர்.

கோவில்களில் உள்ள மூலவர் என்ற சீவான்மாவும் ஆசாரியர் என்ற மந்திரான்மாவும் பற்றி இவ்வியலில் விளக்கப்பட்டிருக்கின்றன. இவற்றையடுத்து பரவெளி என்னும் பரமான்மாவை நோக்குவோம்.

## பரமான்மாவின் தத்துவம்

ஒருவன் பலன் விரும்பாது ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலங்களை நீக்கி, இறைவனுக்குத் தொண்டாற்றும் பொழுதே, இறைவன் அவன் முன்தோன்றி அருள் செய்வான். அந்த அன்பர் என்றும் அருளையே குறியாகக் கொண்டிருப்பார். அவரைத் தக்க நேரத்தில், இறைவன் தமது திருவடியில் சேர்ப்பான். அந்த அருளாளர் இறைவன் திருவடியில் சேர்தலையே பரமான்மா நிலை எனப்படும்.

மேற்கூறியவற்றினால் திருக்கோயில் அமைப்பின் நோக்கமும் அதன் இன்றியமையாத தன்மையும் விளக்கப்பட்டுள்ளது. இவற் றினைத் தொடர்ந்து, காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவிலின் அமைப்பு களையும் அவை அமைந்த நோக்கங்களையும் காண்போம்.

ஏகாம்பரநாதர் கோவில் எல்லாச் சிவன் கோவில்களையும் போலவே கருவறை, அர்த்த மண்டபம், மகாமண்டபம், திருச் சுற்று கள், மதில்கள், பலிபீடம், கொடிக்கம்பம், அதிகார நந்தி ஆகிய வற்றைக் கொண்டு விளங்குகின்றது. இவற்றுள் கருவறை, அர்த்த மண்டபம், மகா மண்டபம் ஆகியன பழைய அமைப்புகளையும் மதில் கள், ஆயிரக்கால் மண்டபம், தீர்த்தங்கள், கோபுரங்கள் ஆகியன புதிய அமைப்புகளையும் கொண்டு விளங்குகின்றன.

ஏகாம்பரநாதர் கோவிலில் ஒருவர் நுழைந்து இறைவனை வழி பட்டு வரும் முறைமைக்கு ஏற்ப கீழே கோவில் அமைப்பு விளக்கப் பட்டுள்ளது.

காஞ்சிக்கு ஒருவர் செல்லும்போது, நெடுந்தொலைவிலிருந்தே முதலில் காண்பது ஏகாம்பரநாதர் கோவிலின் இராசகோபுரமாகும். இக்கோபுரத்தை, எவன் வணங்குகின்றானோ, அவன் பாவத்தில் இருந்து நீங்குகின்றான் என்பது மக்களது நம்பிக்கையாகும். ஏகாம் பரநாதர் கோவிலில் தென்திசை கோபுரமே இராசகோபுரமாக விளங்கு கிறது. நகரின் அமைப்பை நோக்கி, இவ்வாறு இக்கோபுரம் கட்டப் பட்டிருக்கலாம் என எண்ணப்படுகிறது. இராச கோபுரத்திற்கு எதிரில் இரண்டு மண்டபங்கள் உள்ளன. முதலில் உள்ளது பதினாறு கால் மண்டபம். இரண்டாவதாக உள்ளது நான்கு கால் மண்டபம்.

### பதினாறுகால் மண்டபம்

இம்மண்டபத்தை ஆச்சாரி மண்டபம் என்பர். இது முற்காலத் தில் ஆச்சாரியர்களால் கட்டப்பட்டதால், ஆச்சாரி மண்டபம் என்று கூறப்பட்டதென்பர். இது தற்காலத்தில் சித்திர மண்டபம் என்றும் கூறப்படுகிறது. இதில் விநாயகர், முருகர் ஆகிய கடவுளர் உருவங் களும் மான், மயில், யானை, குதிரை, சிங்கம், யாளி ஆகிய விலங்கு களின் உருவங்களும் சித்திர வடிவில் காணப்படுவதால் சித்திர மண்டபம் என்று அழைக்கப்படுகின்றது. இதையடுத்து நான்குகால் மண்டபம் அமைந்துள்ளது.

### நான்குகால் மண்டபம்

இம்மண்டபம் கோவிலுக்குச் செல்லும்போது, இராசகோபுரத் திற்கும் பதினாறுகால் மண்டபத்திற்கும் இடையில் உள்ளது. இதைக் கன்னடியர் மண்டபம் என்றும் கூறுவர். இங்குக் கன்னடியர்களின் மொழிச் சின்னமான பன்றியின் உருவம் மண்டபத்தின் விதானத்தில் உள்ளது.

## ஏகாம்பரநாதர் கோவிலை வலம்வரும் முறை

கோவில் வழிபாட்டு முறையினை நோக்கின், பொதுவாகச் சிவன் கோவில்களை வழிபடுகின்றபோது, பிள்ளையாரில் தொடங்கி, ஆஞ்சநேயரில் முடித்தல் மரபு. இம்மரபு ஏகாம்பரநாதர் கோவிலிலும் பின்பற்றப்படுகிறது.

### விநாயகர்

முதலில் இராசகோபுரத்தின் நுழைவாயிலின் வலப்பக்கமுள்ள விநாயகரை வணங்குவர். இங்கு விநாயகர் மிகப் பெரிய உருவில்

காட்சியளிக்கின்றார். விநாயகர் தனக்கு ஒரு நாயகர் இல்லாதவர். ஒவ்வோர் ஆண்டும் ஆவணிமாதம் அமாவாசை கழிந்த நான்காம் நாள் சதுர்த்தி அன்று விநாயகருக்கு விழாக் கொண்டாடப்படுகின்றது.

இவர் ஆதிமூலப் பொருள். இவரே ஓங்காரத்தின் வரி வடிவம். இறைவனிடத்திலிருந்து முதலில் தோன்றிய ஒலியே ஓங்காரமாகும். எனவே இவரை மக்கள் வழிபட்டு, இடரினை நீக்கி இன்புறுவர். சிவபெருமானை வழிபடுவோரது துன்பங்களை நீக்கவே இவரை இறைவர் தோற்றுவித்தார் என்பர்.

விநாயகரை வணங்கியதும் இராசகோபுரத்தின் வாயில் வழியாகக் கோவிலுக்குச் செல்லலாம். இராசகோபுரத்தின் அமைப்பும் அதன் தத்துவங்களும் முன்னரே விளக்கப்பட்டுள்ளது. திருக்கோவிலில் இராசகோபுரத்திற்குப் பக்கத்தில் மேற்கே ஒரு நந்தவனம் உள்ளது.

## நந்தவனம்

இந்த நந்தவனத்திற்கு 'நடராசர் நந்தவனம்' என்று பெயர். இதில் ஏகாம்பரநாதருக்கு வேண்டிய பூக்களான அலரி, பன்னீர், நந்தியா வட்டம், திருநீர்ப்பத்தி, மாசிபத்திரம், செம்பருத்தி, வெள்ளை நந்தியாவட்டம் ஆகியவை வளர்க்கப்படுகின்றன.

வில்வம், சொர்ணபட்டி, தென்னை, சரக்கொன்றை, வேப்பம், நுணா ஆகிய மரங்கள் வளர்க்கப்பட்டு, அவை பூசைக்குப் பயன்படுகின்றன. கோவிலில் நந்தவனத்தையடுத்து, கம்பைத் தீர்த்தம் உள்ளது.

## கம்பைத் தீர்த்தம்

இத்தீர்த்தம் ஆயிரக்கால் மண்டபத்திற்குச் செல்லும் வழியில் உள்ளது. தற்சமயம் இது குளமாகக் காட்சியளிக்கிறது. இது பூமியின் கீழ்ச் (அந்தர் வாஹினியாக) செல்லுகிறது என்பது நம்பிக்கை.

'கம்பா' என்பதில் 'பா'[13] என்பதற்குப் பொருள் தூய்மை, காப்பு என்பன. 'கம்'[14] என்பதற்கு நீர் என்றும் பொருள் உண்டு. இங்குள்ள நீர் தூய்மையானது. ஆகையால் இதனைக் கம்பாதீர்த்தம் என்பர். கம்பை நதியில் உள்ள நீரைத்தலையில் தெளித்துக் கொண்டால், உயிரைக் காத்து முத்தி தரும் என்று காஞ்சிப் புராணம் பேசுகிறது.[15]

யமுனை, கங்கை, சரசுவதி முதலிய நதிகளும் கம்பை நதிக்கு ஈடாகாது என்றும் இக்கம்பையில் படிந்து வரும் காற்றானது தவழும் இடத்தில் புல், மரங்கள் போன்றவைகளும் பேரின்ப முக்தியடையும் என்றும் கூறுகின்றார் சிவஞான முனிவர்.[16] கம்பைத் தீர்த்தத்திற்கு மேற்கில் ஆயிரக்கால் மண்டபம் உள்ளது.

## ஆயிரக்கால் மண்டபம்

கோவிலின் இராச கோபுரத்தையடுத்து உட்திருச்சுற்றின் இடப் பக்கம் ஆயிரக்கால் மண்டபம் இருக்கிறது. இதில் சிவபெருமான், உமையம்மை ஆகியோரின் உருவங்கள் சிதைந்து காணப்படுகின்றன.

பிற்காலச் சோழர் காலத்தில் (கி.பி.907-1246) கட்டப்பட்ட நூற்றுக்கால் மண்டபம் தான், விசய நகர அரசர்கள் காலத்தில் ஆயிரக்கால் மண்டபமாக மாற்றப்பட்டு விட்டது. ஏனெனில் தற் சமயத்திலுள்ள ஆயிரக்கால் மண்டபத்திலும் கோவிலின் சந்நிதி யினைச் சேர்ந்தாற்போல வடப்பக்கம் உள்ள திருச்சுற்று மாளிகை யிலும் காணப்படும் தூண்கள் சிலவற்றில் விக்கிரம சோழன் (கி.பி. 1118-1135) நூற்றுக்கால் மண்டபம் என்றும் குலோத்துங்கன் நூற்றுக்கால் மண்டபம் என்றும் எழுதப்பட்டிருக்கின்றன. இதில் தற்சமயம் 616 கால்கள் மட்டுமே உள்ளன.

இங்குள்ள சில தூண்கள் போதிகைக்[17] கட்டை இல்லாததாய் இருக்கின்றன. அவ்வாறு போதிகைக் கட்டையிருந்தாலும் அவை சாதாரனமாகவே உள்ளன. ஆயிரக்கால் மண்டபத்தில் யானை கட்டும் மண்டபம் ஒன்று இருப்பதை இன்றும் காணலாம்.

இறைவனுக்கும் இறைவிக்கும் திருமணம் ஆண்டுதோறும் பங்குனி மாதத்தில் உத்திர நட்சத்திரத்தில் ஆயிரக்கால் மண்டபத் தின் மாடியில் தான் சிறப்பாக நடைபெறும். இம்மண்டபத்தின் வடக் கில் பல்லவ கோபுரம் உள்ளது. இக்கோபுரம் பல்லவ மன்னர்களால் கட்டப்பட்டதால் 'பல்லவ கோபுரம்' எனப் பெயர் பெற்றிருக்கின்றது. இக்கோபுரத்தின் வலப்பக்கத்தில் விகட சக்கர விநாயகரும் இடப் பக்கத்தில் சுப்பிரமணியரும் உள்ளனர்.

## விகட சக்கர விநாயகர்

இவர் காஞ்சித்தல விநாயகராவார்.[18] இவரையே கச்சியப்ப சிவாசாரியார்தான் இயற்றிய கந்தபுராணத்திற்குக் காப்புக் கடவு ளாகக் கொண்டுள்ளார்.[19]

கி.பி. 14 ஆம் நூற்றாண்டில் விகட சக்கர விநாயகர் உருவம் ஆயிரக்கால் மண்டபத்தோடு, மண்மேட்டில் மறைந்ததாகக் கூறப்படு கிறது. அக்காலத்தில் யாவராலும் இவர் அறியப்படாமல் இருந்தார். ஏகாம்பர நாதர் உலாவில் இவ்விநாயகரை இரட்டைப் புலவர்கள் காப்புச் செய்யுளாகப் பாடினார்கள். மக்கள் இவ்விநாயகரைக் கண்டிலர். எனவே உலா நூல் அரங்கேற்றம் செய்ய இயலவில்லை.

சில ஆண்டுகள் கழித்து அஃதாவது பதினைந்தாம் நூற்றாண்டின் முற்பகுதியில் சம்புவராயன் என்னும் அரசன் கோவிலைச் சீர்திருத்தம் செய்யவேண்டி, மணல் மேட்டை அகழ்ந்தபோது, ஆயிரக்கால் மண்டபத்துடன் விகட சக்கர விநாயகரையும் கண்டு மகிழ்ந்தனன்[20] எனக் கூறப்படுகின்றது. பின்னர், இரட்டையர்களால் 'ஏகாம்பரநாதர் உலா' அரங்கேற்றம் செய்யப்பட்டது. இவ்வுலா 'இரட்டையர் உலா' என்றும் கூறப்பெறும்.

முற்காலத்தில் விகட சக்கர விநாயகரை வணங்கியே பல்லவ கோபுர வாயிலைக் கடந்து வலப் பக்கமாகத் திரும்பிக் கோவிலுக்கு வரவேண்டும். இதுவே முறையான வழியாகும். சுவாமி புறப்பட்டு இன்றும் இம்முறையான வாயில் வழியாகவே வருவதை நேரில் காணலாம். பிற்காலத்தில் திருப்பணிகள் நடந்த காலத்தில் 'அமைக்கப்பட்ட மதில் வளைவு' இராசகோபுரத்திற்கு நேராக இருப்பதால், இக்காலத்தில் மக்கள் பெரும்பாலும் இவ்வளைவின் வழியாகவே செல்கின்றனர்.

விகட சக்கர விநாயகரை வணங்கியதும் பல்லவ கோபுரத்தின் வாயில் வழியாகவே வந்தால், தெற்குத் திருச்சுற்றில் விட்டுணு பூசித்த 'விண்டு வீச்சுரம்' இருப்பதைக் காணலாம். இத்தலத்தை விஷ்ணுவேச்வரர் மண்டபம்[21] என்பர். இதற்கான ஒரு சிறு வரலாறு உண்டு.

திருப்பாற் கடலிலிருந்து திருமால், தன் மனைவியுடன் தில்லையில் வந்து, இறைவனின் திருநடனம் காணத் தவம் செய்தார். தில்லைநாதன்,

> திருக் காஞ்சியில் எம்மை வழிபட்டு வருவாயாயின்
> இங்கு எமது நடனம் காணப் பெறுவாய்

என்று கட்டளையிட்டருளினார். அவ்வாறே திருமால் காஞ்சியில் இலிங்கம் அமைத்து வழிபட்டுத் திருவருள் பெற்றார் என்றும் பின்னர், அவர் இலக்குமியுடன் தில்லைக் கோவிலுக்குச் சென்று, இறைவனின் ஆனந்த நடனம் காணப் பெற்றார்[22] என்றும் கூறப்படுகிறது. இதனால் திருமால் இறைவனை வழிபட்ட கோயில் 'விஷ்ணுவேச்வரர் மண்டபம்'[23] என்ற பெயரினைப் பெற்று விளங்குகிறது.

இம்மண்டபத்திலுள்ள மூர்த்தியைச் சத்தியநாதர் என்றும் அழைப்பர். சத்தியநாதரை வணங்கியதும் வலப் பக்கமாகச் சிறிது தூரம் வந்ததும் வள்ளல் பச்சையப்ப முதலியார் கட்டிய கலியாண மண்டபத்தைக் காணலாம். இம்மண்டபம் பதினாறு கால்களை

உடையது; அழகான சிற்பங்கள் தூண்களில் காணப்படுகின்றன. இதில் முன்னதாக உள்ள தூண் ஒன்றில் பச்சையப்பர் உருவச்சிலை உள்ளது. பச்சையப்பர் மண்டபத்தைக் கடந்ததும் வட திசையில் சிவகங்கைத் தீர்த்தம் இருக்கிறது.

## சிவகங்கைத் தீர்த்தம்

இத்தீர்த்தம் அழகான படிகளுடன் விளங்குகிறது. இதன் வெளிப்புறம் விசாலமானது. இங்குள்ள இறைவனைப் போலவே இதுவும் சிறப்புடையது. இதில் மூழ்கினவர்கள் எல்லாத் தீர்த்தங்களிலும் மூழ்கிய பயனை அடைவர்[24] என நம்பப்படுகிறது. கோயிலின் வளர்ச்சியைக் காணுங்கால் இது விசயநகர அரசர்களால் உருவாக்கப்பட்டதாகக் கருதப்படுகிறது. பொது மக்களின் ஒத்துழைப்பினாலும் மாநில இந்து அறநிலையத்தின் பேராதரவினாலும் சிவகங்கைத் தீர்த்தம் கி.பி.1971 ஆம் ஆண்டு செப்பம் செய்யப்பட்டது.

திருவேகம்பம் உலகத்தைத் தோற்றுவிக்கும் இடம் என்றால், அதற்கு எதிரே கொடிக்கம்பத்துக்கு அடியில் மேற்கு நோக்கியுள்ள திருக்கச்சி மயானம், உலகத்தை ஒடுக்கிய இடம் என்பர்.

பண்டாசுரன் என்னும் அசுரனை அழித்தற் பொருட்டுச் சிவபெருமான், எல்லா உயிர்களையும் அவிப் பொருளாகச் செய்து, வேள்வியில் இட்டு, ஒடுக்கிய இடம் 'கச்சிமயானம்' என்பர். அந்த வேள்விக்கு உதவிய நெய்க் குண்டத்தையே இறைவன் இங்குள்ள 'சிவகங்கை' என்னும் தீர்த்தமாகச் செய்தான் என்று சிவஞான முனிவர் கூறியுள்ளார்.

> நிகழ்பெரு வேள்விமுற்றி நிறைந்த நெய்க்குண்டந் தன்னைத்
> திகழ் சிவகங்கைப் பேரால் தீர்த்த நாயகமாய்ச் செய்து[25]

என்று காஞ்சிப்புராணம் பேசுகிறது.

காஞ்சிமா நகரில் ஏழு கிழமைகளிலும் நீராட ஏழு தீர்த்தங்கள் உள்ளன. இவற்றில் ஒன்றாகச் சிவகங்கைத் தீர்த்தம் விளங்குகிறது.

> ஞாயிறில் இட்டசித்தித் தீர்த்தத்திலும்[26] (கச்சபேசுவரர் கோவிலில் உள்ளது)
>
> திங்களில் சிவகங்கையிலும் (ஏகாம்பர நாதர் கோவிலில் உள்ளது)
>
> செவ்வாயில் மங்களத் தீர்த்தத்திலும்[27] (கச்சி ஏகம்பரது கோவிலின் தேரடிக்குத் தென்மேற்கில் உள்ளது)

புதனில் சத்திய விரதத்திலும் (திருநெறிக்காரைக்காடு கோவிலில் உள்ளது)

வியாழனில் காயாரோகணத் தீர்த்தத்திலும்[28] (காயா ரோகணக் கோவிலில் உள்ளது)

வெள்ளியில் உலகாணித் தீர்த்தத்திலும் (காமாட்சியம் மன் கோவிலில் உள்ளது)

சனியில் சருவதீர்த்தத்திலும் நீராடுதல் சிறப்புடையது என்பர்.

சருவதீர்த்தம் ஏகாம்பரநாதர் கோவிலுக்கு மேற்கே குளமாக அமைந்துள்ளது. இது, இறைவி காஞ்சியில் செய்த பூசைக்கு இடையில் இறைவன் கட்டளையால் சருவ தீர்த்தங்களும் ஒன்றாய்த் திரண்டு வந்த வெள்ளத்தை, அம்மை தடுத்து நிறுத்தித் தீர்த்தமாகச் செய்தது என நம்பப்படுகிறது. கோவிலில் உள்ள சிவகங்கையில் நீராடி தூய்மையான ஆடை உடுத்திக் கொண்டு, இறைவனை வணங்கச் செல்வர்.

கோவிலில் இறைவனை வழிபட வருவோர் முதலில் பலிபீடம், நந்தி ஆகியவற்றை வணங்கிச் செல்வர் என்பதும் பலிபீடம், நந்தி என்னும் இரண்டின் அமைப்பும், அவற்றின் தத்துவங்களும் முன்னரே விளக்கப்பட்டுள்ளன.

இக்கோவிலில், நந்தியை வணங்கிய பின்னர் கோவிலின் நுழைவாயிலுக்கு இடப்பக்கத்தில் கரிகால் சோழனின் உருவச் சிலையைக் காணலாம்.

இவன் காஞ்சிக்குச் செய்த சீர்திருத்தங்கள் முதல் இயலில் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன. இவனது உருவச் சிலை நான்கு அடி உயரமுடையது. இவன் நீண்ட தாடியுடனும் மற்றவரை வணங் கும் தோற்றத்துடனும் விளங்குகின்றான். இதனால் இவன் அரசனாக இருந்தாலும் அடியார்களை வணங்கும் தன்மையன் என்பது புலப் படுகிறது.

கரிகால் சோழனை அடுத்து கோவிலின் நுழை வாயிலுக்குப் போகும்போது, துவார பாலகர்கள் காணப்படுகின்றனர்.

## துவாரபாலகர்கள்

திருக்கோவிலின் முகப்பு வாயிலில் எட்டு அடி உயரமுள்ள துவார பாலகர்கள் மிகவும் எழிலுடன் காட்சி தருகின்றனர். இவர் களுக்கு நான்கு கைகள் உள்ளன. பொதுவாகச் சிவன் கோயில்களில்

உள்ள வாயிற் காப்போர்களுக்கு நான்கு கைகளும் விட்டுணு கோவில் களில் உள்ள வாயிற் காப்போர்களுக்கு இரண்டு கைகளும் உள்ளன.

கர்ப்பக் கிருகம் எனப் போற்றப் பெறும் உட்பிரகாரத்தின் முகப் பிலும் இரு வாயிற் காப்போர்களின் தோற்றம் சிறப்பாக உள்ளது. மக்களைக் காக்கும் காவல் தெய்வத்தையே இவர்கள் காத்து வரு கின்றனர். மிக்க எழிலுடன் காட்சி தரும் வாயிற்காப்போர்களின் உருவங்கள் சிறந்த சிற்பக் கலைக்குச் சான்றாக விளங்குகின்றன.

கோவிலின் உள்ளே நுழைந்ததும் இடப் பக்கத்தில் பவித்திர மண்டபம் உள்ளது.

## பவித்திர மண்டபம்

பவித்திரம் என்றால் தூய்மை என்பது பொருள். பவித்திர விழா என்னும் தூய்மைப் படுத்தும் விழாவினைக் கோவிலில் இம் மண்ட பத்திலேயே கொண்டாடுவர். எனவே இதைப் பௌத்திர மண்டபம் என்பர். இம்மண்டபத்தூண்களில் மகேந்திர வர்மனுடைய விருதுப் பெயர்கள் காணப்படுகின்றன. கருங்கல்லினால் ஆன தூண்கள் உயர மாகவும் அகலமாகவும் உள்ளன. தூண்களில் சிற்ப வேலைப்பாடுகள் மிகுந்துள்ளன. சான்றாக இறைவன் இறைவியைத் திருமணம் செய்து கொள்ளும் காட்சி அழகாகச் செதுக்கப்பட்டுள்ளது. அத்துடன் இறை வியின் தமையனான திருமால், திருமணத்தின் போது, தன் தங்கை யைத் தண்ணீர் ஊற்றித் தத்தம் செய்யும் நிலையையும் சிறப்பாகக் காணலாம்.

கோவிலின் உள் நுழைவாயிலின் வலப்பக்கத்தில் வாகன மண்டபம் உள்ளது.

## வாகன மண்டபம்

இதில் உற்சவ மூர்த்திகளுக்குரிய இடபங்கள், பெருச்சாளி, மயில், அன்னம், யாளி, புருடாமிருகம் ஆகிய வாகனங்கள் வைக்கப் பட்டுள்ளன.

இவற்றுள் புருடாமிருகவாகனம் தற்சமயம் கரிகாற்சோழன் உருவச் சிலைக்குப் பக்கத்தில் உள்ளது. இம்மண்டபத்தில் அழ கான சிற்பங்கள் உள்ளன. சான்றாக முன்வரிசையில் உள்ள முதற் தூணில், இறைவனின் திருக்கண்களை, இறைவி மூடுகின்ற சிற்பம் உள்ளது. இந்த வாகன மண்டபம் விசயநகரத்து அரசர்களால் கட்டப் பட்டது.[23] இம்மண்டபத்தைச் சேர்ந்தாற்போல் ஓர் அறை உள்ளது. இதில் கோவிலுக்கு வேண்டிய சாமான்கள் வைத்துப் பாதுகாக்கப் படுகின்றன.

பவித்திர மண்டபம், வாகன மண்டபம் ஆகியவற்றைப் பார்த்ததும் கோவிலில் முதல் திருச்சுற்றின் முதலில் அடியவர் மூவர் உள்ளனர்.

## அடியவர் மூவர்

கோவிலில் திருக்குறிப்புத் தொண்ட நாயனார், சாக்கிய நாய னார், ஐயடிகள் காடவர் கோன் நாயனார் ஆகிய மூவருமே அடியவர் மூவர் என்று அமைக்கப்படுகின்றனர். இவர்களுக்காகத் தனிக் கோவில் இல்லை. இம்மூன்று அடியவரும் ஏகாம்பரநாதரை வணங் குவது போல் தோற்றமளிக்கின்றனர். இவர்கள் காஞ்சியில் ஏகாம்பர நாதரை வணங்கிப் பேறு பெற்றவர்களாவர்.

ஐயடிகள் காடவர்கோன் என்ற பல்லவ அரசர் சிறந்த சிவ பக்த ராக இருந்து, அரசாட்சி செய்தவர், பின்னர், இவர் அரசாட்சியை வெறுத்து, சிவத்தொண்டில் ஈடுபட்டுப் பேறு பெற்றவர்.

திருக்குறிப்புத் தொண்டர், துணி துவைத்துக் கொடுக்கும் ஏகாலிய மரபினர். இவர் சிவத் தொண்டினால் பேறு பெற்றவர்.

சாக்கியர் புறவேடத்தில் பௌத்தமதத்தைச் சார்ந்திருந்தாலும் அகத்தினால் மிக்க அன்புடன் சிவவழிபாட்டை மேற்கொண்டு பேறு பெற்றவர். இவ்வாறு மன்னனையும் அடியவர்களையும் இக் கோவி லில் சிலை வடிவாக அமைத்திருப்பது சிறப்புடையதாகும். அடியவர் மூவருக்கு அடுத்து சைவசமய குரவர் நால்வர் உள்ளனர்.

## நால்வர்

கோவிலில் முதல் திருச்சுற்றில் திருஞானசம்பந்தர், திருநாவுக் கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய நால்வர் உள்ளனர். ஏகாம்பர நாதரைப் பற்றித் திருஞானசம்பந்தர் நான்கு பதிகங்களையும் திரு நாவுக்கரசர் ஏழுபதிகங்களையும் சுந்தரர் ஒரு பதிகத்தையும் பாடி யுள்ளனர். சுந்தரருக்கு இடக்கண் பார்வை அளித்த தலம் இதுவே யாகும்.[30]

மாணிக்கவாசகர் இத்தலத்திற்கெனத் தனியாகப் பாடலைப் பாடாவிட்டாலும் தாம் பாடிய திருவாசகத்தில்,

> ஏகம் பத்தின் இயல்பா யிருந்து
> பாகம் பெண்ணோ டாயின பரிசு[31]

என்று கீர்த்தித் திருவகவலிலும்,

> ஏகம் பத்துறை யெந்தாய் போற்றி
> பாகம் பெண்ணுரு வானாய் போற்றி[32]

என்று போற்றித் திருவகவலிலும்,

> தேசமெல் லாம்புகழ்ந் தாடுங்கச்சித்
> திருவேகம் பன் செம்பொற் கோயில்பாடி[33]

என்று திருப்பொற் சுண்ணத்திலும்,

> படமாக என்னுள்ளே தன்னிணைப்போ தவையளித்திங்
> கிடமாகக் கொண்டிருந் தேகம்பம் மேயபிரான்[34]

என்று திருப்பூவல்லியிலும் இத்தலத்தைப் பாடியுள்ளார்.

கோவிலில் நால்வரை வணங்கியதும் கருவரையில் உள்ள திரு வேகம்ப நாதரைக் (மூல இலிங்கம்) காண்பதற்கு மகா மண்டபம், அர்த்த மண்டபம் ஆகியவற்றினைக் கடக்க வேண்டும். மேற்கூறிய மண்டபங்களின் அமைப்புகள் இவ்வியலில் முன்னரே 59ஆம் பக்கத்தில் விளக்கப்பட்டுள்ளது.

**கருவறை**

கோவிலில் கருவறை முக்கியமான இடமாகும். ஏகாம்பரநாதர் கோவிலில் ஆண்டில் ஒருநாள் அஃதாவது இரத சப்தமியன்று மூல இலிங்கத்தின்மீது கதிரொளிப் படுவதற்கு ஏந்தலாக, இதன் கருவறை வாயில் அமைக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

கருவறை வாயிலின் இருபக்கங்களிலும் உலோகத்தால் செய்யப்பட்ட பாவைப் பெண்டிர் விளக்கேந்திய நிலையில் உள்ள தைக் காணலாம். கருவறை முதன்மையான மூர்த்தியை வணங்கும் இடமாகும். நம் இதயத்தில் இறைவன் இருப்பதற்குரிய அடையாளமாக இஃது எண்ணப்படுகிறது. கருவறையில் காணும் மூல மூர்த்தியாக விளங்கும் ஏகாம்பரநாதர், மனிதனுக்குச் சீவான்மா நிலையை உணர்த்தும் சின்னமாக விளங்குகின்றார். இக்கோவிலில் இவர் மண்ணால் ஆகிய வடிவில் விளங்குகிறார்.

மண் இலிங்கமாகவே காட்சி தரும் ஏகாம்பர நாதர், வேதமாகிய மாமரத்தின் கீழ் எழுந்தருளியுள்ளார். வேதமாகவும், வேதம் பொருளாகவும் இருக்கும் இறைவனின் சிறப்பு, இத்தலத்தால் பெருமை அடைகிறது.

இங்குள்ள இறைவன் எளிய மணல் வடிவில் எழுந்தருளியிருப்பது ஒன்றே, அவனது எளிய நிலைமையைக் காட்டும். மணல் இலிங்கமாக இருப்பதால் குடமுழுக்கு அலங்காரங்கள் செய்யப்படுவதில்லை. அபிடேகம் என்பது திருமுழுக்கினையும், அலங்காரம்

என்பது அணிகலன்கள் அணிவித்தலையும் குறிக்கும். மேற் கூறியவை அனைத்தும் ஆவுடையார்க்கே உரியன. இதில் ஆவுடையார்[35] என்பது சக்தியைக் குறிக்கும் இலிங்கத்தின் பீடமாகும். இந்த ஆவுடையார் வடக்கு நோக்கி உள்ளது. இதிலிருந்து கிழக்கு மேற்கு முகம் பார்த்த இலிங்கத்திற்கு ஆவுடையார் வடக்கு நோக்கி இருக்கும் என்றும் தெற்கு வடக்கு முகம் பார்த்த இலிங்கத்திற்கு ஆவுடையார் கிழக்கு நோக்கி இருக்கும் என்றும் அறியப்படுகிறது. இங்குள்ள இலிங்கம் வெள்ளிக் கவசத்துடன் காட்சியளிக்கிறது. இலிங்கத்திற்குப் புனுகு தெளிக்கப்படுகிறது. இலிங்கத்தின் மேல் பன்னிரண்டு கால்கள் கொண்ட விமானம் உள்ளது. இலிங்கத்தின் பின்புறத்தில் இறைவர் சோமாஸ்கந்த வடிவத்தில் எழுந்தருளியுள்ளார்.

இறைவனைப் பல வடிவங்களில் வழிபட்டாலும் இலிங்க வடிவில் வழிபடுதல் சிறப்புடையதாம். இதனை இலிங்க வடிவில் இறைவனை வணங்குவோர் இம்மைப் பயனும் மறுமைப் பயனும் பெறுவர் என்னும் சிவஞான முனிவர் கூற்றால் அறியலாம்.[36] சேக்கிழார் எழுதிய பெரிய புராணத்தில் இலிங்க வடிவில் வழிபட்டுப் பேறு பெற்ற பலரது கதைகள் உள்ளன.[37]

கோவிலில் மூலவரான ஏகாம்பர நாதரை வணங்கியதும் அர்த்த மண்டபம், மகாமண்டபம் ஆகியவற்றினைக் கடந்து வரும் போது, முதல் திருச்சுற்றில் உள்ள அறுபத்து மூன்று நாயன்மார்களின் உருவங்கள் அமைக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

கோவிலில் முதல் திருச்சுற்றில் நால்வருக்கு அடுத்து அகத்தியலிங்கம், மற்றும் இருபத்தேழு இலிங்கங்களைத் தனித் தனியாகவும், மேற்கில் வெள்ளக் கம்பர், காசி விசுவநாதர், சந்தான கணபதி, சௌபாக்கிய கணபதி ஆகிய மூர்த்திகளையும் காணலாம்.

## வெள்ளக் கம்பர்

இவர் மூல இலிங்கத்திற்குத் தெற்கிலும், கிழக்குத் திசை நோக்கியும் இலிங்க வடிவிலும் உள்ளார். இவருக்குத் தனியாகச் சிறு கோவில் அமைக்கப்பட்டுள்ளது. பிரமன் வெள்ளை உள்ளத்தோடு, இறைவனை வழிபட்டுப் பேறு பெற்றமையினால், இவ்விறைவன் 'வெள்ளக் கம்பர்' என்ற பெயரினைப் பெற்றார். இவரை வழிபடுதலால் பெறும் பயனை நான்காம் இயலில் காணலாம்.

திருக்கோயிலில் முதல் திருச்சுற்றில் மூல இலிங்கத்திற்கு வடக்கில் கள்ளக் கம்பரும் பிரளயங் காத்தநாதர் முதலிய திருமேனிகளும் உள்ளன. இவற்றுள் கள்ளக் கம்பருக்குச் சிறுகோவில் கட்டப்பட்டுள்ளது.

## கள்ளக் கம்பர்

உலகத்திலுள் உயிர்களை மயக்குறுத்துவதற்குத் திருமால், ஏகம்பப் பெருமானை வழிபட்டு 'கள்ளக் கம்பர்' எனப் பெயர் பெற்றார். இவரைச் சுந்தர மூர்த்தி சுவாமிகள்,

> கள்ளக் கம்பனை யெங்கள் பிரானைக்
> காணக் கண்ணடி யேன் பெற்ற வாறே[38]

என்று கண் பெற்ற பதிகத்தில் போற்றிப் பாடியுள்ளார். மேலும் இவ ரைப் பற்றிய விளக்கம் நான்காம் இயலில் காணலாம். திருக் கோயி லில் கள்ளக் கம்பருக்கு மேற்கில் மத்தள மாதவேசுவரர், மார்க்கண் டேசுவரர், பிரளயங் காத்த நாதர் முதலிய திருமேனிகளும் உள்ளன. மேற்கூறியவற்றினை அடுத்து நூற்றெட்டுச் சிறு இலிங்கங்களும், நாகலிங்கமும், அறுபத்து மூன்று நாயன்மார்களின் உற்சவ மூர்த்தங் களும் இருப்பதைக் காணலாம்.

## மத்தள மாதவேசுவரர்

திருமால் தில்லையில் இறைவனின் திருநடனம் கண்ட காலத் தில், தானும் நந்தியாதியர் போல் மத்தளம் முழக்க வேண்டும் என்று நடராசப் பெருமானை வேண்டினார் என்பர். நடராசர், திருமாலை நோக்கி மத்தளம் முழக்குவதற்குக் காஞ்சிக்குச் சென்று, சிவலிங் கத்தை நிலைநிறுத்த (பிரதிஷ்டை) வரம் பெற்று இருக்க வேண் டும்." என்று அருள் புரிந்தார். அவ்வாறே திருமால் காஞ்சியில் பெரு மானை வணங்கி, வரம் பெற்றார் என்பர். அப்பொழுது நடராசர், திரு மாலுக்கு, 'மத்தள மாதேசுவரர்' என்ற திருப்பெயரினை அளித்தார். இச்செயலினையே காஞ்சிப்புராணம்,

> இவ்வ ரைப்பிடை நித்தலும் படகம் நீ எழுப்பிட வரம் பெற்றாய்
> செவ்வி மத்தளம் முழக்கவும் விழைதியேல் செப்புதும்
> இதுகேட்டி அவ்வியத்தொகை அறஎறிந் துயரிய ஆன்றவர்
> குழுப்போற்றும் கௌவை யம்புனற் காஞ்சியை முன்புபோற்
> கதுமெனச் சென்றெய்தி[39]

எனக் கூறுகிறது.

மத்தள மாதவேசுவரருக்கு மேற்கில் மார்க்கண்டேசுவரர் எழுந் தருளியுள்ளார். இவருக்குத் தனிச் சந்நிதி இல்லை.

## மார்க்கண்டேசுவரர்

மார்க்கண்டேய முனிவர் ஒரு காலத்தில் நீரினால் உலக ஒடுக்கம் வந்தபோது, அவர் நீரில் நீந்தி வந்தார். அவர் புகலிடம்

காணாது மிகவும் வருந்தினார். அவ்வமயம் காஞ்சிமா நகரிலுள்ள மாமரம், நீரினால் வந்த உலக ஒடுக்கத்தின் மேல் தோன்றிற்று. அவர் அதனைக் கண்டபொழுது, அதன் அடியிலுள்ள திருவேகம்ப நாதரைப் பார்த்து வழிபட்டார். எனவே இவர் வழிபட்ட ஈசுவரன் மார்க்கண் டேசுவரர் எனப்படுகிறார்.

திருக்கோயிலின் முதல் திருச்சுற்றின் தெற்கில் அகத்தீசு வரரைக் காணலாம்.

## அகத்தீசுவரர்

அகத்தியர் கோவிலில் உள்ள இறைவரை வணங்கியவர். ஆகை யால் இந்த இறைவனுக்கு அகத்தீசுவரர் எனப் பெயர். இக்கோவில் சிறு கோவில் வடிவிலுள்ளது. இவரைப் பற்றி ஒரு வரலாறு உண்டு. அஃதாவது இந்தியாவில் உள்ள விந்திய மலையின் இறுமாப்பை அடக்கத் தேவர்கள், அகத்தியரை வேண்டினர். அவர்கள் வேண்டுதல் படி, அகத்தியர் காஞ்சிக்கு வந்தார். காஞ்சிபுரம் சான்றோர்களை உடையதாய் இருந்தது. இவ்விடத்தில் அகத்தியர் தேவர்கள் கூறிய வாறு, தமிழை வெளிப்படுத்த இறைவரை வணங்கினார் என்பர்.

அகத்தியரைப் பற்றி, மற்றொரு நிகழ்ச்சியும் உண்டு. அஃதா வது முன் காலத்தில் கயிலாயத்தில் நடந்த, பரமசிவன் பார்வதி திரு மணத்தைப் பார்க்காமல், அகத்தியர் பொதிய மலைக்கு அனுப்பப் பெற்றார். அவர் கண்டு மகிழவே ஏகாம்பரர் ஏலவார் குழலி திருமணம் ஆண்டுதோறும் பங்குனி உத்திரத்தில் நடக்கிறது என்பர். அந்நிகழ்ச் சியே ஆண்டுதோறும் பங்குனி உத்திர நாளில் பெரிய திருவிழா வாகக் காஞ்சியில் சிறப்புற நிகழ்த்தப்படுகிறது. இந்நிகழ்ச்சியைச் சிவஞான முனிவர்,

அத்தலைக் காஞ்சி யூரும் எமக்குமிக் கினிதாம் அங்கண்
இத்தகு சிறப்பு வாய்ப்ப யாம்புனை வதுவைக் கோலம்
உத்தமக் கிழத்தியோடும் உனக்கெதிர் காட்டுகின்றோம்
மெய்த்தபேரு வகை பூப்ப விழியுறக் காண்டி மற்றும்[40]

என்று பாடியுள்ளார்.

திருக்கோவிலில் மூல இலிங்கத்திற்குப் பக்கத்தில் வடக்கில் சண்டேசுவரரைக் காணலாம்.

## சண்டேசுவரர்

கோயிலில் சண்டேசுவரர் மூலவருக்குரிய கருப்பக் கிருகத்தின் இடப் பக்கத்தில் தனியாகக் கோவில் கொண்டு எழுந்தருளியுள்ளார்.

இவரைப் பற்றித் தெளிவடைய ஒரு சிறு வரலாறு உண்டு. இவர் வரலாறு பலராலும் போற்றப்படுவதாகும். இவர் சிவபக்தியின் சிறப்பினை உணராத, தன் தந்தையின் தாளினை மழுவால் எறிந்தவர். இவர் இறைவனையே தந்தையாகக் கொண்டு, பேறு பெற்று விளங்கியவர். இவரது திருத்தொண்டினைப் பாராட்டி, சுந்தரமூர்த்தி சுவாமிகள்,

மெய்ம்மையே திருமேனி வழிபடா நிற்க
வெகுண்டெழுந்த தாதையை மழுவினா லெறிந்த
வம்மையா னடிச் சண்டிப் பெருமானுக் கடியேன்
னாரூர னாரூரி லம்மானுக் காளே[41]

என்று திருத் தொண்டத் தொகையில் பாடியுள்ளார். கோவிலில் சண்டேசுவரரை வணங்கிய பின்னர் மேற்கு நோக்கியுள்ள நிலாத் துண்டப் பெருமாளைக் காணலாம்.

## நிலாத் துண்டப் பெருமாள்

இத்தலம் ஏகாம்பர நாதரின் எதிரில் உள் திருச்சுற்றின் இடப் பக்கத்தில் தனியாகக் கோவில் அமைந்துள்ளது. பெருமாள் நின்ற கோலத்தில் காட்சி தருகின்றார். இப்பெருமாள் எப்போதும் தன் நெஞ்சில் இருப்பதாய் திருமங்கையாழ்வார் பாடியுள்ளார்.[42]

இப்பெருமாளுக்கு நிலாத் துண்டப் பெருமாள் என்ற பெயர் வந்ததற்கான காரணத்தை நோக்குவோம்.

திருமால் திருப்பாற் கடலைக் கடைந்த காலத்தில், அவரது உடல் எரிச்சலுற்றது. அப்போது இறைவனின் சடையில் உள்ள மூன்றாம் பிறைச் சந்திரன், தம்மீது பட்டமையால் குளிர்ச்சியடைந்தார். இதனாலேயே பெருமாளுக்கு,

நிலாத் துண்டப் பெருமாள்

என்னும் பெயர் ஏற்பட்டது என்பர். இத்தலத்தில் கல் வடிவிலான நிலாத்துண்டப் பெருமாள் திருமேனி வழிபாட்டில் உள்ளது. இதன் பக்கத்தில் உள்ள சுதை வடிவப் பெருமாள் வழிபாட்டில் இல்லை.

நிலாத் துண்டப் பெருமாளுக்கு வலப்பக்கத்தில் சூரிய மூர்த்தி அமைந்துள்ளார். இவருக்குத் தனியாகக் கோவிலில்லை.

## சூரியன்

திருக்கோவிலில் உலகுக்கு ஒளியைத் தரும் சூரியனை வணங்குவது இன்றியமையாததாகும். நாள்தோறும் சூரியனை முதலாகக் கொண்டே கோவில் வழிபாடு, கோவிலில் தொடங்குவது சிறப்புக்

குரியதாகும். சூரிய மூர்த்தியின் வலப்பக்கத்தில் நல்ல கம்பர் எழுந் தருளியுள்ளார். இவருக்குத் தனியாகக் கோவிலில்லை.

### நல்ல கம்பர்

இவர் உருத்திரரால் வணங்கப்பட்டவர். இவரைப் பேரன் பினால் வழிபடுவோர் பெருமானின் திருவடியில் சேர்வர் என்று சிவ ஞானமுனிவர் பாடியுள்ளார்.[43] இவரைப் பற்றிய விளக்கத்தை நான் காம் இயலில் காணலாம்.

நல்ல கம்பரைச் சுந்தர மூர்த்தி சுவாமிகள் கண்பெற்ற பதிகத் தில் பாடியுள்ளார்.[44]

இக்கோவிலுக்கு வருவோர் முதல் திருச்சுற்றைச் சுற்றிக் கொண்டு இரண்டாம் திருச்சுற்றினைச் சுற்றுவர். இரண்டாம் திருச் சுற்றின் முதலில் பிரளயங்காத்த பத்தினி எழுந்தருளியுள்ளாள்.

### பிரளயங் காத்த பத்தினி

இந்த அம்பிகைக்குத் தனியாகக் கோவில் உண்டு. இக் கோவில் பவுத்திர மண்டபத்திற்கு எதிரில் உள்ளது. இங்குள்ள பத்தினிக் கடவுள் உலக ஒடுக்கக் காலத்தும், அழிவு வாராது காக்கும் தெய்வமாதலின்,

> பிரளய கால சக்தி

எனப் பெயர் பெற்றாள் என்பர். இச் சக்தி வழிபட்ட இறைவரை, நினைவு கொள்ளும் வகையில் கோவிலில் பிரளய நாதர் இலிங்கம் உள் திருச்சுற்றின் இடப்புறம் உள்ளது.

நவராத்திரி காலங்களில் பிரளய சக்திக்குச் சிறப்பு அலங் காரங்கள் செய்யப்படுகின்றன. அப்போது இச் சக்திக்கு மிகச் சிறந்த திருமுழுக்குகளும் (அபிடேகங்களும்) வழிபாடுகளும் நடை பெறு கின்றன. காஞ்சியில் வேறு எந்தக் கோவிலிலும் இச் சக்தி இல்லை. உமையம்மை இறைவனை வழிபட்டுக் கொண்டிருக்கும் போது, பெருக்கெடுத்து வந்த வெள்ளத்தை இவள் தடுத்துக் காத்தாள் என்பர்.[45]

பிரளயங் காத்த அம்மனைக் கடந்து வரும் திருச்சுற்றில் வலப் பக்கமாகச் சபாநாயகர் மண்டபம் உள்ளது.

### சபா நாயகர் மண்டபம்

இம்மண்டபம் நாளடைவில் 'நாயகர் மண்டபம்' என்றாகி, இன்று மக்களால் 'நாயர் மண்டபம்' என்று வழங்கப்படுகிறது. இவ்விடத்தில்

தான் ஏகாம்பர நாதரின் உற்சவத் திருமேனி உள்ளது. இம்மண்டபம் சோழர்களால் கட்டப்பட்டது.

பெருவிழாக் காலங்களில் அபிடேகங்களும் அலங்காரங்களும் இறைவனுக்கும் இறைவிக்கும் இம்மண்டபத்தில்தான் செய்யப் படுகின்றன. சுவாமி உலாவுக்குப் புறப்படுகின்ற சிறப்புடையது இம் மண்டபம்.

சபா நாயகர் மண்டபத்தில் உள்ள சுவாமி சோமாஸ்கந்த வடிவில் காட்சி அளிக்கிறார். அவ்வடிவம் இராச சிம்ம பல்லவன் உபயமாகச் செய்து வைக்கப்பட்டது என்பர்.[46] இங்கு உமா மகேசுவரர், சந்திர சேகரர், ஸ்ரீகண்ட சிவாசாரியார் முதலிய உற்சவத் திருமேனிகள் பாது காப்பாக வைக்கப்பட்டுள்ளன. இரு பக்கங்களிலும் பெரிய கண் ணாடிகள் எதிரெதிரில் வைக்கப்பட்டுள்ளன.

சுவாமியின் உற்சவ மூர்த்திக்குக் கற்பூர ஒளி காட்டப்படும் போது, இரு பக்கங்களிலும் பொருத்தப்பட்டுள்ள கண்ணாடிகளைப் பார்த்தால், பல திருவுருவங்களுக்குப் பல தீபங்களைக் காட்டுவது போல் விளங்கும். இக்காட்சி சிறப்புடையதாயிருக்கும்.

ஏகாம்பர நாதர் உற்சவத் திருமேனி இருக்கும் கோவிலின் பின் புறத் திருச்சுற்றின் இடப் பக்கத்தில் பஞ்சமுக விநாயகர் எழுந்தருளி யுள்ளார்.

## பஞ்சமுக விநாயகர்

இத்தலம் 1979 ஆம் ஆண்டு, பிப்ரவரித் திங்கள் முதல் நாள் அன்று நிலை நிறுத்தப் பெற்றது. இங்கே விநாயகரைச் சங்கத் தமிழ் மூன்றினையளிக்க வேண்டுமென்ற நல்வழிப் பாடலையும்[47] விநாயகரைப் போற்றுகின்ற திருமந்திரப் பாடலையும்[48] கல்வெட்டு வடிவில்[49] காணலாம்.

இப்பஞ்சமுக விநாயகரின் வடிவு சிறியதாக இருந்தாலும் மிக்க அழகாகவும், தோற்றத்திற்குக் கவர்ச்சிகரமாகவும் உள்ளது. மேற் போக்காகப் பார்த்தால் மூன்று முக விநாயகரே தெரியும்; ஊன்றிக் கவனித்தால் ஐந்து முக விநாயகரைக் காணலாம். இவ் விநாயகருக்குத் தனியாகக் கோவில் உண்டு.

பஞ்சமுக விநாயகருக்கு எதிரிலுள்ள மேடான பகுதியின் அடிப் பக்கத்தில் ஒரு விநாயகர் உருவம் சிறியதாய் பொறிக்கப்பட்டுள் ளது. இவ்விடமே ஏகாம்பர நாதர் கோவில் கட்டுமானம் செய்வதற்குத் தொடங்கப்பட்ட இடம் எனச் செவிவழிச் செய்திகள் கூறுகின்றன.

பஞ்சமுக விநாயகரைப் பார்த்ததும் திருச்சுற்று வழியாக வந்தால் வலப் பக்கத்தில் மாவடியைக் காணலாம்.

**மாவடி**

இதன் சிறப்பு முதல் இயலிலேயே விளக்கப்பட்டுள்ளது. இறைவனைப் போற்றுவதற்குரிய இடங்களில் சிறப்பாக அமைந்தவை மரங்கள்.

பெரிய ஆலமரத்தடியில் சிவபெருமான் இருப்பவராக மக்கள் கருதினர். முருகனைக் கடம்ப மரத்தடியிலும் சக்தியை வேம்பினடியிலும் கண்டனர். மற்றும் அரசு, வன்னி, வில்வம், முதலிய மரங்களடியிலும் மக்கள் சிவபெருமானை வழிபட்டனர்.[50]

இறைவனுக்கு உருவம் கண்ட பின்னர், மக்கள் அவ்வுருவங்களை இயற்கையில் நிழலையும் அழகையும் தருவனவாகிய, மரங்களின் அடியில், இறைவனை உருவை வைத்து வணங்கினர். இது இயற்கை வழிபாட்டில் தோன்றிய பழக்கம் எனலாம்.

இப் பழக்கத்தினாலேயே சில திருக் கோவில்களில், தலத்திற்கேற்றவாறு ஒரு புனித மரம் வைக்கப்பட்டுள்ளது. இதனை வடமொழியில் 'ஸ்தல விருட்சம்' என்று சொல்லுவர். அஃதாவது அக் கோவிலுக்குச் சிறப்பாக உரிய மரம் என்பது பொருள் ஆகும்.

சிறந்த மரங்களின் பெயரிலேயே சில ஊர்ப் பெயர்களும் அமைந்துள்ளன. எடுத்துக்காட்டாக தில்லை வனம், கடம்ப வனம், பாதிரிப்புலியூர், ஆலங்குடி, ஆலங்காடு, பனையூர், பனந்தாள் ஆகியவற்றைக் கூறலாம்.

காஞ்சி ஏகாம்பரநாதர் கோவிலின் மாமரத்தின் அடிதான் மிகவும் சிறப்புக்கு உரியதாகும். இம்மரம் நான்கு கிளைகளாகப் பிரிந்துள்ளது. இந்நான்கு கிளைகளிலும் காய்க்கும் பழங்கள் நான்கு விதமான சுவையுடையனவாய் இருக்கும் என்பர். இப்பழங்கள் மிகச் சிறியதாகவே காணப்படும்; பழங்களை யாரும் பறிக்க அனுமதிப்பதில்லை; தானாகக் கீழே விழுந்தால் மட்டுமே மக்கள் எடுத்து உண்பர்.

தழைத்துச் சிறப்புடன் விளங்கும் இம்மரம் அளவில் மிகப் பெரியதாக, இந்நாளில் தோற்றமளிக்கிறது. இதன் அடிச் சுற்றளவு 300 அங்குலம், உயரம் 60 அடி, தெய்வீகத் தன்மை உடைய மரமாக இது நம்பப்படுகிறது.

இதனை வலம் வந்து வழிபடுவதற்குரிய சுற்று வழி அமைக்கப்பட்டுள்ளது. இம் மரத்திற்குத் தலைவர் இறைவரே; தலைவி

உமையம்மை. உயிர்கள் கண்டு வழிபட்டுப் பேறு அடைய இறைவரே, உமையம்மையுடன் கூடி, இதன்கீழ் எழுந்தருளியிருக்கின்றார் என்பர். இறைவனுக்குப் பல்வேறு பெயர்கள் இருந்தாலும் இம்மரத்தை யொட்டிப் பிறந்த பெயர் 'ஏகாம்பர நாதர்' என்பதாகும்.

ஏகாம்பர நாதரின் திருப்பெயரை அடிக்கடிக் கூறுவோர்களுக்குத் துன்பங்கள் சேராது; நல்வினைகள் தொடர்ந்து வரும் என்று காஞ்சிப் புராணம் பேசுகிறது.[51]

காஞ்சியில் சிவன் சோமாஸ்கந்த[52] வடிவில் மாவடியின் கீழ் எழுந்தருளியிருக்கிறார். இவர் கையில் சின் முத்திரை[58] காட்சி தருகிறது. கீழே பதஞ்சலி முனிவரும் வியாக்ரபாத முனிவரும் உள்ளனர். இதையடுத்து இறைவி, இறைவனைத் தழுவக் குழைந்த காட்சி உள்ளது. மாவடியைச் சுற்றிலும் விநாயகர், தட்சிணாமூர்த்தி, திருமால், பிரமன், துர்க்கை, ஆகிய உருவங்கள் சிறிய வடிவில் உள்ளன. இந்நாளில் இம்மாவடி சிறந்த வழிபாட்டிற்குரிய இடமாகவும் விளங்குகிறது.

மாவடிக்கு அடுத்து, திருச்சுற்றில் இடப்பக்கமாக மூலையில் ஆயிரத்தெட்டு இலிங்கங்கள் சிறிய அளவினதாக ஒரே கல்லில் அமைக்கப்பட்டுள்ளன.

## ஆயிரத்தெட்டு இலிங்கம்

ஒரு பெரிய இலிங்க அமைப்பில் ஆயிரத்தெட்டு இலிங்கங்கள் செதுக்கப்பட்டுள்ளன. இச்சிவலிங்கம் மிகப்பெரிய அளவில் அமைக்கப்பட்டுள்ளது. இது இராமரால் பூசிக்கப்பட்டது என்பர். இராமர் இராவணனை அழித்ததனால், ஏற்பட்ட பாவத்தைப் போக்கிக்கொள்ள, காஞ்சிக்கு வந்து இந்த இலிங்கத்தை வழிபட்டார் என்பர். ஆயிரத்தெட்டு இலிங்கங்களைக் கொண்ட இந்த இலிங்கத்தைக் கடந்து திருச்சுற்று வழியாக வந்தால், வலப் பக்கத்தில் ஏலவார் குழலி அம்மையைக் காணலாம்.

## ஏலவார் குழலி

ஏலவார் குழலி அம்மையாரின் உருவச் சிலை மிகவும் அழகாக உள்ளது. இந்த ஏலாவார்குழலி அம்மையின் திருவுருவத்தோற்றம் நின்ற கோலத்தில் விளங்குகிறது.

இறைவன் அல்லது இறைவி அவதார காலத்தில் மனிதரைப் போல இன்ப துன்பங்களுக்கு வசமாயிருப்பது இயல்பாகும். இவ்வாறு மனித உருவம் கொண்ட கோலத்தால் 'ஏலவார் குழலி' என்ற பெயரினை அம்மை பெற்றாள்[54] என்பர்.

ஏலம் மானுடப் பெண்கள் பூசிக் கொள்ளும் வாசனைப் பொரு ளாகும். வார்குழல் என்றால் நீண்ட கூந்தல் என்று பொருள்படும். எனவே ஏலவார்குழலி என்பதற்கு வாசனை யூட்டப்பட்ட நீண்ட கூந் தலை யுடையவள் என்பது பொருளாகிறது. இந்த அம்பிகை தேவ சில்பியினால் நியமிக்கப்பட்டு, ஏகாம்பர நாதரோடு சரிநிகராக இருக் கையில் வீற்றிருப்பவர் என்றும் கங்கா தேவியினுடைய அம்சமாக விளங்குபவர் என்றும் இயம்பப்படுகிறது. அம்பிகைக்கு வலப் பக்கத் தில் மாவடி முருகர் எழுந்தருளியுள்ளார்.

## மாவடி முருகர்

முருகர் மாமரத்தின் அடியில் தனிச் சிறு கோயிலில் எழுந்தருளி யுள்ளதால், கச்சியப்ப சிவாசாரியார் கந்தபுராணத்தில், "காஞ்சி மாவடி வைகும் செவ்வேள் மலரடி போற்றி"[55] என்று பாடியுள்ளார். இவ்விடத்தில் முருகர் வள்ளி, தெய்வயானையுடன் இருக்கின்றார். இதன் பின்னே இதே திருமேனிகள் கற்சிலை வடிவத்தில் உள்ளன; வடிவங்கள் மிக அழகுடையனவாகவும் செம்மை உடையனவாகவும் அமைந்துள்ளன. இவ்விடத்தில் அருளாளர்கள் பாடிய திருப்பாடல் கள்[56] அறிவிக்கப்பட்டு இருக்கின்றன.

கச்சியப்ப சிவாசாரியார் ஏகாம்பரத்திலுள்ள முருகனையே பாடி யுள்ளார். அவர் குமர கோட்டத்தில் எழுந்தருளியுள்ள குமரனைப் பற்றிப் பாடிய நூல் கந்த புராணமாயினும் ஏகாம்பரநாதர் கோவி லிலுள்ள மாவடி முருகனை நினைந்து பாடியமை இங்கு அறியத் தக்கது. மாவடி முருகரைக் கண்ட பின் திருச்சுற்றாக வரும்போது இடப் பக்கத்தில் பள்ளி அறையைக் காணலாம்.

## பள்ளியறை

நாள்தோறும் கோவிலில் ஏகாம்பர நாதருக்கு அர்த்த சாம பூசைக்குப் பின்னர் பள்ளியறையில் பூசை நடைபெறும்.

திருவிழாக் காலங்களில் ஏகாம்பரநாதர் வெளியிடங்களுக்குச் செல்வதாக இருந்தால், மாலைப் பூசை நடந்து முடிந்த பின்னரே புறப்படுவார். சுவாமி திரும்பி வந்த பின்னர், அர்த்தசாமம் பள்ளி யறை பூசை ஆகியன நடைபெறும். கோவிலில் பள்ளி அறை யைப் பார்த்த பின்னர், திருச்சுற்று வரும்போது இடப் பக்கத்தில் அம்பல வாணர் சந்நிதி உள்ளது.

## அம்பலவாணர் சந்நிதி

இத்தலம் 11.12.1961இல் செப்பனிட்டுத் தனியழகுடன் இன்று விளங்குகிறது.[57] இதைச் சுற்றி வந்து வழிபட, திருச்சுற்று

அமைந்திருக்கிறது. ஆனந்தத் தாண்டவம் புரியும் நடராசப் பெருமானும் சிவகாம சுந்தரியும் அழகுடன் காணப்படுகின்றனர். இங்குள்ள சபை, 'ஆகாச சபை' [58] எனப்படும்.

பன்னிரண்டு திருமுறைகள் இவ்விடத்தில் தனியாகப் பெட்டி ஒன்றில் வைத்து வழிபடப்படுகின்றன. இதன் முன் மண்டபம் அழகுடன் விளங்குகின்றது.

கோவிலில் உள்ள ஆகாச சபை மற்றத் தலங்களில் உள்ள நடராசரது இடம் போல் இல்லாமல், ஒரு தனிச் சிறப்புப் பெற்றுள்ளது. திருமாலின் தவத்துக்கு இரங்கிச் சிவபெருமான், திருமாலுக்கு 'மத்தளம் முழக்கும் வரம் தந்துள்ளார். இத்துடன் திருமாலுக்கு 'மத்தள மாதவன்' என்ற பெயரையும் நடராசர் அளித் துள்ளார். இவருக்காக நடராசர் காப்பு நடனம் செய்து, களிப்படையச் செய்தது இச் சபையேயாகும் என்பதால் இது சிறப்புப் பெறுகின்றது. கோவிலில் அம்பலவாணரை அடுத்து உள்ளவர் பைரவருடைய தலமாகும்.

## பைரவர்

பைரவர் என்பவர் வயிரவர் எனவும் பெயர் பெறுவர். ஆறு கைகள், தலை, சிவந்த மேனி ஆகியன உடைய[60] இவர் கபாலம், சூலம், உடுக்கை, கயிறு, வாள் என்பனவற்றைத் தாங்கி நிற்பர்.

இவர் ஏகாம்பரநாதரின் கட்டளையால் கச்சிமயானத்தைக் காப்பவர்.[61] இவருக்குத் தனியாகச் சிறு கோவில் உண்டு. பைரவரைக் கடந்து திருச்சுற்றாக வரும் பொழுது இடப்புறத்தில் ஆறு முகக் கடவுளைக் காணலாம்.

## ஆறுமுகர்

ஆறுமுகரின் திருவுருவம் அமர்ந்த கோலத்தில் அழகாகத் தனிக் கோயிலில் காட்சியளிக்கிறது. மிகவும் கூர்ந்து பார்த்தால் தான், இங்கு ஆறுமுகங்களைக் காண முடியும். இச்சந்நிதி மேற்கு நோக்கியுள்ளது. கோவிலில் ஆறுமுகரை அடுத்து, இரண்டாம் திருச் சுற்றில் யாகசாலைகள் உள்ளன.

## யாகசாலை

கோவிலில் இறைவனுக்குச் செய்யப்படும் பூசைக்குரிய பொருள்களைத் தீயில் இட்டு எரிப்பர். அவை இறைவனுக்குத் தூய உணவு (அவிஸ்) என்னும் சிறந்த பொருளாக மாறி அவரிடம் சேர்கின்றது என்பர். யாக சாலையை அடுத்து, திருச்சுற்றின் வலப் புறத்தில் நவக்கிரகம் உள்ளது.

## நவக்கிரகம்

கோவிலில் நவக்கிரகத்தைப் பக்தர்கள் காலையிலும் மாலையிலும் சுற்றிக் கொண்டே இருப்பதைக் காணலாம். இங்குள்ள சுவரில் திருஞான சம்பந்தர் இயற்றிய கோளறு பதிகத்தினைக் கல்வெட்டுகளில் பொறித்திருக்கிறார்கள்.

நவக்கிரகத்தை வழிபட்ட பின்னர், கோவிலின் வாயிலைக் கடந்து, கொடிக்கம்பத்தை நோக்கி வரும்பொழுது, இடப் பக்கத்தில் கோவிலின் புதிய அலுவலக அறையையும் அதற்கடுத்துள்ள பழைய அலுவலக அறையையும் காணலாம். இவற்றினையடுத்து இடபேசுவரரைக் காணலாம்.

## இடபேசுவரர்

இத்தலம் மிகவும் எளிமையான தோற்றத்துடன் விளங்குகிறது. இடபம் வழிபட்ட இலிங்கம் மட்டும் பெரிய வடிவில் காணப்படுகிறது. இடப தேவர் இறைவனை வழிபட்டதற்குரிய காரணமாகச் சிறு வரலாறு ஒன்று சொல்லப்படுகிறது.

அஃதாவது திருமால் வைகுண்டத்தில், தன்னிடத்தில் கர்வமடைந்த கருடனை, அடக்குவதற்காகக் கயிலைக்குச் சென்றார். அவ்விடத்தில் கருடனை இடப தேவரிடத்தில் விட்டு விட்டுத், தான் மட்டும் இறைவனைக் காண உள்ளே செல்லும்போது, இடப தேவருக்குக் குறிப்பால் தமது எண்ணத்தை அறிவித்தார். அவர் குறிப்பை இடப தேவர் ஏற்றுத் தாம் உறங்குபவரைப் போல் உறங்கிப் பெருமூச் செறிந்தார். அந்த மூச்சினால் கருடனை வருத்தினார்.

இச்செயலைச் சிவபெருமான் அறிந்து, 'தன் ஆணை இல்லாமல் மேற்கூறிய செயலைச் செய்ததால்', குற்றமாகக் கருதினார். இக்குற்றத்தைப் போக்கிக் கொள்வதற்குக் காஞ்சியில் எம்மை வழிபட்டுப் போக்கிக் கொண்டு இங்கு வருவாய்' என்றார். அவ்வாறே இடப தேவர் காஞ்சியில் வந்து பூசித்தார் என்பர்.

இத்தலம் கோவிலில் ஒரு ஒதுக்குப் புறமாக இருப்பதால், இதை யாரும் வந்து வழிபடுவதே இல்லை என்று சொல்லலாம். இக்கோவிலைச் சுற்றியுள்ள சுவர்களில், புராண நிகழ்ச்சியைக் கூறும் அழகான சிற்பங்கள் காணப்படுகின்றன.

கோவிலில் இடப தேவரை வழிபட்டதும் கொடிக்கம்பத்தை அடுத்துள்ள பெரிய நந்தி இருப்பதைக் காணலாம்.

## பெரிய நந்தி

இந்த நந்தி, சிறிய மண்டபத்தில் மேற்குத் திசை நோக்கியுள் ளது, இது அமர்ந்துள்ள நிலையில் மிக்க அழகான தோற்றத்துடன் விளங்குகிறது. இஃது ஆறு அடி உயரம் உடையதாயும் ஏழு அடி நீளம் உடையதாகவும் காணப்படுகிறது.

கோவிலில் பெரிய நந்திக்கு இடப் பக்கத்தில் 'வாலீச்சுவரம்' என்ற ஒரு சிறு கோவில் அமைந்துள்ளது.

## வாலீசுவரர்

இத்தலம் மேற்குத் திசை நோக்கியுள்ளது. காஞ்சிமா நகரில் சித்தர்களால் வழிபடப்பட்ட வாயுலிங்கம் பற்றிய விளக்கம் நான்காம் இயலில் 'வாலியின் வழிபாடு' என்னும் பத்தியில் விரிவாகக் கூறப் பட்டுள்ளது. சித்தர்கள் வழிபட்ட இலிங்கத்தையே வாலி வழிபட் டுள்ளார். எனவே இந்த லிங்கம், வாலீசுவரர் என்னும் பெயரினைப் பெற்றுள்ளது.

வாலீசுவரத்திற்கு எதிரில் மேற்குத்திசையில் சிறிது தூரம் வந்தால், திருக்கச்சி மயானேசுவரரைக் காணலாம்.

## திருக்கச்சி மயானேசுவரர்

இத்தலம் ஏகாம்பர நாதர் கோவிலில் தனித்தலமாக அமைந் துள்ளது. இது வைப்புத் தலமாகும்.

வைப்புத்தலம் என்பது தனக்கெனப் பதிகம் பெறாமல், வேறொரு தலப் பதிகத்தில் பாடப்பட்டிருப்பதாகும். திருக்கச்சி மயானத்தின் இறைவனைப் பற்றித் தேவாரம் பேசுகிறது.[62]

கச்சி மயானக் கோவிலின் பின்புறச் சுவரில் இலிங்கோற்பவ வரலாறு எனப்படும், இறைவனின் அடிமுடி தேடிய வரலாறு அமைக் கப்பட்டுள்ளது. அஃதாவது ஒரு கற்பத்தில்[63] திருப்பாற்கடலில் யோக நித்திரை செய்யும் விட்டுணு மூர்த்தியைப் பிரமன், தட்டி எழுப்பி, மகனே எனக் கூறினான். விட்டுணு மூர்த்தி, நீ என் குமரனா யிருக்க, என்னைக் குமரன் என்று கூறியதற்குக் காரணம் என்ன என்று வாதிட்டு இருவரும் போர் செய்தனர். அவ்விருவர் நடுவிலும் சிவ பெருமான் சுயம்பு மூர்த்தமாகத் தோன்றினார் என்பர்.

இருவரும் நம்மில் யார் இந்த உருவின் அடிமுடி அறிகிறார் களோ அவர்களே பெரியர் என உறுதிகொண்டு இருவரும் பன்றியும், அன்னப் பறவையுமாகி, இறைவனின் அடியும் முடியும் தேடினர்.

அவ்வாறு அவர்கள் தேடித் திகைத்திருந்த பொழுது ஓம் என்னும் பிரணவ ஒலி கேட்டது. அப்போது ஐந்து திருமுகங்களுடன்,[64] அந்த இலிங்கத்தின் இடையில் சிவபெருமான் காட்சி தந்தார்.

இத்துடன் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழிலுக்கும் மூலகாரணன் யானே எனக் கூறினார் சிவபெருமான்.[65] இச் சிவனின் கூற்று அவன் முதலும் முடிவும் அற்றவன் என்பதைப் புலப் படுத்துகிறது.

இக்கச்சி மயானத்தின் வரலாற்றினைக் காஞ்சிப் புராணத்தில் சிவஞான முனிவர் விரிவாகக் கூறியுள்ளார்.[66]

இக்கச்சி மயான முன்புறச் சுவர்களில் சிவஞான போதத்தின் பத்துச் சூத்திரங்களும் வண்ண எழுத்துக்களில் எழுதப்பட்டுள்ளன. கச்சி மயானத்தில் உள்ள இறைவனை அப்பர் பெருமான்,

**மைப்படிந்த கண்ணாளுந் தானுங் கச்சி**
**மயானத் தான் வார் சடையான் என்னி னல்லான்**
**ஒப்புடைய னல்லன் ஒருவ னல்லன்**
**ஒரூர னல்லன் ஒருவம னில்லி**
**அப்படியும் அந்நிறமும் அவ்வண் ணமும்**
**அவனருளே கண்ணாகக் காணின் அல்லால்**
**இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன்**
**இவனிறைவன் என்றெழுதிக் காட்டொணாதே**[67]

என்று தமது தேவாரத்தில் பாடியுள்ளார். இச்செய்யுள் இறைவனை அவனருள் காட்டக் காணுதலின்றி வேறு ஒன்றாலும் காண இயலாது என்பதை விளக்குகிறது.

இக்கச்சி மயானத்தின் சிறப்பறிந்த ஒரு சிலரே இதன் முன்பு வீழ்ந்து வணங்குகின்றனர். காஞ்சிபுரம் ஏகாம்பர நாதர் கோவிலைப் பொருத்தவரையில் இங்கு வீழ்ந்து வணங்குவதே சிறப்புடையது என்று ஆன்றோர்கள் கூறுவர். ஆனால் பலரும் பொதுவாகக் கோவிலில் வீழ்ந்து வணங்கும் இடமான பலிபீடத்திற்குப் பக்கத்திலேயே இக்இக்கோவிலிலும் வீழ்ந்து வணங்குகின்றனர்.

பின்னர் பெரும்பாலான மக்கள் செல்லும் மதிலின் வளைவு வழியாக வரும்போது, சிவ சிவ ஒலி மண்டபத்தைப் பார்க்கலாம்.

## சிவ சிவ ஒலி மண்டபம்

இம்மண்டபம் கோவிலின் இராச கோபுரத்திற்கு நேராக உள்ளது. இது 25.2.1960 அன்று ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள் நந்தித்

தம்பிரான் சுவாமிகளின் நன்கொடையால் கட்டப்பட்டது. இதற்குரிய கல்வெட்டினை மேற்கூறிய மண்டபத்தின் முகப்பில் காணலாம். இவ் விடத்திலிருந்தே அன்றாடம் காலையிலும் மாலையிலும், ஓதுவா மூர்த்திகள் பாடல்களைப் பாடுவர். சிவசிவ ஒலி மண்டபத்திற்குப் பக்கத்தில் சரபேச மண்டபம் உள்ளது.

## சரபேச மண்டபம்

இம்மண்டபத்திற்கு நவராத்திரி மண்டபம் என்று பெயர். திரு விழாக் காலங்களில் ஏகாம்பர நாதர் இம்மண்டபத்திற்கு எழுந் தருளு வார். பின்னர் பணிவிடைகளை (உபசாரங்களை) ஏற்று வாகனங் களின் மீது, திருவீதி, உலாவுக்குப் புறப்படுவார். திருக்கோவிலில் சரபேச மண்டபத்தைப் பார்த்ததும், இராச கோபுரத்தின் வழியாக வந்து, அக்கோபுரத்தின் இடப் பக்கத்தில் வலப் பக்கத்தில் மதிலை ஒட்டினாற் போல் உள்ள சுப்பிரமணிய சுவாமியை வணங்குவர்.

## சுப்பிரமணியர்

இக்கடவுள் மிகப் பெரிய உருவத்தில் காணப்படுகிறார். இவ ருடைய துணைவிகளான வள்ளி, தெய்வயானை ஆகியோரும் இங்கு உடன் இருத்தலைப் பார்க்கலாம்.

கோவிலில் சுப்பிரமணியரை வணங்கியதும் ஐந்தாம் திருச் சுற்று எனப்படும் வெளித் திருச்சுற்றில் உள்ள கருங்கல்லாலான திரு மதில், மிக உயரமாகவும், உறுதியாகவும் அமைந்திருப்பதோடு, வெளி வாயில்களில் உள்ள கோபுரங்களை இணைப்பதாகவும் அமைந்துள்ளது.

## மதில்

கோவிலின் மதிற் சுவரின் வெளிப்புறம் முப்பது அடி உயரத்தில் உள்ளது. ஆங்காங்கு எருதுகளின் உருவச் சிலைகள் அமர்ந் துள்ள நிலையில் காணப்படுகின்றன. வெளித் திருச்சுற்றின் தெற்குப் பக்கச்சுவரின் உட்புறங்களில் தீர்த்தங்கரர் சிற்பங்கள் சில பொருத்தி வைக்கப்பட்டுள்ளன.

தீர்த்தங்கரர்களின் உருவச் சிலைகள் எவ்வாறு ஏகாம்பர நாதர் கோவிலுக்கு வந்தன என்பது சரிவரத் தெரியவில்லை. காஞ்சிபுரம் சமணர்கள் வாழ்ந்த ஊர் மட்டுமின்றி அங்கு பல சமணப் பள்ளிகளும் அமைந்திருந்தன. ஒருகால் இக்கோவிலுக்குப் பிற்காலத்தில் திருப் பணி நிகழ்ந்த போது சமணப் பள்ளிகளிலிருந்து தீர்த்தங்கரர் உருவச் சிலைகளைக் கொண்டு வந்து பொருத்தியிருக்கலாம்.

கோவிலின் தென்மதிற் சுவரின் மத்தியில் தெற்குப் பார்த்த வழித்துணை விநாயகர் ஆலயம் உள்ளது.[38] கோவிலை வலம் வந்து வழிபட்டதும் இறுதியாக இராசகோபுரத்திற்கு எதிரில் உள்ள பதினாறு கால் மண்டபத்தின் நடுவில் உள்ள தூண் ஒன்றில் அமைந் திருக்கும் ஆஞ்சநேயரை வணங்கியே வழிபாட்டினை நிறைவு செய்ய வேண்டும் என்பர்.

காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவிலில் பல்வேறு கடவுளருக் கும் அமைந்த திருவுருவச் சிலைகள், அவற்றின் விளக்கம், இக் கோவிலை வழிபடும் முறை ஆகியவற்றை இதுவரையில் கண்டோம். அடுத்து ஏகாம்பரநாதர் கோவிலில் உள்ள சிற்பங்கள், ஓவியங்கள் ஆகியவை நோக்கப்படுகின்றன.

## (ஆ) இக்கோவிலில் காணப்படும் சிற்பங்களும் ஓவியங்களும்

### சிற்பங்கள்

கட்டடக்கலையை விட சிற்பக்கலை நுட்பமானது. மனிதன், விலங்கு, பறவை, மரம், செடி, மலை, கடல், முதலிய இயற்கை உருவங்களையும் கடவுள், அரக்கர் முதலிய கற்பனை உருவங் களையும் அழகுபடக் கல்லிலோ சுதையிலோ வடிவமைப்பதே சிற்பக் கலையாகும்.

காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோயில் முழுமையும் சிற்பக் கலை யில் சிறந்து விளங்குகிறது எனலாம். உயர்ந்து தோன்றும் இராச கோபுரத்திலுள்ள சிற்பங்கள் முதல் உள்ளேயுள்ள சிற்பங்கள் வரை எல்லாச் சிற்பங்களுமே எழிலுற வடிவமைக்கப்பட்டுள்ளன. கோவி லில் உயர்ந்து விளங்கும் தூண்களையும் அவற்றின் மேலும் கீழும் செதுக்கப்பட்ட சிற்பங்களையும் கூர்ந்து நோக்குபவரின் உள்ளம் மகிழ்வது உறுதியாகும். உள் திருச்சுற்றில் ஒரு பக்கத்தின் கோடி யில் நின்று உற்று நோக்குவார், அதன் ஒழுங்கு வரிசையின் அழகை யும் அருமையையும் கண்டு வியப்படைவர்.

கோவிலில் சிற்பக் கலையின் வளர்ச்சி பல்வேறு காலங்களில் ஏற்பட்டிருக்கின்றன. அவற்றைச் சங்க காலம், பல்லவர் காலம், சோழர் காலம், விசய நகர மன்னர் காலம் எனப் பிரித்துக் கொள்ளலாம்.

### சங்க காலம் (கி.பி.3 ஆம் நூற்றாண்டுக்கு முன்னர்)

கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் காஞ்சியைக் கரிகால் சோழன் சீர்திருத்தினான் என்ற செய்தி தவிர சிற்பக் கலை குறித்து இக்காலப் பகுதியில் எவ்விதச் செய்திகளும் கைக்குக் கிட்டவில்லை.

## பல்லவர் காலம் (கி.பி. 610–846)

ஏகாம்பரநாதர் கோவிலின் ஆயிரக்கால் மண்டபத்தில் உள்ள கோபுரம், பல்லவ கோபுரம் என்று கூறப்படுதலால், இக் கோபுரம் பல்லவர் காலத்தைச் சார்ந்ததாகக் கருதப்படுகிறது. இக் கோபுரத்தில் உள்ள மாந்தரின் சிற்பங்கள் எளிமையான தோற்றத்துடனும், தட்டையான மூக்குடனும், அகலமற்ற முகத்துடனும் பரந்த மார்புடனும் விளங்குகின்றன. மேலும் இக் கோபுரத்தில் தெய்வ உருவங்களுடன் பூத கணங்களின் உருவங்களும் உள்ளன.

இக்கோவிலின் பவித்திர மண்டபத் தூண்களில் மகேந்திர வர்மனுடைய விருதுப் பெயர்கள் காணப்படுகின்றன. இந்த மண்டபத்தின் தூண் ஒன்றில் இறைவன் உமா தேவியைத் திருமால் முன்னிலையில் திருமணம் செய்து கொள்ளும் நிகழ்ச்சி அழகாக அமைக்கப்பட்டுள்ளது. திருமண வேள்வி, முனிவர்கள் கை கூப்பி வணங்குதல் முதலியன அதன்கீழ் அமைக்கப்பட்டுள்ளன.

கோவிலில் சபா நாயகர் மண்டபத்தில் சிவபெருமான் சோமாஸ்கந்தர் வடிவில்[69] இருக்கின்றார். இவ்வடிவம் இராச சிம்ம பல்லவனின் உபயமாகச் செய்து வைக்கப்பட்டதாகும்.[70]

கருவறையில் இலிங்கத்திற்குப் பின்னால் சோமாஸ்கந்தர் உருவம்[71] காணப்படுகிறது. இதுவும் இராசசிம்மன் காலத்தில் நிறுவப்பட்டதேயாகும். சோமாஸ்கந்தர் உருவம் மாவடியின் கீழும் இருப்பதைக் கோவிலில் காணலாம்.

இரண்டாம் திருச்சுற்றின் மேல் தளத்தைத் தாங்கும் கற்றூண்களின் மேல் அமர்ந்த நிலையில் காணப்படும், சிங்கங்களின் வடிவங்கள் பேரழகு பயப்பதாய்க் காட்சியளிக்கின்றன. இவை பல்லவர் கால சிற்பக் கலையின் சிறப்பினை உணர்த்தி நிற்கின்றன.

இத்திருச்சுற்றின் இடது பக்கத்தில் உள்ள பத்தாவது தூணில் ஆடவல்லானின் ஆனந்தத் தாண்டவச் சிற்பம் உள்ளது. இச் சிற்பத்தில் ஊன்றிய வலது திருவடியின் கீழ் முயலகன் இருப்பதாய் வடிக்கப்பட்டுள்ளது.

இக்கோவிலின் சிவகங்கைத் தீர்த்தத்தின் மேற்குக் கரையில் அமைந்துள்ளது இடபேசுவரர் மண்டபம். இம்மண்டபத்தின் பீடப் பகுதியில் சிறுத் தொண்ட நாயனார் இறைவனுக்குப் பிள்ளைக் கறி, சமைத்தளித்த வரலாறு, சிற்ப வடிவில் மிக அழகாகச் செதுக்கப் பட்டுள்ளது.

சிறுத்தொண்டரும் அவரது மனைவியாரும் தங்கள் குழந்தையை அரிவாள் மனையில் இட்டு அரியும் காட்சி உள்ளத்தை உருக்கும் நிலையில் உருவாக்கப்பட்டுள்ளது.

மகேந்திரவர்மன் காலத் தூண்கள் பொதுவாக மேற்பகுதியும் அடிப்பகுதியும் நான்கு பக்கமுள்ள சதுரமாகவும், நடுப்பகுதி எட்டுப் பட்டையாகவும் இருக்கும் அவ்விதத் தூண்களை இக்கோவிலிலும் காண முடிகின்றது.

பல்லவர் காலத்தை அடுத்து சோழர் காலத்தில் ஏகாம்பர நாதர் கோவிலில் ஏற்பட்ட சிற்ப வளர்ச்சி குறிப்பிடத்தக்கது.

## சோழர் காலம் (கி.பி. 907–1246)

கோவிலிலுள்ள அகத்தீசுவரர் மண்டபமும், சபா நாயகர் மண்டபமும் சோழர்களால் கட்டப்பட்டன. இம் மண்டபத்தில் உற்சவ மூர்த்திக்கு எதிரில் உள்ள இரு தூண்களில் ஒன்றில் அன்ன வாகனத்தில் ஒரு புறம் ரதியும், மறுபுறம் மன்மதனும், அவ்வாறே எதிர்த்தூணில் கிளி வாகனத்தில், ஒரு புறம் ரதியும், மறுபுறம் மன்மதனும் உள்ள சிற்பங்கள் காணப்படுகின்றன.

இம்மண்டபத்தில் முதற்றூணில் மனு நீதிச் சோழன், நேர்மைக்காகத் தன் ஒப்பற்ற மகனைத் தேர்ச் சக்கரத்தில் இட்டுக் கொல்லும் காட்சி செதுக்கப்பட்டுள்ளது.

பசு ஒன்று, தன் இரு கொம்புகளால் ஆராய்ச்சி மணியை ஆட்டும் நிலையும் சிறப்பாக உள்ளது.

முற்காலச் சோழர் கோவில்கள் பல்லவர் பாணியைப் பின் பற்றிக் கட்டப் பெற்றவை. ஆயினும் சோழருக்குரிய தனிப்பண்புகள் அவற்றின் கண் காணப்படுகின்றன.

முற்காலச் சோழர் சிற்பங்கள், இயற்கையாக உள்ள உருவங்களைப் போலவே அழகாகக் காணப்படுகின்றன. இத்துடன் வெளிப்புற மாடக் குழிகளிலும், மூலைகளிலும் திசைக்குத் தக்கவாறு தெய்வப் பதுமைகள் உண்டு, ஏகாம்பர நாதர் கோவிலிலுள்ள திருக்கச்சி மயானம், அர்த்த மண்டபம் ஆகிய இடங்களில் இத்தகைய அழகான சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. எடுத்துக் காட்டாக, திருக்கச்சி மயானச் சுவரின் வெளிப்புறத்தில் இலிங்கோத் பவர் வரலாறு விளக்கும் சிற்பம் உள்ளதைக் காணலாம். மேலும் பிரமன், தட்சிணா மூர்த்தி ஆகிய உருவங்கள் கச்சி மயானத்தில் அழகாக உள்ளன.

கோவிலில் ஆடவல்லான், சிவகாமியம்மை மற்றும் பிரதோட நாயகர், விநாயகர் ஆகியோருடைய செப்புத் திருமேனிகளும் நாயன் மார்களின் திருமேனிகளும் கவர்ச்சியாக உள்ளன. எல்லாச் செப்புத் திருமேனிகளிலும் சோமாஸ்கந்தர் திருமேனிதான் மிகவும் பழமை யானதாகும்.

கருவறையின் நுழை வாயிலின் இரு மருங்கிலும் வாயிற் காப்போர் இருவரின் உருவங்கள் உள்ளன. அவை இரண்டும் அழகிய மாடக் குழிகளுக்குள் அமைக்கப்பட்டுள்ளன.

காஞ்சி ஏகாம்பர நாதர் கோவிலின் கட்டட அமைப்பு, தமிழகத் தின் தென் பகுதிக் கோவில்களில் காணப்படும் கட்டடக் கலையின் நுட்பங்களையும் அழகினையும் ஒருங்கே கொண்டு விளங்குகிறது. இதில் பிற நாட்டுக் கலைத்திறன் காணப்படவில்லை. இது தமிழ்க் கலைஞரின் மிக நுண்ணிய திறமான கை வண்ணத்தால் உருவானதே யாகும்.

கட்டடக் கலையிலும் சிற்பக் கலையிலும் காஞ்சி ஏகாம்பர நாதர் கோயில் தலை சிறந்து விளங்குகிறது. இக் கட்டடம் முழு வதும் கருங்கல்லாலேயே கட்டப் பெற்ற தென்பதையும் ஈண்டு நாம் நினைவு கூர்தல் அவசியமாகும்.

## விசய நகர மன்னர் காலம் (கி.பி. 1346–1641)

ஏகாம்பர நாதர் கோவிலின் இராச கோபுரம் கி.பி. 1509 ஆம் ஆண்டில் தெலுங்குப் பேரரசன் கிருஷ்ண தேவராயரால் கட்டப்பட்ட தாகும். இதற்கான சான்றுக் குறிப்பு, திருக்கோபுரத்தில் முதல் தளத்தின் மேலுள்ள வெளியிடத்தில் மேற்புறத்தில் அமைந்துள் ளது. அங்கு பக்கத்தில் கிருட்டிண தேவராயர் தம் அரசியல் அலு வலர் களுடன் கூடியிருந்து, அரசு முறை ஆராய்வது போன்ற உருவம் உள்ளது.

திருக்கோவிலில் வாகன மண்டபம் விசய நகர அரசர்களால் கட்டப்பட்டது.[72] விசய நகர மன்னர் காலக் கோவில் என்ற உடனே அதிலுள்ள தூண்களில் படைப்புகளே நினைவுக்கு வரும். அவற்றில் யானை, குதிரை, யாளி, அரிமா, புலி முதலியவற்றையும், அவற்றின் மீது படைகளுடன் நிற்கும் வீரர்களையும் இத் தூண்களிற் காணலாம். குதிரை மீது அமர்ந்த வீரர்களையும் அவர்களுக்கு மேலும் கீழும் பின்புறமுள்ள பல்வேறு உருவங்களையும், சோடனை உறுப்புகளைக் கொண்ட தூண்களையும், விசய நகர மன்னர் காலத்து மண்டபங்களில் காணலாம்.

ஏகாம்பரநாதர் கோயிலின் ஆயிரக்கால் மண்டபத்தில் பல்வேறு பட்ட சிக்கலான முறைகளில் செதுக்கப்பட்ட தூண்கள் விசய நகரப் பாணியில் காணப்படுகிறது. அஃதாவது தூணின் நடுக்கம்பம், வெளிப்படையாகத் தெரியாமல், அதனைச் சுற்றிலும் பல்வேறு சிற்ப உருவங்கள் அமைந்திருக்கின்றன.

இத்தூண்களில் தாவிக் குதிக்கும் குதிரை, சீறி நிற்கும் குதிரை ஆகியவற்றின் உடலுடன் கொடிய கற்பனை விலங்கு ஒன்றின் உடலையுமிணைத்துப் பொறிக்கப்பட்டுள்ளது. இவை இணைவு பெறாது தனியாகவும் வடிக்கப்பட்டுள்ளன.

சில தூண்களைச் சுற்றிலும் விலங்குகளின் உருவங்களுக்குப் பதிலாகப் பல சிறு கம்பங்கள் அமைக்கப்பட்டுள்ளன. விசய நகர காலத் தூண்கள் யாவும் அழகிய வேலைப்பாடுகளையுடையவை யாயினும், ஒரே மாதிரியாகச் செதுக்கப்பட்டவையல்ல என்பது இவ் வுருவங்களை உற்று நோக்குங்கால் புலனாகும். இவற்றிலுள்ள சிற்பங்கள் மனத்தைப் பெரிதும் கவரத் தக்கவை.

சில தூண்களில் உள்ள குதிரைகளில் கடிவாளம், வளையம், சாட்டை முதலிய சிற்றுறுப்புகள் கூட அக்கல்லிலேயே நுட்ப வேலைப்பாட்டுடன் செதுக்கப்பட்டுள்ளன. விசய நகர காலத்துக் கட்டடங்களில் காணப்படும் உருவங்கள் பெரியனவாக உள்ளன.

அக்காலத்தில் குதிரைப்படை வீரர்கள் நிமிர்ந்த தோற்றத் தோடு இருந்தார்கள் என்பதற்கு எடுத்துக்காட்டாக இச்சிற்பங்கள் விளங்குகின்றன.

## கோவிலில் சிறப்பான சிற்பங்கள்

திருக்கோவிலில் நவக்கிரகத்தை வணங்கி, உள்வாயிலுக்கு அருகில் இருக்கும் படிகளில் இறங்கும் போது ஒரு தூணில் நர சிம்மம் இரணியனைப் பிளக்கும் சிற்பமும், எதிர்த் தூணில் பிட்சா டனர் சிற்பமும் சிறப்பானவை.

கோவிலில் வாகன மண்டபத்தின் முதல் தூணில் இறைவன் தியான நிலையில் அமர்ந்து இருக்க, அம்பிகை பக்கத்தில் நின்று, இறைவனின் வலக்கண்ணைத் தன் வலக் கையாலும் இடக் கண் ணைத் தன் இடக்கையாலும் மூடுகின்ற சிற்பம் செதுக்கப்பட்டுள் ளது. இதன்கீழ் நந்தி முனிவர்களின் உருவங்கள் உள்ளன. இதுவும் குறிப்பிடத்தக்க அளவிற்குச் சிறப்பானது.

கோவிலில் உள்திருச் சுற்றில், உலகுக்கு ஒளியைத் தரும் சூரிய பகவானின் சிற்பமும் இங்கு அழகுடன் விளங்குகிறது. உள்

திருச்சுற்றில் இலிங்கங்களும், அவற்றுள் ஒரே கல்லில் ஆயிரத் தெட்டு இலிங்கங்கள் அமைத்திருப்பதும் வியக்கத்தக்கது.

கோவிலில் இராச கோபுரத்திற்கு எதிரில் உள்ள பதினாறுகால் மண்டபத்திலுள்ள தூண்களில் இராவணன் பத்துத் தலைகளுடன் இருப்பதையும், திருமால் ஆமை அவதாரத்தில்சிவலிங்க பூசை செய்வதையும், மார்க்கண்டேயர் தம் இறுதிக் காலத்தில் சிவலிங் கத்தை அணைத்துக் கொள்ள முயலுதலையும், உமையம்மை, சிவ லிங்கத்தைத் தழுவிக் கொள்ளுதலையும், கண்ணப்பர், தம் கண் ணைப் பெயர்த்து சிவலிங்கத்திற்கு வைக்க இருப்பதையும் காட்டும் சிற்பங்கள் அழகானவை.

கோவிலில் நான்கு கால் மண்டபத்தில் விகட சக்கர விநாயகர் சக்கரத்தோடு இருப்பதையும், சிவபிரான் முயலகனைக் காலால் மிதித்தலையும், முருகர் வள்ளி, தெய்வ யானையுடன் மயில் மீது அமர்ந்துள்ள சிற்பங்களுமுண்டு.

ஆயிரக்கால் மண்டபத்தில் உள்ள தூண்களில் சிம்மம், கலசம், தாடி, கும்பம், பலகை, போதிகை முதலிய அமைப்புகளெல்லாம் உடைய சிற்பங்கள் காணப்படுகின்றன. இவற்றுடன் கோவிலில் உள்ள மூர்த்திகள் எல்லாம் அழகிய சிற்ப வேலைப்பாடுகளுடன் விளங்குவதை இந்நாளிலும் காணலாம்.

மேற்கூறிய ஏகாம்பரநாதர் கோவிலின் சிற்பங்கள் கலைஞர் களுக்கேயன்றி, வரலாற்றறிஞர்களுக்கும், ஆராய்ச்சியாளர்களுக் கும், பொதுமக்களுக்கும் அருங்கலைப் பொருளாக மட்டுமின்றி மூலச் சான்றுகளாகவும் விளங்குகின்றன.

கோவிலின் சிற்பக் கலையை அடுத்து ஓவியக் கலை நோக்கப் படுகிறது.

## இ. ஓவியக் கலை

ஓவியம் என்பது தமிழ்ச் சொல். சித்திரம் என்பது வடசொல். ஓவியம் கதை எழுதுவதைப் போன்றது. செதுக்கும் சிற்பத்தையும், பூசும் சதையையும் விடத் தூரிகைகளால் அற்புதமான உருவங்களை உருவாக்குவது அக்கால மக்களுக்கும் அரசர்களுக்கும் கைவந்த கலையாக இருந்துள்ளது.

மக்களுடன் அரச மரபில் வந்தவர்களும் குறிப்பாகப் பல்லவ மன்னர்களும் ஓவியக்கலையைப் பொழுது போக்காகக் கருதினர். அதனால் ஓவியக் கலையின் நுட்பம் நாளுக்கு நாள் பெருகிய தெனலாம்.

மகேந்திரனையும், வேறு சிலரையும் விசித்திர சித்தன், சித்திரக்காரப்புலி என்ற பட்டப் பெயர்களால் அழைக்கப்பட்டதை வரலாற்றின் வாயிலாக அறிகிறோம். மகேந்திரவர்மனே எழுதிய 'தட்சிண சித்ர' என்னும் ஓவியக்கலை நூல் நமக்கு இன்று கிடைக்கவில்லை.

ஏகாம்பர நாதர் கோவிலில் ஓவியக்கலை பல்லவர் காலத்திலும், சோழர் காலத்திலும் சிறந்து விளங்கியதற்குச் சான்றுகள் கிடைக்கவில்லை. விசய நகர மன்னர்களின் ஓவியங்களே ஆங்காங்கு சிலவிடங்களில் காணப்படுகின்றன.

விசய நகர மன்னர்கள் காலத்தில் திருக்கோவிலின் ஆயிரக்கால் மண்டபத்திலுள்ள விதானத்தில் வண்ண ஓவியங்கள் தீட்டப்பட்டன. அவ்வோவியங்கள் இன்று அழிந்து காணப்பட்டாலும், விசய நகர அரசர்கள் காலத்து ஓவியர்களின் கலைத்திறனை எடுத்துக் காட்டுவனவாக உள்ளன. ஏகாம்பர நாதர் சந்நிதியை அடுத்து, வடக்குப் பக்கம், காணப்படும் முதல் திருச் சுற்று மாளிகையில் விசய நகர காலத்து ஓவியங்கள் காணப்படுகின்றன.

விசய நகர காலத்து ஓவியத்துக்கே உரிய மஞ்சள், காவி, கருமை ஆகிய நிறங்கள் ஓவியங்களில் தீட்டப்பட்டுள்ளன. இங்கு உள்ள உருவங்களின் விழிகள் நீண்டும், உருவங்கள் பக்க வாட்டிலும் காணப்படுகின்றன.

மேற்கூறியவற்றுடன் ஆயிரக்கால் மண்டபத்தின் முன்னால் உள்ள யானைக்கட்டி மண்டபத்தில் விதானத்திலும் வண்ண ஓவியம் காணப்படுகிறது. இதை மேற்போக்காகப் பார்த்தால் விசய நகர மன்னர் காலத்துக்கு அடுத்த நாயக்கர் கால ஓவியம் மட்டும் கண்ணுக்குப் புலப்படும்; ஆழ்ந்து பார்த்தால் விசய நகர மன்னர்களின் ஓவியங்களையும் பழுதடைந்த நிலையில் சில இடங்களில் காணலாம்.

கோவிலில் நடராசர் சந்நிதியை அடுத்து வடக்கில்; திருச்சுற்று மாளிகையின் ஒரு பகுதி கவனிப்பார் இல்லாமல் இருந்து வந்தது. இவ்விடத்தில் மரங்களும் முட்செடிகளும் வளர்ந்ததோடு, மனிதர்களே உள்ளே புக முடியாமல் மண்டிக் கிடந்தது.

தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறையும், தமிழ்நாடு அரசு தேசிய மாணவர் படையைச் சேர்ந்த காஞ்சிபுரத்துப் பச்சையப்பன் கல்லூரி மாணவர்களும் ஒருங்கு சேர்ந்து 1977ஆம் ஆண்டு கோவிலில் மண்டிக் கிடந்த பகுதியைச் சீர்திருத்தம் செய்தனர்.

அவ்வாறு செய்கையில் இங்குள்ள திருச்சுற்று மாளிகையின் விதானத்தில் விசய நகர காலத்து வண்ண ஓவியத்தைக் காண முடிந்தது.

மேற்கூறிய ஓவியத்தின் ஒரு பகுதியில் நாட்டியமாடுபவன் ஒருவனின் கையில், கோட்டு வாத்தியம் வைத்துக் கொண்டே ஆடும் நிலையில் வரைந்திருப்பது அழகாக இருக்கிறது. இங்கு பூக்களின் வேலைப்பாடுகளும், பறவைக் கூட்டங்களும் விதவிதமான கட்டங்களும், ஓவியத்தின் சிறந்த கூறுகளாக அமைந்து விளங்குவது கண்கொள்ளாக் காட்சியாகும். இவ்வோவியம் கிருட்டிண தேவராயர் காலத்தில் வரையப்பட்டிருக்கலாம் என்று எண்ணப்படுகிறது.[74]

1956ஆம் ஆண்டு ஏகாம்பரநாதர் கோயிலை மயிலை சீனி. வேங்கடசாமி அவர்கள் பார்வையிட்டதைத் தம் நூலில் குறிப்பிட்டுள்ளார்.[75] அஃதாவது ஏகாம்பரநாதர் கோவிலில் பவித்திர மண்டபத்தில் அன்னப் பறவை, மயில், பர்ர்வதி, பரமேசுவரன், இலக்குமி, கலைமகள் முதலிய ஓவியங்களின் சிதைவுகளைத் தாம் கண்டதாகக் கூறியுள்ளார். அவை சிறிது அழிந்து போயிருந்தாலும் பெரிதும் நன்னிலைமிலேயே இருந்தனவாம்.

கோயிலார் வண்ணங்கள் அழிந்து போன இடங்களில் கோடுகள் 'புனையா ஓவியமாக' நிறைவு செய்திருந்தனர்' என்று குறிப்பிட்டுள்ளார். அவை பிற்காலத்து ஓவியங்கள்தான் என்று அவர் சிறப்பாக அறிவித்துள்ளார்.

ஏகாம்பர நாதர் கோவிலின் அமைப்பு, சிற்பக் கலை, ஓவியக் கலை என்பன பற்றி மேலே தரப்பட்டது. இதையடுத்து கோவிலின் உடைமைகளையும் ஆட்சி முறையையும் குறித்து ஆய்வு செய்வதாக அடுத்த இயல் அமைந்துள்ளது.

**அடிக்குறிப்புகள்**

1. பிரதிட்டை - கோயில் கொள்ளுதல், நீலாம்பிகை. தி., வட சொற்றமிழ் அகரவரிசை மறுபதிப்பு, (சென்னை: சை.சி. நூ. ப.க. 1965), ப. 249.
2. முத்துப்பிள்ளை, இந்திய ஆலயங்கள், (சென்னை: அருணோதயம், (1983) .ப.12)
3. செந்துறைமுத்து, திருக்கோவில்களும் வழிபாட்டுமுறைகளும், (சென்னை: வெற்றி அச்சகம், 1982) ப. 20.
4. யாகசாலையில் மூர்த்திகளுக்குரியதாக வைத்துப் பூசிக்கப்பட்ட குடத்து நீரால், அந்தந்த மூர்த்திகளை முழுக்கிடுவதனால் அந்த மூர்த்தி அந்த விக்கிரகத்தில் எழுந்தருளுகிறார் என்பர்.

5. செந்துறைமுத்து., மு.கா. நூ., ப. 25

6. இராதாகிருஷ்ண பிள்ளை, அறம் காத்த அரண்கள் (சென்னை: அல்லயன்ஸ் பிரஸ், 1961) ப. 14.

7. சிவஞானமுனிவர், காஞ்சிப்புராணம், மு.கா. நூ., திருநகரப் படலம் பா.112, ப.86.

8. மேற்படி, திருநகரப் படலம் பா.114, ப. 86.

9. பரமசிவானந்தம் அ.மு., மு. கா.நூ., ப. 312.

10. "அப்பா குமரகோட் டக்கீரை செவ்விலிமேட்
டுப்பாகற் காய்பருத் திக்குளநீர் - செப்புவா
சற் காற்றுக் கம்பத் தடியிற் றவங்கருமா
றிப்பாய்ச்சல் யார்க்கு மினிது."

இராமசாமிப்புலவர், சு.ஆ., தனிப்பாடற்றிரட்டு

முதற்பகுதி (சென்னை: சை.சி.நூ. ப.க. 1969) பா. 359, ப.131.

11. ஆறுமுகநாவலர், கே., இந்துமத இணைப்பு விளக்கம், மூன்றாம் பதிப்பு, (நாகர்கோயில்: எம்.எஸ்.எம். அச்சுக்கூடம், 1975), பக். 46-47.

12. முத்துப்பிள்ளை, சி., இந்திய ஆலயங்கள் I (சென்னை: உஷா பவர் பிரஸ், 1983) ப.17.

13. கழகத் தமிழ் அகராதி, மு.கா.நூ., ப. 657.

14. "கம்" என்ற சொல்லுக்கு நீர், உயிர், தலை, வீட்டின்பம், வான், மேகம் ; ஆகிய பொருள்கள் உள்ளன.
கழகத் தமிழ்க் கையகராதி, காழிசிவ கண்ணுசாமிப்பிள்ளை (பதி.) (சென்னை: சை.சி.நூ.ப.க., 1960) ப. 107.

15. "யாண்டி றப்பவர் கட்கும் இப்புனல் இறுதி வேளையில் உச்சியில்
தீண்டு மேல் அவர் முத்தி எய்துவர்"

சிவஞான முனிவர்., மு.கா. நூ., திருவேகம்பப் படலம், பா. 52, ப. 575.

16. "கங்கை மாநதி யமுனை வாணி முதல்க வின் பெறு நதியெலாம்
பொங்கு வெண்டிரை ஏற்று கம்பை நறும்பு னற்கிணை எய்துறா"

மேற்படி பா.50, ப. 575. திருவேகம்பப் படலம்.

17. போதிகை (Corbel) : இதனைத் தண்டையக்கட்டு என்பர். இது கட்டடத்தில் பளுத் தாங்குவதற்குச் சுவரில் ஏந்தலாக வைத்து இணைக்கப்படும். இது கட்டையாலும் கல் துண்டாலும் ஆனது. இத்தகைய கற்றுண்டை உத்தரத்தில் கீழும் நீட்டுத் தாங்கலாக வைப்பர். இந்தியக் கலை வரலாறு, மு.கா. நூ., தங்கவேலு, கோ. (பதி), ப. 246. கழகத் தமிழ்க் கையகராதி, மு.கா.நூ., ப. 261.

18. முன்னொரு காலத்தில் தக்கன் என்பவன் யாகம் செய்துள்ளான். இவன் செய்த யாகம் அழிந்தபோது, விட்டுணு விடுத்த சக்கரத்தை வீரபத்திரக் கடவுள் பூண்ட வெண்டலை யொன்று கௌவியது. அதனைப் பெற்றத் தருவதற்குத் திருமாலின் சேனாதிபதியான விடுவ சேனர் காஞ்சிமா நகரை அடைந்தார். அங்கே அவர் சிவ லிங்கத் தாபனம் செய்து பூசித்தார். பூசிக்கும் போது வீரபத்திரரைக் காண நேர்ந்தது. அவரிடம் தம் கருத்தைத் தெரிவித்தார். அவர் அதனைத் தன் தலைமாலை விழுங்கி விட்டதாகக் கூறினார். அதனைப் பெற்றுக் கொள்வதற்கு வேண்டிய முறையைச் செய்க என்றார். உடனே விடுவசேனர் "கோணங்கி" என்னும் கூத்தை ஆடினார். இக் கூத்தைக் கண்டு, சக்கரத்தை விழுங்கிய தலை சிரித்தது. அப் பொழுது சக்கரம் வெளியேறியது.

விகடக் கூத்தைக் காண விரும்பிய விநாயகர் அச்சக்கரத்தை எடுத்துத் தான் விழுங்கி விட்டார். அதைப் பார்த்து விநாயகர் சிரித்த போது, அச்சக்கரம் வாய் வழியாக வந்து விழுந்தது. அதனை எடுத்துக் கொண்டு, விடுவசேனர் திருமாலுக்கு அளித்தார். விகடக் கூத்தினை விநாயகர் விரும்பிய காரணத்தால் 'விகட சக்கர விநாயகர்' என்னும் பெயர் பெற்றார்.

சிவஞானமுனிவர், மு.கா.நூ., விடுவசேனப் படலம் பா-ள் 2-23, பக்.358-364.

19. "திகட சக்கரச் செம்முக மைந்துளான்
சகட சக்கரத் தாமரை நாயக
னகட சக்கர விண்மணி யாவுறை
விகட சக்கரன் மெய்ப்பதம் போற்றுவாம்".

கச்சியப்பசிவாசாரியார், மு.கா.நூ., விநாயகர் காப்பு பா.1, ப.1.

20. சிங்காரவேலு முதலியார், மு. கா.நூ., ப. 167.

21. ஆளவந்தார் ஆதீன கச்சாலையர், காஞ்சிப்புராணம், இராமராசன், எஸ்.கே., (பதி.) சென்னை: இராஜன் அண்டு கோ, 1993) ப.20

22. சிவஞான முனிவர், மு. கா.நூ.,தழுவக் குழைந்த படலம், பா.178, ப.638

23. ஸ்ரீ காஞ்சி மஹிமை, மு. கா.நூ.,ப.16

24. சிவஞான முனிவர், மு. கா.நூ., கச்சிமயானப் படலம் பா.21, ப. 560

25. மேற்படி பா.21, ப.560,

26. இட்ட சித்தித் தீர்த்தத்தில், தருமதீர்த்தம், அருத்த தீர்த்தம், காம தீர்த்தம், முத்திதீர்த்தம் என்னும் நான்கு தீர்த்தங்கள் உள்ளன என்பர்.

27. மங்களத் தீர்த்தம் என்பது அம்பிகையின் தோழியர்களில் 'மங்கள' என்பவளால் உண்டாக்கப்பட்டது என்பர்.

28. காயாரோகனத் தீர்த்தம் என்பது 'தாயார்குளம்' என வழங்கப்படுகிறது. இத்தீர்த்தம் இறந்தார் கடன் செய்தற்குச் சிறந்தது. வேகவதியாற்றின் தென் கரையில் காயாரோகணத் தலத்திற்கு நேரில் உள்ளது.

29. பாலூர் கண்ணப்ப முதலியார்., மு. கா.நூ.,ப.16.

30. "காலகாலனைக் கம்ப னெம்மானைக்
காணக்கண் ணடியேன் பெற்றவாறே"

சுந்தரர் தேவாரம் மூவர் தேவாரம் மு.கா.நூ., திருக்கச்சியேகம்பம், ப. 1301.

31. மாணிக்கவாசகர், திருவாசகம், புலியூர்க்கேசிகன் (பதி.), (சென்னை: அல்லயன்ஸ் கம்பெனி, 1963) கீர்த்தித்திருவகவல் வ-ள் 77-78, ப-33.

32. மேற்படி., போற்றித் திருவகவல் வ-ள் 151-152, ப. 64

33. மேற்படி., திருப்பொற்சுண்ணம் பா.4, ப.175.

34. மேற்படி., மு.கா. நூ., திருப்பூவல்லி பா. 14, பா. 213.

35. கழகத் தமிழ் அகராதி, மு.கா.நூ., ப.88

36. சிவஞான முனிவர், காஞ்சிப் புராணம் மு.கா.நூ., திருவேகம்பப் படலம் பா-ள் 29,31, ப. 569.

37. பின்னிணைப்பு - 7.

38. சுந்தரர் தேவாரம்

மூவர் தேவாரம் மு.கா.நூ., திருக்கச்சியேகம்பம் பா.10. ப. 1303.

39. சிவஞான முனிவர், காஞ்சிப் புராணம், மு.கா.நூ., தழுவக் குழைந்த படலம், பா. 293, ப.668.

40. மேற்படி, தழுவக் குழைந்த படலம், பா. 283, ப.665.

41. சுந்தரர் திருத் தொண்டத் தொகை

சேக்கிழார், பெரியபுராணம் மு.கா.நூ, திருத்தொண்டத் தொகை பா.3, ப.25.

42. "காமரு பூங் காவிரியில் தென்பால் மன்னு
பேரகத்தாய் பேரா தென் நெஞ்சி னுள்ளாய்
பெருமாள் உன் திருவடியே பேணினேனே"

காஞ்சி மஹிமை மு.கா.நூ., திருமங்கையாழ்வார், பா. 2059, ப. 137

43. சிவஞான முனிவர், மு.கா.நூ., திருவேகம்பப் படலம் பா. 88, ப. 584.

44. மூவர் தேவாரம் சுந்தர மூர்த்தி சுவாமிகள் மு.கா.நூ., திருக்கச்சியேகம்பம், பா-3, ப.1302.

45. அருணைவடிவேலு, சி. காஞ்சித் தலங்கள், மு.கா.நூ., ப. 56

46. தங்கவேலு. கோ., மு.கா.நூ., ப. 444

47. "பாலுந் தெளி தேனும் பாகும் பருப்புமிவை
நாலும் கலந்துனக்கு நான் தருவேன் - கோலஞ்செய்
துங்கக் கரிமுகத் தூ மணியே நீ எனக்குச்
சங்கத் தமிழ் மூன்றுந் தா"

ஔவையார் நல்வழி, நீதி நூல்கள் (புதுக்கோட்டை, மீனாட்சி பதிப்பகம், 1970) காப்புச் செய்யுள்-1 ப.82.

48. "ஐந்து கரத்தனை ஆனை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றினை
நந்தி மகன் தன்னை ஞானக் கொழுந்தினை
புந்தியில் வைத்தடிப் போற்றுகின் றேனே."

திருமூலர்., மு.கா.நூ.,விநாயகர் காப்பு ப.1.

49. இக்கல்வெட்டு 1979 ஆம் ஆண்டு. மார்ச்சுமாதம் பத்தொன் பதாம் நாள் தமிழக ஆளுநர் பிரபுதாஸ் பட்வாரி அவர்களால் ஏகாம்பரநாதர் கோவிலில் பஞ்சமுக விநாயகருக்கு எதிரில் திறந்து வைக்கப் பட்டது.

50. "ஆலமர் செல்வன் அணிசால் மகன்விழா"

கலித்தொகை, இளவழகனார் (உ.ரை) (சென்னை, சை.சி.நூ. ப.க. 1967) மருதக்கலி, பா. 83, ப.241.

"ஆலும் கடம்பும் அணிமார் விலங்கிட்ட"

கலித்தொகை, முல்லைக்கலி, பா. 106, வரி-28, ப. 336

51. சிவஞான முனிவர்., மு.கா.நூ., திருவேகம்பப்படலம் பா.29, ப. 569.

52. "உமையம்மை யொடும் கந்தனொடும் கூடியுள்ள சிவமூர்த்தம்" கழகத்தமிழ் அகராதி மு.கா.நூ., ப. 498.

53. சித்+முத்திரை= சின் முத்திரை. ஞானத்தைக் கையால் காட்டும் அடையாளம் சின் முத்திரையாகும். சுட்டுவிரலால் பெருவிரலின் அடியைச் சேர்த்து, மற்ற மூன்று விரல்களையும் வேறாக ஒதுக்கிக் காட்டப்படும் முத்திரை. பெருவிரல் இறைவனையும் சுட்டு விரல் ஆன்மாவையும் குறிக்கிறது. மற்ற மூன்று விரல்களில் நடுவிரல் ஆணவத்தையும் அணிவிரல் கன்ம மலத்தையும் சுண்டு விரல் மாயா மலத்தையும் குறிக்கும்.

மேற்கூறிய மலங்களை விட்டு ஆன்மா, இறைவனை அடைந்து இன்புறுவதை, இச்சின் முத்திரை காட்டுகிறது. இதனைக் கச்சி யப்ப முனிவர்,

"மும்மலம் வேறுபட் டொழிய மொய்த்துயிர்
அம் மலர்த் தாள் நிழல் அடங்கும் உண்மையைக்
கைம் மலர்க் காட்சியில் கதுவ நல்கிய
செம்மலை யலதுளம் சிந்தி யாதரோ"

என்ற பாடலில் பாடியுள்ளார்.

ஆறுமுக நாவலர், கே. இந்து மத இணைப்பு விளக்கம், மூன்றாம் பதிப்பு, (நாகர்கோவில், எம்.எஸ்.எம். அச்சுக்கூடம் 1975) பக், 51-52.

54. அறிவொளி , அ. காஞ்சி காமாட்சி (சென்னை: கற்பகம் அச்சகம், 1983) ப.39.

காஞ்சி மஹிமை மு.கா.நூ.,ப.68.

55. கச்சியப்ப சிவாசாரியார், கந்தபுராணம், மு.கா.நூ., சுப்பிரமணியர் காப்பு பா - 1, ப.8.

56.அ. " கோவைச சுதத்த துப்பத ரத்துக் கொடியார்தங்
கோலக் கச்சுக் கட்டிய முத்தத் தனமேவிப்
பாவத் துக்குத் தக்கவை பற்றித் திரியாதே
பாடப் பத்திச் சித்த மெனக்குத் தரவேணும்
மாவைக் குததிக கைத்தல மெற்றிப் பெரும் வேலா
மாணிக்கச்சொர்க்கத்தொரு தத்தைக் கினியோனே
சேவற் பொற்கைக் கொற்றவ கச்சிப் பதியோனே
தேவச் சொக்கச் சக்கர வர்த்திப் பெருமாளே"

அருணகிரிநாதர் திருப்புகழ், திருமுருக கிருபானந்தவாரி (பதி.) (சென்னை: திருப்புகழமிர்த காரியாலயம், 1965) பா. 490, ப.329.

ஆ. "அற்றைக் கிறைதேடி அந்தத் திலுமாசை
பற்றித் தவியாத பற்றைப் பெறுவேனோ
வெற்றிக் கதிர்வேலா வெற்பைத் தொளை சீலா
கற்றுணர் போதா கச்சிப் பெருமாளே"

மேற்படி . பா 477 , ப. 322

இ. "முட்டுப் பட்டுக் கதிதோறும் முற்றச் சுற்றிப் பல நாளும்
தட்டுப் பட்டுச் சுழல் வேனைச் சற்றுப் பற்றக் கருதாதோ
வட்டப் புட்பத் தலமீதே வைக்கத் தக்கத் திருபாதா
கட்டத் தற்றத் தருள் வோனே கச்சிச் சொக்கப் பெருமாளே"

மேற்படி பா.478, ப. 323.

ஈ. "மூவிரு முகங்கள் போற்றி முகம் பொழி கருணை போற்றி
ஏவருந் துதிக்க நின்ற ஈராறு தோள் போற்றி, காஞ்சி
மாவடி வைகும் செவ்வேள் மலரடி போற்றி, அன்னான்
சேவலும் மயிலும் போற்றி, திருக்கை வேல் போற்றி போற்றி"

கந்தபுராணம் - சுப்பிரமணியர் காப்பு, பா.1. ப.8.

57. காஞ்சிபுரம் எம்.வி. பச்சையப்ப முதலியார் அவர்கள் அம்பலவாணர் சந்நிதியைச் செப்பனிடும் பொறுப்பையும் செலவினையும் ஏற்றுக் கொண்டுள்ளார்கள்.

ஜெயசெந்தில் நாதன், பு.மா. திருமுறைத் தலங்கள், (காஞ்சிபுரம், கமலம் பிரஸ், 1988) ப.9.

58. பாலூர் கண்ணப்ப முதலியார், மு.கா.நூ.ப. 16

59. திருமூலர் திருமந்திரம், டி.எம்.குமரகுருபரன் பிள்ளை, (பதி),(ஸ்ரீ வைகுண்டம், குமரகுருபரன் அச்சகம், 1968) பா. 1269, ப. 498

60. மேற்படி. பா. 1270

61. காஞ்சி மஹிமை மு.கா.நூ.ப.68

62. திருநாவுக்கரசர் தேவாரம், மு.கா.நூ.ப. வினா விடைத் திருத்தாண்டகம், ப. 532.

63. கற்பம்-ஊழிக்காலம், கழகத் தமிழ் அகராதி மு.கா.நூ.ப.308.

64. ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம்.

65. சிங்காரவேலு முதலியார்., மு.கா.நூ.ப.217

66. கச்சி மயான வரலாறு:-

இறைவனிடத்தில் பண்டன் என்னும் ஓர் அசுரன் தான் பெற்ற வரத்தினால், தேவர்கள் முதல் உலகிலுள்ள எல்லா உயிர்களின் உடம்பிலும் புகுந்து, அவர்களின் வலிமையைக் கவர்ந்து கொண்டு, செருக்குடன் இருந்தான். இச் செயலினால் அனைத்துயிர்களும் மெலிவடைந்தன.

பிரமனும் திருமாலும் கயிலைக்குச் சென்று, இறைவனிடம் பண்டனின் கொடுஞ்செயலைக் கூறியுள்ளனர். பிரமனுக்கும் திருமாலுக்கும் அருள்புரிய இறைவன் நெருப்பு வடிவாகிய திருமேனியைக் கொண்டு, எல்லா உயிர்களையும் வேள்வியில் இட்டு, பண்டனையும் அழியச் செய்தான்.

பின்னர் இறைவன் உயிர்களை அழித்தலையும், ஆக்கல் தொழிலையும் கச்சி மயானத்தில் மேற்கொண்டான். கச்சி மயான வேள்வியிலிருந்து இறைவன் தோன்றினமையால் அவ்விடம் திருக்கச்சி மயானம் என அழைக்கப்பட்டது என்பர்.

சிவஞான முனிவர்.,மு.கா.நூ... கச்சி மயானப்படலம் பா-ள், 2-14, பக். 555-558.

67. அப்பர் தேவாரப் பதிகங்கள், மு.கா.நூ.. ஆறாம் திருமுறை, வினா விடைத் திருத்தாண்டகம், பா-10, ப. 532.

68. இந்த விநாயகருக்கு இரக்தாக்ஷி ஆண்டு ஆனித் திங்கள் 31 ஆம் நாள் 15.7.1984 அன்று குடமுழுக்கு எஸ்.சுப்பையா அவர்களால் நடத்தப்பட்டுள்ளது.

69. பாலூர் கண்ணப்ப முதலியார், மு.கா.நூ.ப.16

70. கருவறையில் சோமாஸ்கந்தரேயன்றிப் பலவன்கயான சிற்பங்களும், இராச சிம்மன் கட்டிய கோவில்களில் மட்டுமே காண முடியும்.

தங்கவேலு கோ., முதல் புத்தகம், மு.கா.நூ.ப.444

71. சிவனும் உமையும் ஒரே நேர்க்கோட்டில் இல்லாமல், சிவனை விட உமா சிறிது உள்ளடங்கியே இருப்பாள். இவ்விருவருக்கும் மிகவும் உள்ளடங்கிய நிலையில் முருகன் இருப்பான். இதுவே சோமாஸ்கந்த மூர்த்தத்தின் அளவுகளாகும்.

அறிவொளி. அ. பழநி (சென்னை: கற்பகம் அச்சகம், 1983) ப.45

72. பாலூர் கண்ணப்ப முதலியார், மு.கா.நூ.ப.16

73. பொன்னுசாமி. வ. பல்லவர்காலம் தமிழக வரலாறு மு.கா.நூ.ப.68.

74. செங்கை மாவட்ட வரலாற்றுக் கருத்தரங்கு, நாகசாமி, இரா. (பதி), (சென்னை, தொல்பொருள் ஆய்வுத் துறை, 1977), ப. 95

75. சீனி வேங்கடசாமி, தமிழர் வளர்த்த அழகுக் கலைகள் (சென்னை. பாரி நிலையம், 1956), ப. 191.

# கோவிலின் உடைமைகளும் ஆட்சி முறையும்

ஒருவருக்கு உரிமையான பொருட்கள் அவரின் உடைமைகளாகும். அதேபோல் கோவிலுக்கு உரிமையான பொருட்கள் அக் கோவிலின் உடைமைகளாகும். ஒரு கோவிலுக்கு உரிமையான பொருட்களாய் உள்ளவை அக்கோவிலில் உள்ள உற்சவத் திருவுருவங்கள், அத்திருவுருவங்களின் மேல் அணியப்படும் ஆபரணங்கள், அக்கோவிலுக்குரிய நிலங்கள், அவற்றிலிருந்து கிடைக்கும் வருவாய் முதலியனவாகும்.

இவ்வுடைமைகள் அக்கோவிலில் உள்ள மூர்த்தியின் கீர்த்தியால் பெருகுகின்றன. கோவிலின் உடைமைகள் பெருகுதல் காரணமாகக் கோவில் வரலாற்றில் நிலைத்த இடம் பெறுகிறது. ஆகவே ஒரு கோவிலைப் பற்றிய செய்திகளை அறியுங்கால், அக்கோவிலில் உடைமைகளைப் பற்றியும் அறிய வேண்டுவது இன்றியமையாததாகின்றது.

இம்முறையில் காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவிலுக்கு எப்பொருட்கள் உரிமையாக உள்ளனவோ, அப்பொருட்கள் அத்தனையும் அக்கோவிலின் உடைமைகளாகக் கருதப்படுகின்றன. இவற்றுள் முக்கியமாகக் கருதப்படுவன நிலங்களும் திருவுருவங்களுக்கு அணிவிக்கும் அணிகலன்களும் ஆகும். அவை எவ்வாறு வருமானத்தை அளிக்கின்றன என்பது முதலில் காணப்படுகிறது. பின்னர் கோவிலின் நிர்வாகமுறை - ஆட்சிமுறை விளக்கப்படுகிறது.

மேற்கூறிய கோவிலின் உடைமைகள் எனக் கூறப்படுபவை கோவிலின் நல்ல நிருவாகத்திற்கும் அதன் வளர்ச்சிக்கும் துணை புரிகின்றன. மக்களும் மன்னனும் கோவிலுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தனர் என்பதை அவர்கள் கோவிலுக்கு அளித்துள்ள நிவந்தங்கள், அணிகலன்கள் முதலியன எடுத்துக்காட்டுகின்றன.

கோவிலின் உடைமைகளைப் பாதுகாப்பதற்கும் தகுந்த முறையில் அவற்றை நிருவகித்து வருவதற்கும் மக்களிலிருந்து நிருவாகக் குழுவினர், வேலையாட்கள் முதலானோர் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். இவ்வகை ஒழுங்கு முறைகள் கோவிலுடன் மக்கள் கொண்ட சமுதாய உறவை நெருக்கப்படுத்துகின்றன.

கோவில் உடைமைகளை இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவை அசையும் பொருள்கள், அசையாப் பொருள்கள் என்பன. அசையாத பொருள்களில் நிலம், மனை, தோட்டங்கள் ஆகியவை உள்ளடக்கப்படுகின்றன. வீடுகள், கடைகள், மண்டபங்கள், சத்திரங்கள் போன்றவை மனையைச் சார்ந்த பொருள்களாகக் கொள்ளப்படுகின்றன.

ஆடு, மாடு, எருது போன்றவை அசையும் பொருள்களாகும். இவற்றுடன் திருவுருவங்களுக்கு அணியப்படும் அணிகலன்களையும் அசையும் பொருள்களாகக் கொள்ளலாம். இவ்வுடைமைகள் எவ்வாறு கோவில் நிர்வாகத்திற்கு உதவி செய்கின்றன என்பது கீழே விளக்கப்படுகின்றது.

நிலங்கள், அணிகலன்கள் என்ற இருவகை உடைமைகளுள்ளும், அணிகலன்களை இருப்புச் சொத்தாகக் கொள்ளலாமேயன்றி, ஆண்டுதோறும் வருமானத்தை அளிக்கக்கூடிய உடைமைகளாகக் கொள்ள முடியாது. எனவே, வருமானத்தை அளிக்கும் நிலங்கள் பற்றி முதலில் நோக்கப்படுகின்றது.

நிலத்திலிருந்து வரும் வருமானங்கள் ஏகாம்பரநாதர் கோவிலில் பூசைகளும் வழிபாடுகளும் திருவிழாக்களும் சிறப்பாக நடைபெறுவதற்குரிய நிதியை நல்குகின்றன. கோவிலின் நில உடைமைகள் சமுதாயத்திலுள்ள மக்களிடம் கொடுக்கப்பட்டுள்ளன. அவர்கள் அவற்றிலிருந்து வரும் வருவாயில் குறிப்பிட்ட பகுதியைக் கோவிலுக்கு அளிக்கின்றனர்.

கோவிலுக்கு ஆண்டுதோறும் நிலங்கள் வாயிலாகப் பல்வேறு வகைகளில் வருமானம் வருகின்றது. கோவிலுக்குரிய நிலங்கள் இரு வகைத்தானவை. அவை,

1. பயிரிடும் நிலங்கள்
2. கோவிலுக்குரிய வீடுகள், கட்டடங்கள்

என்பனவாகும்.

இவற்றுள் பயிர் செய்யப்படும் நிலங்கள் நன்செய் நிலங்கள், புன்செய் நிலங்கள் என இருவகையானவை.

இக்கோவிலுக்குச் சொந்தமாக நன்செய் நிலத்தில் 158 ஏக்கர் 7 செண்டும், புன்செய் நிலத்தில் 47 ஏக்கர் 88 செண்டும் உள்ளன. அஃதாவது இவ்விருவகை நிலங்களும் சேர்ந்து 205 ஏக்கர் 95 செண்டுகள் ஆகின்றன. மேற்கூறிய நிலங்களின் குத்தகை வருமானங்கள் பணமாகவும் தானியமாகவும் கோவிலுக்குக் கொடுக்கப் படுகின்றன.

இவ்வாறு பயிர் செய்யப்படும் நிலங்கள் ஆரியப் பாக்கம், சிறுணைப் பெருகல், நரப்பாக்கம், அகரம், கோவிந்தவாடி, பொடவூர், பாலூர், திருமலராயன் தோட்டம், இலாலா தோட்டம், காசிகாரத் தோட்டம், பிரதோட தோட்டம், வெங்கடகிரி தோட்டம், இராசா தோட்டம், மகா சனப்பாக்கம், திருமல்பட்டு, ஆமூர் , செட்டித்தாங்கல் ஆகிய ஊர்களில் உள்ளன.

இவ்வூர்களில் உள்ள கோவிலுக்குரிய நிலத்தின் அளவு, அந்நிலத்திலிருந்து கிடைக்கும் வருமானம் முதலியவை கீழே தரப் பட்டுள்ளன.

1. ஆரியப் பாக்கம் என்ற கிராமத்தில் ஏகாம்பர நாதர் கோவிலுக்கு 1 ஏக்கர் 83 செண்டு நன்செய் நிலம் உள்ளது. இவ்வூர் காஞ்சிபுரத்திலிருந்து 8 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. இதனால் வருகின்ற வருடக் குத்தகை ரூ.550-00 ஆகும்.[1]

2. சிறுணைப் பெருகல் என்ற கிராமம் காஞ்சிபுரம் வட்டத்தில், காஞ்சிபுரத்தின் மேற்றிசையில் 8 கிலோ மீட்டர் தொலைவில் (பாலுச் செட்டிச்சத்திரம் அருகில்) உள்ளது. இங்கு ஏகாம்பர நாதர் கோவிலுக்கு 83 ஏக்கர் 42 செண்டு நன்செய் நிலமும், 18 ஏக்கர் 39 செண்டு புன்செய் நிலமும் இருக்கின்றன.

இந்நிலங்களிலிருந்து வரும் வருமானம்தான் இக்கோவிலுக்கு இன்றியமையாத வருமானமாக இருக்கிறது.[2] இதில் ஆண்டு ஒன்றுக்கு 4000 மரக்கால் தானியம் வருகிறது. தற்சமயம் வருமானத்தைப் பெருக்குவதற்கு நிலங்களில் செண்டு ஒன்றுக்கு ஒரு மரக்கால் நெல் வீதம் குறையாமல் தர வேண்டுமென்று கோயிலார் முடிவெடுத்திருக்கிறார்கள்.

3. நரப்பாக்கம் என்ற ஊர் காஞ்சிபுரம் வட்டத்தில் விஷாரம் சாலையிலிருந்து 10 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. இங்கு ஏகாம்பர நாதர் கோவிலுக்கு 21 ஏக்கர் 12 செண்டு நன்செய் நிலமும் 4 ஏக்கர் 71 செண்டு புன்செய் நிலமும் உள்ளன. இந்நிலங்களை, கே.முனிசாமி என்பவர் பயிரிட்டு ஆண்டிற்கு 650 மரக்கால் நெல் குத்தகையாகக் கொடுத்து வருகிறார்.[3]

4. அகரம் கோவிந்தவாடி என்ற கிராமம் காஞ்சிபுரம் வட்டத்தில், அரக்கோணம் செல்லும் சாலையில் உள்ளது. இதில் கோவிலுக்கு 5 ஏக்கர் 84 செண்டு நன்செய் நிலம் இருக்கிறது. இந்நிலம் குத்தகை அடிப்படையில் ஆண்டு ஒன்றுக்கு 350 ரூபாய்க்கு விடப்பட்டுள்ளது.[4]

5. பொடவூர் என்ற கிராமம் காஞ்சி வட்டத்தில் காஞ்சியின் வட திசையில் சிறுவள்ளூர் சாலையில் இருந்து 10 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. இங்கு ஏகாம்பர நாதர் கோவிலுக்கு 1 ஏக்கர் 86 செண்டு நன்செய் நிலம் இருக்கிறது. இதன் மூலம் ஆண்டு வருமானமாக ரூ.250,- கோவிலுக்கு வருகிறது. இதன் குத்தகையை உயர்த்த இக்கோவிலின் நிர்வாக அலுவலர் தகுந்த நடவடிக்கை எடுத்துள்ளார்.

6. பாலூர் என்ற கிராமம் காஞ்சிபுரத்தின் கிழக்குத் திசையில், காஞ்சிபுரத்திலிருந்து 28 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. இக்கிராமத்தில் 11 ஏக்கர் 78 செண்டு நன்செய் நிலமும் 2 ஏக்கர் 8 செண்டு புன்செய் நிலமும் கோயிலுக்கு உள்ளன. இதனால் ரூ.2000,- ஆண்டுக்கு வருமானமாகக் கோவிலுக்கு வருகிறது. இந் நிலத்தின் சார்பாகக் கோவில் நிர்வாகத்தினர் முன்னதாகவே 1987 ஆம் ஆண்டின் வருமானத்தைப் பெற்றுள்ளனர்.[5]

இதனால் மக்கள் கோவிலின் சிறந்த நிலங்களில் அதிகமான வருவாயை எதிர்பார்க்கின்றனர். அவ்வாறு அவர்கள் எதிர் பார்த்தபடி அதிகமான வருவாய் வருவதால் நிலங்களைப் பயிர் செய்யும் உழவர்கள் ஓர் ஆண்டு வருவாயை முன்னதாகவே கொடுத்து விடுகின்றனர். ஆனால் மற்ற நிலங்களைப் பயிர் செய்யும் ஒப்பந்தக்கார உழவர்கள் ஓர் ஆண்டு முடிந்ததும் கோவிலுக்கு கொடுக்க வேண்டிய வருவாயைக் கொடுப்பதில்லை என அறிய வருகின்றது.

7. திருமல்ராயன் தோட்டம் என்பது காஞ்சிபுரத்தில் ஏகாம்பர நாதர் கோவிலின் இராச கோபுரத்தினின்று அரை கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. இதில் கோவிலுக்குச் சொந்தமாக 6 ஏக்கர் 50 செண்டு, புன்செய் நிலம் உள்ளது. இத்தோட்டம் அறங்காவலர்களால் ஆண்டுக்கு ரூ.1,000,- வீதம் குத்தகைக்கு விடப்பட்டது. இது பசலி 1385 முதல் 1389 வரை குத்தகைக்கு விடப்பட்டுள்ளதை எதிர்த்து, வழக்கு தொடரப்பட்டுள்ளது. 12.12. 1980 இல் குத்தகைதாரரை வெளியேற்றத் தீர்ப்பாகியுள்ளது.

8. இலாலா தோட்டம் காஞ்சியிலேயே இருக்கிறது. இதில் ஏகாம்பரநாதர் கோயிலுக்குச் சொந்தமான 9 ஏக்கர் 58 செண்டு

புன்செய் நிலம் அறங்காவலர்களால் இளஞ்செழியன் என்பவருக்கு வருட குத்தகை ரூ.1005,- வீதம் விடப்பட்டுள்ளது. குத்தகைக் காரரை வெளியேற்ற, காஞ்சிபுரம் நீதிமன்றத்தில் வழக்குத் தொடரப் பட்டு, அவரை நிலத்திலிருந்து வெளியேற்றத் தீர்ப்பாகியுள்ளது.

9. காசிக்காரத் தோட்டம், காஞ்சிபுரம் நகரத்திலேயே உள்ளது. இங்குக் கோவிலுக்குச் சொந்தமான 2 ஏக்கர் 27 செண்டு புன்செய் நிலத்தைப் பணமாகக் குத்தகைக்கு விடப்பட்டு வந்தது. 26.6.1980 இல் பொது ஏலம் கேட்க யாரும் முன்வரவில்லை. எனவே, இந்நிலம் தரிசாக[6] உள்ளது. இதன் விவரத்தை அறநிலைய ஆட்சித் துறை ஆய்வாளர் பதிவு செய்துள்ளார்.

இந்நிலத்தை 24.3.1985 இல் மாதனம் பாளையத் தெரு வில் வாழும் நெசவாளர்கள் சட்டத்திற்குப் புறம்பாகத் தமதாக்கும் முயற்சி (ஆக்ரமிப்பு) செய்து அதில் தற்காலிகமாகக் குடிசைகளை அமைத்தனர்.

பின்னர், காஞ்சிபுர வட்ட ஆட்சியாளர் உதவியுடனும், காவல் துறையினர் உதவியுடனும் சட்டத்திற்குப் புறம்பாகத் தமதாக்கும் முயற்சிகள் அகற்றப்பட்டன. இந்நிலத்தில் குடிசைகளை அமைத் தவர்கள், அடிமனை வாடகைக்குத் தருமாறு ஆலயத்திற்கு உரிய முறையில் விண்ணப்பம் செய்தனர். இவ்விண்ணப்பத்தைச் சென்னை, இந்து சமய அறநிலையத்துறை ஆணையர் ஏற்றுக் கொண்டு 65 நெசவாளர்க்குத் தனிப்பட்ட முறையில் குடிசைகள் அமைத்துக் கொள்ள அனுமதியளித்துள்ளார்.

மேற்படி விண்ணப்பம் செய்தவர்களிடமிருந்து மொத்தமாக முன் பணம் ரூ.1,05,000,- கோயிலார் பெற்றுக் கொண்டனர். இத் தொகையைக் கோவிலின் செயல் அலுவலர் நிரந்தர சேமிப்பில் வைத்துள்ளார். மேலும் விண்ணப்பதாரர்கள் மாதம் ஒன்றுக்கு ஒரு ரூபாய் வீதம் அடிமனைக்குத் தர சம்மதித்தனர். நிலத்தினைச் சட்டப் பிரிவு 34ன் கீழ் மேற்படி நபர்களுக்கு விற்பனை செய்ய வேண்டி அறிக்கை சமர்ப்பிக்கப்பட்டது.[7] அதன்படி 1.1.1986 முதல் ரூபாய் ஒன்று வீதம் 65 ஆட்களிடம் வசூல் செய்யப்படுகிறது.[8]

10. பிரதோட தோட்டம் என்பது காஞ்சிபுரத்திலேயே உள்ளது. இதில் கோவிலுக்குரிய 1 ஏக்கர் 58 செண்டு புன்செய் நிலம் குத் தகைக்கு வருடம் ஒன்றுக்கு ரூ.1100/- வீதம் விடப்பட்டுள்ளது. இக் குத்தகையில் நிலுவை ஏதும் இல்லை.

11. வெங்கடகிரி இராசா தோட்டம் என்பது சிறிய காஞ்சி புரத்தில் ஆலடி பிள்ளையார் கோவில் தெருவில் உள்ளது. இதில்

கோவிலுக்குரிய 1 ஏக்கர் 70 செண்டு நன்செய் நிலத்தையும் 30 செண்டு புன்செய் நிலத்தையும் கோவிலின் அறங்காவலர்கள் திரு. வடிவேலு என்பவருக்குக் குத்தகையாக ஆண்டு ஒன்றுக்கு ரூ.1050/– வீதம் விட்டிருக்கிறார்கள். தற்சமயம் மேற்கூறிய நிலத்தைக் காஞ்சி புரத்தில் வாழும் அகம்ப நயினார் என்பவர் விலைக்கு வாங்கிக் கொள் வதற்காக விண்ணப்பம் செய்திருக்கிறார்.[9]

12. மகாஜனப் பாக்கம் என்னும் கிராமம் வட ஆற்காடு மாவட்டம், வந்தவாசி சாலையில் செய்யார் வட்டத்தில் உள்ளது. இதில் கோவிலுக்குரிய 1 ஏக்கர் 32 செண்டு நன்செய் நிலத்தைக் கோவிலின் அறங்காவலர்கள் ஏலம் விட்டிருக்கிறார்கள். இந் நிலத் தால் கோவிலுக்கு வருட வருமானம் ரூ.560/- வருகிறது.[10]

13. திருமல்பட்டு என்னும் கிராமத்தில் கோவிலுக்கு 8 ஏக்கர் 52 செண்டு நன்செய் நிலம் உள்ளது. இந்நிலத்தைக் காஞ்சிபுரத்தில் வசிக்கும் எஸ்.ஆர். மணிகேச முதலியார் என்பவர் கோவிலார் அனு மதியின்றிப் பயன்படுத்தி வருதலால், கோயிலார் இவர் மீது வழக் குத் தொடர்ந்திருக்கிறார்கள்.[11]

14. ஆமூர் என்னும் கிராமம் திருவள்ளுவர் மாவட்டத்தில் பொன்னேரி வட்டத்தில் உள்ளது. இதில் கோவிலுக்குரிய 13 ஏக்கர் 41 செண்டு நன்செய் நிலத்தை நீண்ட காலமாக 12 நபர்கள் சட்டத் திற்குப் புறம்பாகத் தமதாக்கும் முயற்சிகளைச் செய்து வந்தனர். கோவிலார் மேற்கூறியவர்கள் மீது, திருவள்ளூர் நீதி மன்றத்தில் வழக்குத் தொடர்ந்திருக்கிறார்கள்.[12]

15. செட்டித்தாங்கல் என்னும் கிராமம் வட ஆற்காடு மாவட்டத் தில் செய்யார் வட்டத்தில் உள்ளது. இதில் கோவிலுக்குரிய 4 ஏக்கர் 74 செண்டு புன்செய் நிலம் மூன்று ஆண்டுகளுக்கு ஒரு முறை குத் தகைக்கு விடப்படுகிறது. இதிலிருந்து கோவிலுக்கு ஆண்டு வரு மானமாக ரூ.270/- பெறப்படுகின்றது.

கோவிலின் நிலங்களைப் போலவே காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவிலுக்குரிய மனைகளையும் மக்கள் பயன்படுத்துகின்றனர். அம் மனைகளைப் பதினெட்டுப் பேர் பயன்படுத்துகின்றனர். இதன் விபரங் களைக் கீழே காணலாம்.

1. கோவிலுக்குச் சொந்தமான மனை, காவல் கண்ணன் செட்டி யார் அறக்கட்டளையில் (Trust) உள்ளது. இம்மனை பூந்தமல்லி நெடுஞ்சாலையில் 46 கிரவுண்டு 1600 சதுர அடியாகும். இதனைக் கோவில் அறங்காவலர்கள் கலவல மன்செட்டி, கலவல கண்ணன்

செட்டி, கலவல திருவேங்கடத்தான் செட்டி ஆகிய மூவர்களுக்கு 99 ஆண்டுக் காலத்திற்குக் குத்தகைப் பத்திரம் எழுதிக் கொடுத்துள்ளனர்.[13] இதன் மூலம் வருகின்ற ஆண்டு வருமானம் ரூ.279.96 ஆகும். இதில் "சீதா கிங்ஸ்டன்" என்ற பள்ளியினை வாடகைதாரர்கள் நடத்துகிறார்கள்.

2. கோவிலுக்குச் சொந்தமான மனை திரு. எ.வி. தாமஸ் எஜிகேஷனல் அறக்கட்டளையில் (Trust) உள்ளது. இம்மனை பூந்தமல்லி நெடுஞ்சாலையில் 31 கிரவுண்டு 600 சதுர அடி பரப்பில் இருக்கிறது. இதைக் கோவில் அறங்காவலர்கள் திரு. தெய்வசிகாமணிப் பிள்ளை என்பவருக்கு கி.பி.1898 ஆம் ஆண்டு 99 ஆண்டுக் காலத்திற்குக் குத்தகை விட்டனர். குத்தகைப் பணம் குறைவாக இருப்பதால் மனையிலிருந்து காலி செய்ய, கோவிலார் கோரியிருக்கிறார்கள். அதனால் குத்தகைதாரர் மனையை விலைக்கு வாங்க விருப்பம் தெரிவித்துள்ளார்.[14]

3. கோவிலுக்குச் சென்னைக் கீழ்ப்பாக்கம், பூந்தமல்லி நெடுஞ்சாலையில் 7 கிரவுண்டு[15] 1750 சதுர அடி மனை உள்ளது. இம்மனையை கி.பி. 1898 ஆம் ஆண்டு, கோவில் அறங்காவலர்கள் சென்னையிலுள்ள திருவேங்கடாச்சாரி என்பவருக்கு 99 ஆண்டுகளுக்குக் குத்தகைக்கு விட்டிருக்கிறார்கள். இதற்கு ஆண்டு வாடகை ரூ.44-14 ஆகும். தற்போது இம்மனையை எம்.எஸ்.ராவ். என்பவர் பயன்படுத்தி வருகிறார்.[16]

4. கோவிலுக்குச் சென்னைக் கீழ்ப்பாக்கம் பூந்தமல்லி, நெடுஞ்சாலையில் 56 கிரவுண்டு 1650 சதுர அடி நிலம் உள்ளது. இதனை, சு.ரா. இலட்சுமண செட்டி என்பவருக்கு கோவில் அறங்காவலர்கள் கி.பி. 1899ஆம் ஆண்டு, 99 வருடங்களுக்குக் குத்தகை விட்டிருக்கிறார்கள். இதற்கு ஆண்டு வாடகை ரூ.352-12 ஆகும். தற்சமயம் சு.ரா. இலட்சுமண செட்டியின் வாரிசுதாரர்களான திரு.சு.ரா. பால சுப்பிரமணிய செட்டியாரும், மற்றும் அவர்களது சகோதரர்களும் மனையைப் பயன்படுத்தி வருகிறார்கள்.

இம்மனையில் குத்தகையாளர்கள் கட்டடம் கட்டி, அஞ்சல் துறையினருக்கு வாடகைக்காக விட்டிருக்கிறார்கள். இதன் வாடகைப் பத்திரம் கோவிலுக்குக் கிடைக்கவில்லை. எனவே, தற்கால நிலைக்கேற்றவாறு மாத வாடகை ரூ.5865/- 1.1.1982 முதல் செலுத்தும்படிக் கோயிலார் அறிவித்துள்ளனர்.

தவறினால் மனையைத் தற்காலத்திற்கேற்றவாறு இந்து சமய ஆணையர் நிர்ணயிக்கும் தொகைக்கு, விலைக்கு பெற்றுக்

கொள்ளும்படி அறிவித்ததைத் தொடர்ந்து குத்தகைதாரர் மனையை விலைக்கு வாங்க விருப்பம் தெரிவித்துள்ளார்.[17]

5. கோவிலுக்குச் சென்னை, பூந்தமல்லி நெடுஞ்சாலையில் 2120 சதுர அடி நிலம் உள்ளது. இதனைத் திருமதி எல். வடுவாம்பாள் வாடகைக்கு வைத்திருக்கிறார். இவர் அனுமதியின்றி, மனையில் மற்றவர் கட்டடம் கட்டியதால், அவரை வெளியேற்ற, சென்னை சுமால் காசஸ் நீதிமன்றத்தில் வழக்கு தொடரப்பட்டது. நீதி மன்றத்தின் உத்திரவின்படி, அதற்குரிய தொகையினைக் கட்டடம் கட்டியவர் செலுத்திவிட்டார். ஆனால் வடுவாம்பாள் விற்பனைப் பத்திரம் எழுதிக் கொடுக்கவில்லை. பின்னர் சென்னை, சுமால் காஸஸ் நீதிமன்றத்தில் வழக்கு எண். 84,72படி தொடரப்பட்டு, மனையைத் திருமதி வடுவாம்பாளுக்கு விற்பனை செய்யத் தீர்ப்பாகியது.

6. கோவிலுக்குச் சொந்தமான நிலம், சென்னை பூந்தமல்லி நெடுஞ்சாலையில் சர்வே எண். 229-இல் உள்ள அடிமனையில் 0.10.1077 சதுர அடிப் பரப்புள்ளது. இந்நிலத்தை, நெடுஞ்சாலைத் துறையினர், சாலையை அகலப்படுத்தக் (வார்டு எண்.8/80 - இன்படி) கேட்டபோது கொடுக்கப்பட்டது. இதனால் பாதிக்கப்பட்ட வாடகைதாரர்கள் திரு. கே. வி. மதனகோபால், திரு. தனகோடி, திரு. வைத்தியநாதன் ஆகிய மூவரும் கோவிலுக்குச் சொந்தமான இடத்தில் கடை வைத்துக் கொள்ள அனுமதி கேட்டனர். அதன்படி அறங்காவலர்கள் 18.9.81 அன்று கடிதப்படி, மேற்கூறிய மூவருக்கும் 8' x 8' என்ற அளவு நிலத்தில் கடை வைத்துக் கொள்ள அனுமதியளித்தனர். மேலும் மாத வாடகை ரூ. 100/- செலுத்தவும் முன்பணம் ஒவ்வொருவரும் ரூ. 1200/- செலுத்தவும், ஓராண்டிற்கு வாடகைக்கு விட அனுமதியளிக்கப்பட்டது.

மேற்கூறியவர்கள் மூவரும் 6.10.1982 இல் குத்தகைப் பத்திரம் எழுதிக் கொடுத்து, முன்பணமும் கோவிலில் கட்டி விட்டார்கள். அவ்வமயம் திரு. கே. என். கங்காதரன் நாயர் என்பவர் கடை வைக்க மேற்கூறிய மூவரும் முயன்றபோது தடை செய்துள்ளார் எனத் தெரிய வருகின்றது.

7. கோவிலுக்குச் சென்னைப் பூந்தமல்லி நெடுஞ்சாலையில் சர்வே எண். 229/2- இல் உள்ள 1077 சதுர அடி நிலம் உள்ளது. இதற்கு மாத வாடகை ரூ.80/- வீதம் திரு. கே. என். கங்காதரன் என்பவர் பயன்படுத்தி வருகிறார். இம்மனையில் கடைகள் கட்டப்பட்டு, வாடகைதாரரால் உள் வாடகைக்கு விடப்பட்டுள்ளது.

குத்தகைதாரர், இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை, ஆணையர் குறிப்பிடும் விலைக்கு, நிலத்தினை (கடித நாள் 27.9. 1986) வாங்க விருப்பம் தெரிவித்துள்ளார்.

8. கோவிலுக்குச் சென்னை, டெய்லர்ஸ் ரோடு சர்வே எண். 229 இல் 1/4 கிரவுண்டு நிலம் உள்ளது. இதனை இரத்தின நாயக்கர் மாத வாடகை ரூ.60/- வீதம் கொடுத்துப் பயன்படுத்தி வருகிறார். இம்மனையில் வாடகைக்காரர் கட்டடம் கட்டிச் சிற்றுண்டிச் சாலை நடத்தி வருகிறார். இதற்குரிய வாடகைப் பத்திரம் கோவிலில் இல்லை. தற்போது குத்தகைத்தாரர் நிலத்தினை (கடித நாள் 27.9.86) வாங்க இசைவு தந்துள்ளார்.

9. கோவிலுக்குச் சென்னைக் கீழ்ப்பாக்கம் பூந்தமல்லி நெடுஞ் சாலையில் 1½ கிரவுண்டு நிலம் உள்ளது. இதனைச் சீவரத்தின கிராமணி என்பவர் நீண்டகால குத்தகைக்கு ஆண்டுக்கு ரூ.48/- வீதம் வாடகை கட்டி எடுத்தார். தற்சமயம் சீவரத்தின கிராமணியின் வாரிசு தாரர்கள் கே.துரைராஜ், ஜே. மனோகர் ஆகியோர் மனையைப் பயன் படுத்தி வருகிறார்கள்.

இந்த மனைக்குத் தற்கால முறைப்படி மாத வாடகை ரூ.250/- கொடுக்க, வழக்கறிஞர் மூலம், அறிவிப்பு அனுப்பப்பட்டது. தற் சமயம் குத்தகையாளர்கள் (கடித நாள் 27.9.86) மனையை விலைக்கு வாங்க விருப்பம் தெரிவித்துள்ளனர்.

10. கோவிலுக்குச் சென்னைக் கீழ்ப்பாக்கம் டெய்லர்ஸ் சாலை யிலுள்ள சர்வே எண். 229 இல்35/22 மனை உள்ளது. இந் நிலத் தினைப் பாசுகர நாயுடு, பயன்படுத்தி வருகிறார். இதற்குரிய வாடகை ஓர் ஆண்டுக்கு ரூ. 200/- ஆகும். இதற்கான குத்தகைப் பத்திரம் கோவிலில் இல்லை. மேற்படி மனையின் மாடியை வாடகை தாரர் பயன்படுத்தி வருகிறார். தற்சமயம் குத்தகைதாரர் மனையை விலைக்கு வாங்க (கடித நாள் 22.9.86) இசைவு தந்துள்ளார்.

11. சென்னை, டெய்லர்ஸ் சாலை சர்வே எண். 229/2 இல் உள்ள இரண்டு கிரவுண்டு நிலம் கோவிலுக்கு உரித்தானது. இந் நிலத்தினை அறங்காவலர்கள் கி.பி. 1904 ஆம் ஆண்டில் 90 வரு டக் குத்தகைக்கு அப்துல்லாகான் சாயுபு என்பவருக்கு விட்டிருக் கிறார்கள்.

இம்மனையில் குத்தகைக்காரர் கட்டடம் கட்டி, வாடகைக்கு விட்டுள்ளார். அறநிலைய ஆட்சித் துறையின் ஆணையர் நிர்ணயம்

செய்யும் விலைக்கு, வாங்க (கடித நாள் 24.9.1986) அவர் இசைந்துள்ளார்.

12. சென்னைக் கீழ்ப்பாக்கம், டெய்லர்ஸ் சாலை சர்வே எண். 229இல் உள்ள 1½ கிரவுண்டு மனை, கோவிலுக்குச் சொந்தமானது. இதைத் திரு.வேம்புலி என்வரின் மனைவி இராதாபாய் பயன்படுத்தி வருகிறார். இதற்குக் குத்தகைப் பத்திரம் இல்லை. இதன் ஆண்டு வாடகை ரூ. 18/- ஆகும். குத்தகையாளர் மனையில் வீடு கட்டி யுள்ளார். தற்சமயம் சென்னை, சுமால் காசசு நீதிமன்றத்தின் சூட் எண். 123/69படி கிரயத் தொகையாக ரூ.15,400/- செலுத்துமாறு, குத்தகைக்காரருக்கு 4.3.1976 இல் உத்தரவிடப்பட்டுள்ளது. குத் தகையாளர் இதுவரையில் பணம் கட்டவில்லை. எனவே கோவில் செயல் அலுவலர் அறிவிப்புக் கொடுத்துள்ளார்.

13. கோவிலுக்குச் சொந்தமான நிலம், சென்னைக் கீழ்ப்பாக்கம் சர்வே எண். 229- இல், டெய்லர்ஸ் ரோடில் 2-கிரவுண்டு 1850 சதுர அடி உள்ளது. இதனை அறங்காவலர்கள் கி.பி. 1901 ஆம் ஆண்டு திரு. அபதுல்லாகான் சாயுபு என்பவருக்குக் குத்தகைக்கு விட்டுள் ளனர். கிருட்டினராசு என்பவர் இம்மனையில் கட்டியிருக்கும் கட்டிடத் தினை விலைக்கு வாங்கி, மனையைப் பயன்படுத்தி வருகிறார். இதன் ஆண்டு வாடகை ரூ.16.44 ஆகும். குத்தகையாளரால் மனை யில் மாடி வீடு கட்டப்பட்டு, வாடகைக்கு விடப்பட்டுள்ளது. தற் போது கோவிலின் நிர்வாகத்தினர் வாடகையை எற்றிக் கொடுக்க வேண்டும் என்றனர். அதற்குக் குத்தகையாளர் இணங்கவில்லை. பின்னர் 27.9.1986 அன்று கோவிலார் எழுதிய கடிதத்திற்குக் குத்தகையாளர் நிலத்தினை வாங்க விரும்பி இருப்பதாக (கடித நாள் 18.10.1983) அறிவித்துள்ளார்.

14. சென்னை, இராயபுரம் சர்வே எண் 1052/2 அப்பய்யர் சந்து கதவு எண். 5-இல் ஒரு கிரவுண்டு 541 சதுர அடி நிலம் கோவிலுக்கு உரித்தானது. இந்நிலத்தினை கி.பி. 1929 ஆம் ஆண்டு திரு. வைத்தியலிங்க நாடாருக்குக் குத்தகைக்காக விடப்பட்டது. அவருக் குப் பின், அவர் மகன் சி.வி பாண்டியன் மனையைப் பயன் படுத்தி வந்தார். இதற்கு மாத வாடகை ரூ.5/- ஆகும்.

சென்னை, சுமால் காசசு நீதி மன்றத்தில், நடந்த மனை வழக்கு என். 108/70 எம்.பி.218/71 தீர்ப்பின்படி ரூ.10278-75விற்பனைத் தொகையாக சி.வி. பாண்டியன் கட்டும்படித் தீர்ப்பாகியுள்ளது. தற்போது இந்நிலத்தினைத் திருமதி. பதிக்கரசி, க/பெ. சிவலிங்க நாடார், திரு.எம். வேலாயுதம் ஆகியோர் பயன்படுத்தி வருகிறார்கள்.

சி.வி.பாண்டியன் இறந்துவிடவே மேற்படி மனையில், கொட் டகைகள் கட்டப்பட்டு, வாடகைக்கு விடப்பட்டுள்ளன.

9.10.1986 அன்று குத்தகையாளர்கள் மனையை வாங்கிக் கொள்வதற்கான விருப்பத்தைக் கோயிலாருக்குத் தெரிவித்துள்ளனர்.

15. சென்னை, இராயபுரம் சர்வே எண். 1052/2 உள்ள ஒரு கிரவுண்டு 540 சதுர அடி ஓட்டு வீடு இருக்கிறது. இதை வைத்திய லிங்க நாடார் ஆண்டு ஒன்றுக்கு ரூ. 60/- கொடுத்துப் பயன்படுத்தி வருகிறார்.

காஞ்சிபுரம் எகாம்பர நாதர் கோவிலுக்கு வெவ்வேறு ஊர்களில் மனைகள் இருந்த விவரங்களையும் அவற்றைப் பயன்படுத்தி வரு பவர்களைப் பற்றியும் அறிந்தோம். அடுத்துக் காஞ்சியிலுள்ள கோவிலுக்குரிய மனைகளிருந்து வரும் வருவாய் குறித்து நோக்கப் படுகிறது. கோவிலுக்குக் காஞ்சியிலுள்ள மனைகளை நூற்று நாற் பது மக்கள் வெவ்வேறு தொழில்களுக்காகப் பயன்படுத்தி வருகிறார் கள். அவர்களுள் குறிப்பிடத்தக்கவர்களின் பெயரும், கடையும் வாட கையும் விரிவாகக் கீழே தரப்பட்டுள்ளன.

1. பெரிய காஞ்சிபுரம் சாலைத் தெருவில் 119 எண் உள்ள தையல் கடையில் சி. இராம கிருட்டினன் இருக்கிறார். இவர் மாதம் ஒன்றுக்கு கோவிலுக்கு ரூ.100/- அளிக்கிறார். இவர் செலுத்த வேண்டிய நிலுவைத் தொகை ரூ.600/- இருக்கிறது. இதற்குக் கோவில் செயல் அலுவலர் தகுந்த நடவடிக்கை எடுத்துள்ளார்.

2. பெரிய காஞ்புரம் சாலைத் தொருவில் 119.பி உள்ள மனையில் டி.வி. கோபால் வெற்றிலைக் கடை வைத்துள்ளார். இவர் கோவிலுக்கு மாதவாடகையாக ரூ.75/- கொடுக்கிறார். இவர் இன்னும் கொடுக்க வேண்டிய நிலுவைத் தொகை ரூ.575/-- இருப் பதால் கோவிலார் இதற்குத் தகுந்த நடவடிக்கை எடுத்திருக்கிறார்கள்.

3. பெரிய காஞ்கிபுரம் சாலைத் தெருவில் 119. சி. எண் உள்ள கோவிலுக்குச் சொந்தமான வீட்டில் வைத்திய நாதன் என்பவர் மருந்து வியாபாரம் செய்கிறார். இவர் மாத வாடகையாக ரூ.150/- கோவி லுக்குக் கொடுக்கிறார். இவர் நிலுவைத் தொகையாக ரூ.300/- கொடுக்க வேண்டி இருப்பதால், கோவிலார் இதற்குத் தகுந்த நட வடிக்கை எடுத்திறார்கள்.

4. பெரிய காஞ்சிபுரம் சாலைத் தெருவில், கோவிலுக்குச் சொந்தமான 120 என் உள்ள மனையில் ஆர். கோவர்க்கன் என்பவர்

குளிர்பானங்கள் விற்கும் கடை வைத்துள்ளார். இவர் மாத வாடகை யாக ரூ.200/- கோவிலுக்கு செலுத்துகிறார். இவர் ரூ.2048.40 நிலுவைத் தொகையாகக் கோவிலுக்குக் கொடுக்க வேண்டும்.

5. பெரிய காஞ்சிபுரம் சாலைத் தெருவில், கோவிலுக்குச் சொந்தமான 120 எண் உள்ள மனையில் எம். தனபால் என்பவர் துணிக்கடை வைத்துள்ளார். இவர் மாத வாடகையாக ரூ. 60/- கோவிலுக்குக் கொடுக்கிறார்.

6. பெரிய காஞ்சிபுரம் சாலைத் தெருவில் கோவிலுக்குச் சொந்தமான 120 எண் உள்ள மனையில் எம். இராமதாசு என்பவர் நகைக்கடை வைத்துள்ளார்.

7. பெரிய காஞ்சிபுரம் சாலைத் தெருவில், கோவிலுக்கு உரித் தான 121 எண் உள்ள இடத்தில் பாஞ்சாலப் பிள்ளை என்பவர் பல சரக்குக் கடை வைத்துள்ளார். இவர் மாத வாடகையாகக் கோவி லுக்கு ரூ. 100/- கொடுக்கிறார்.

8. பெரிய காஞ்சிபுரம் சாலைத் தெருவில், கோவிலுக்குச் சொந்தமான 122, 123 எண்களை உள்ள மனைகளில் எஸ். எ. இரவு மதுல்லா என்பவர் உரக்கடை வைத்துள்ளார். இவர் மாத வாடகை யாக ரூ. 200/- கோவிலுக்குக் கொடுக்கிறார்.

9. பெரிய காஞ்சிபுரம் சாலைத் தெருவில் கோவிலுக்குச் சொந்தமான 124 எண் உள்ள மனையில் எஸ். நாகூர் மீகான் என் பவர் பாத்திரக்கடை வைத்துள்ளார். இவர் மாத வாடகையாக ரூ. 1025/- கொடுக்க வேண்டியுள்ளது.

10. பெரிய காஞ்சிபுரம் சாலைத் தெருவில் கோவிலுக்கு உரித் தான 125 எண் உள்ள மனையில் ஆர். நடராசன் என்பவர் இனிப்பு விற்கும் கடை வைத்துள்ளார். இவர் மாத வாடகையாக ரூ. 180/- கொடுக்கிறார். இவர் நிலுவைத் தொகையாக ரூ. 1080/- கோவி லுக்குக் கொடுக்க வேண்டியுள்ளது.

11. பெரிய காஞ்சிபுரம் சாலைத் தெருவில் கோவிலுக்கு உரித்தான 125 பி. உள்ள மனையில் கே. நடேச நாயக்கர் என்பவர் மருந்துக்கடை வைத்திருக்கிறார். இவர் மாத வாடகையாக ரூ.100/- கோவிலுக்குக் கொடுக்கிறார். இவர் நிலுவைத் தொகையாகக் கோவிலுக்கு ரூ. 300/- கொடுக்க வேண்டியுள்ளது.

12. காஞ்சிபரத்திலுள்ள காந்தி சாலையில் கோவிலுக்கு உரித்தான 440 எண் உள்ள மனையைப் பட்டு ஜவுளிக்கடைச் சங்கத்

தார் பயன்படுத்திக் கொண்டு வருகின்றனர். இவர்கள் கோவிலுக்கு மாத வாடகையாக ரூ. 400/- கொடுக்கின்றனர். இவர்கள் நிலுவைத் தொகையாகக் கோவிலுக்கு ரூ. 1200/- கொடுக்க வேண்டியிருப் பதால் இதற்குக் கோயிலார் தகுந்த நடவடிக்கை எடுத்துள்ளனர்.

13. பெரிய காஞ்சிபுரம் ஏகாம்பர நாதர் கோவிலின் மாட வீதியில், கோவிலுக்கச் சொந்தமான 12 ஏக்கர் அடிமனை உள்ளது. இம்மனையில் 140 மக்கள் குடியிருக்கிறார்கள் . இவர்கள் ஆண்டு ஒன்றுக்கு ரூ. 3850/- கோவிலுக்குக் கொடுக்கிறார்கள். இவர் களுக்குக் குத்தகைப் பத்திரம் கொடுக்கப்படவில்லை.

இக்கோவிலுக்கு, காஞ்சிபுரத்தில் உள்ளது போல் சென்னை யிலும் மனைகளுண்டு அங்குள்ள மனைகள் வாயிலாக வரும் வரு மானங்கள் கீழே தரப்பட்டுள்ளன.

சென்னையில் இராசப்பா செட்டித் தெருவில் கோவிலுக்குச் சொந்தமான 323, 324 எண்கள் உள்ள மனைகளைப் பரமேசுவரி என்னும் அம்மையார் பயன்படுத்தி வருகிறார். இவர் மாத வாடகை யாகக் கோவிலுக்கு ரூ.360/- கொடுக்கிறார்.

கோவிலில் இவை தவிர முன்னரே ஏற்படுத்தப்பட்டுள்ள அறக் கட்டளைகளுடன், குலநன்கொடைகளைப் பெயர் கூற விரும்பாத சிலர் சேர்த்துள்ளனர். இவற்றை இணைக்கப்பட்ட கட்டளை என்பர்.

இவ்வாறு சென்னையில் இலக்குமதாசு தெருவில் கோவிலுக்குச் சொந்தமான ஒரு கட்டடத்திலிருந்து வரும் வருமானம், கோவிலுக்கு ஆண்டு தோறும் பங்குனி மாதத்தில் மூன்று நாள் திருவிழா நடத்து வதற்குப் பயன்படுகின்றது.

மேலே காட்டிய ஏகாம்பரநாதர் கோவிலுக்குரிய சொத்துகள் தவிர முன்னர் கூறியது போல் பல்வேறு தெய்வங்களுக்கும் அணி விக்கப்படுகின்ற அணிகலன்கள் உடைமைகளாகவே கொள்ளப் படுகின்றன.

## கோவிலுக்குரிய அணிகலன்கள்

காஞ்சிபுரம் ஏகாம்பர நாதர் கோவிலுக்குரிய அணிகலன்கள் ஐம்பது இலட்சம் ரூபாய் மதிப்புள்ளவையாகும். இந்த அணிகலன் கள் மன்னராலும் மக்களாலும் கோவில் நிர்வாகத்தினராலும் இங் குள்ள கடவுளர்க்காக நன்கொடையாகத் தரப்பட்டவை.

இவ்வணிகலன்களுள் சில எப்போதும் கடவுளருக்கு அலங்கரப் பொருள்களாக இருக்கும். பல குறிப்பிட்ட நாட்களிலும் விழாக்

காலங்களிலும் இறைவனை அலங்கரிப்பதற்காக மட்டும் பயன் படுத்தப்படுகின்றன. இந்த அணிகலன்களில் சில வழங்கியவர்கள் பெயர்களால் வழங்கப்படுகின்றன. வழங்கியவர்கள் பெயர்களைச் சில பிரிவுகளில் கீழே தரப்பட்டுள்ளன.

## ஆ. கோவிலுக்குரிய பதக்கங்கள்

1. பொருமாள் முதலியர் பதக்கம்.
2. மீனாட்சி அம்மாள் பதக்கம்.
3. இராமசாமி முதலியார் பதக்கம்.
4. கந்தப்ப முதலியார் பதக்கம்.
5. அப்பாசாமி முதலியார் பதக்கம்.
6. சுப்பராய முத்லியார் பதக்கம்.
7. ஞானப் பிரகாசர் பதக்கம்.
8. ரெட்டியார் ஜெண்டா பெருண்ட பதக்கம்.
9. பவள மாலைப் பதக்கம்.
10. காமாட்சி அம்மாள் பதக்கம்.
11. சுப்பம்மாள் பதக்கம்.
12. மலையாப் பதக்கம்.

## ஆ. கோவிலுக்குரிய மகரக் கண்டிகைகள்

1. சுப்பராய முதலியார் மகரக் கண்டிகை.
2. முனுசாமி முதலியார் மகரக் கண்டிகை.
3. இலட்சுமண செட்டியார் மகரக் கண்டிகை.

## இ. கோவிலுக்குரிய மாலைகள்

1. தங்கக் கம்பியில் இணைக்கப்பட்ட உருத்திராக்கம் மற்றும் பவளமாலை.
2. முத்து செட்டியார் பவளமாலை
3. ஐந்து பிராங்க் (பிரெஞ்சுக் காசு Frank) காசு மாலை
4. ஏலவார் குழலி அம்மன் மூன்று சர விபூதி பட்டமாலை,
5. காஞ்சி காமாட்சி மாலை.
6. கொண்டைக் கிளி மாங்காய் மாலை.
7. மகர மாலை.

## ஈ. பல்வேறு அணிகலன்கள்

1. வலது கர்ண பத்திரம்.
2. இடது கர்ண பத்திரம்.
3. திலகம் (சிவப்புக் கல் வைத்தது)
4. நெற்றிக் கட்டு.
5. மீனாட்சி அம்மாள் விபூதிப்பட்டம்.
6. தோள் பட்டைகள்.
7. பொட்டு.
8. புல்லாக்கு.
9. மூக்குத்தி - முத்து உள்ளது.
10. சரடில் உள்ள இரண்டு மாங்கல்யம்.
11. வைர அட்டிகை.
12. தலைச் சாமான்.
13. கல் வைத்த ஒட்டியாணம்.
14. ஜடை நாகம்.
15. ஒரு ஜதை அம்பாள் பாதம்.
16. நெக்லஸ் செயின்.
17. கல் பதித்த வேல்.
18. கல் வைத்த வைரமுடி.
19. முகப்பு வைத்த சரடு.
20. இலட்சுமி காசு வைத்த சங்கிலி.
21. கண்டச் சரம்.
22. சிவப்புக் கல் வைத்த அட்டிகை.
23. கெஜ்ஜா அட்டிகை.
24. வடக்கத்தி நெற்றிப்பட்டம்.
25. காமாட்சி அம்மன் பொட்டு.

## உ. வெள்ளி நகைகள்

1. உருத்திர பாதம்.
2. முலாம் பூசிய உற்சவர் பாதம்.
3. முலாம் பூசிய நடராஜர் அபய அஸ்தம்.

4. வெள்ளிக் குத்துவிளக்கு.
5. வெள்ளியில் கோக்கப்பட்ட பொட்டு, மாங்கல்யம்.
6. வெள்ளிக்கன் மலர் நான்கு; தொட்டி இரண்டு.
7. இலட்சுமி உருவம் ஒன்று.
8. பத்து முகச் சர விளக்கு.
9. வெள்ளியில் கோக்கப்பட்ட 24 பவளம்.
10. ஒரு ஜதை கல்பதித்த கர்ண பத்திரம்.
11. உற்சவ அம்மன் வெள்ளி பிரேமில் தங்கத்தில் கல் வைத்தது.
12. உற்சவ வலது பாதம்.
13. உற்சவர் இடது பாதம்.
14. முலாம் பூசிய மகுடம் இரண்டு.
15. முலாம் பூசிய கர்ண பத்திரம் இரண்டு.
16. முலாம் பூசிய சிறிய மகுடம் ஒன்று.
17. ஏலவார் குழலி அம்மன் கிளி, பூவில் உள்ளது. இதன் அடிப் பாகம் வெள்ளி பிரேமுக்கு மேல் தங்கத்தில் கல் பதித்தது.
18. ஏலவார் குழலி அம்மன் வலது அஸ்தம். வெள்ளி பிரேமில் தங்கம் வைத்து கல் பதித்தது.
19. காசு மாலை.
20. தங்கத்தில் வைரம் வைத்தது ஒரு ஜதை.
21. வெள்ளி பேலாவும் உத்ராணியும்.
22. வெள்ளி ஒட்டியாணம் கெஜ்ஜையுடன் கூடியது.
23. முலாம் பூசிய வெள்ளிச் சரடுகள் ஒன்பது.
24. மாங்கல்யம் மூன்று, குண்டுகள் நான்கு பொட்டுகள் மூன்று.
25. ஐந்து முகச்சர விளக்கு.
26. கிண்ணம் எட்டு பாலாடை ஒன்று, டபரா ஒன்று.
27. முலாம் பூசிய சுப்பிரமணியர் மகுடம்.
28. வள்ளி தேவ சேனா மகுடம் இரண்டு.
29. முலாம் பூசிய இடப காது.
30. வெல்வெட் துணியில் தைத்த வெள்ளிச் சந்திர பிறைகள் ஆயிரம்.

31. வெள்ளிக் கிரீடம் பொன் முலாம் பூசியது.
32. முலாம் பூசிய வெள்ளிச்சிரசு சக்கரம்.
33. ஒட்டியாணம்.
34. முலாம் பூசிய வேலாயுதம்.
35. வெள்ளியால் பிடிக்கப்பட்ட வலம்புரிச் சங்கு.
36. மூலவர் கற்பக் கிரகக் கலசத் தகடு முலாம் பூசியது.
37. முலாம் பூசிய கர்ண பத்திரம்.
38. முலாம் பூசிய சோமாஸ்கந்தர் முதுகுத் தகடு.
39. முலாம் பூசிய வெள்ளித் தாழம்பூ.
40. உருத்திராட்சம் ஐம்பத்து நான்கு, வெள்ளிக் கம்பியில் கோக்கப்பட்டது.
41. விநாயகர் முலாம் பூசியது.
42. முலாம் பூசிய குமிழ்கள்.
43. ஒரு பகுதி முலாம் பூசிய கேடயம்.
44. முலாம் பூசிய திருவடி இரண்டு.
45. முலாம் பூசிய நிலாத்துண்டப் பெருமாள் நாகப்படம்.
46. முலாம் பூசிய நிலாத்துண்டப் பொருமாள் மூலவர் விமானம்.
47. மூலவர் வெள்ளிக் கவசம்.
48. மூலவர் பிரபை.
49. வெள்ளி முலாம் பூசிய வைரமுடி.
50. வெள்ளி முலாம் பூசிய மகுடம்.
51. வெள்ளி முலாம் பூசிய கொண்டை.

மேற்கூறிய உடைமைகளிலிருந்தும் கோவிலுக்களிக்கப்படும் நிவந்தங்களிலிருந்தும் பெறப்படுகின்ற வருவாயைக் கொண்டு கோவில் நிருவகிக்கப்படுகிறது. இந்த நிர்வாக முறை அடுத்து விளக்கப் படுகிறது.

## கோவில் நிர்வாகம்

சங்க காலத்திலேயே காஞ்சிபுரம் ஏகாம்பர நாதர் கோவில் இருந்திருக்கலாம் என்ற எண்ணம் முதல் இயலில் சுட்டிக் காட்டப் பட்டுள்ளது.[18] அக்காலத்தில் இக் கோவிலின் நிருவாகம் எவ்வாறு அமைந்திருந்தது என்பது பற்றி அறிய இயலவில்லை. ஆனால்,

பல்லவர், சோழர், விசய நகர மன்னர் ஆகியோர் ஆட்சிகளில் கோவில் களில் பல்வேறு நிருவாக முறைகள் இருந்துள்ளன.

கோட்டம், நாடு, ஊர் என்ற பல்லவர் ஆட்சியில் நிலப்பகுதி மூன்று பிரிவாகப் பிரிக்கப்பட்டிருந்தது. நாட்டின் நிருவாகத்தைக் கவனித்தவர்கள் நாட்டார் என்றும் ஊரின் நிருவாகத்தைக் கவனித் தவர்கள் ஊரார் என்றும் பெயர் பெற்றிருந்தனர்.

அந்தணர்களுக்குத் தானமாக, வழங்கப்பட்ட ஊர்கள் 'பிரம தேயங்கள்' என்று பெயர் பெற்றுள்ளன. பிரம தேயங்களை நிருவாகம் செய்துள்ளவர்கள் அந்தணர்களேயாவர். அந்தணர்களின் கிராம ஆட்சி யானது ஊர்ச் சபையாரிடம் இருந்தது. இச் சபையாரைப் 'பெரு மக்கள்' என்று குறிப்பிட்டுள்ளனர்.

இச்சபைகள் ஒவ்வொன்றும் பல பணிகளை நிருவகித்து வந்தன. இப்பணிகளுள் கோவில் நிவந்தங்கள், நீதி விசாரணை, பயிரிடும் நிலங்களைப் பராமரித்தல் ஆகியவை முக்கியமானவை யாகும்.

மேற்கூறிய சபைகளின் கீழ்ப் பல வாரியங்கள் இருந்துள்ளன. ஒவ்வொரு வாரியமும் ஒவ்வொரு பணியைச் செய்துள்ளன. சான்றாக ஏரி வாரியம் என்பது ஏரியின் நிருவாகத்தை நடத்தியுள்ளது. தோட்ட வாரியம் என்பது தோட்ட நிருவாகத்தைக் கவனித்துள்ளது.

அந்தணர்களுக்கும் கோவில்களுக்கும் கொடுக்கப்பட்ட நிலங் கள் தனித்தனியாகப் பதிவு செய்யப்பட்டுள்ளன. பல இன மக்கள் கோவிலைக் கொண்டு வாழ்க்கை நடத்தியுள்ளனர்.

பல்லவ அரசரும், மக்களும் கோவில் வழிபாட்டில் விருப்பங் காட்டியுள்ளனர். கோவில் அருச்சகர்கள், பணி செய்வோர், கணிகையர் ஆகியோர்களுக்குத் தானங்கள் வழங்கப்பட்டுள்ளன.

கணிகையர் என்றால் பொது மகளிர் எனக் கொள்ளலாம். சோழர் காலத்தில் கணிகையர்களுக்குத் தேவரடியார் என்ற பெயரே வழங்கி வந்துள்ளது.

சோழர் காலத்தில் (கி.பி. 10ஆம் நூற்றாண்டு முதல் 13ஆம் நூற்றாண்டு வரை) கோவில்களின் பாதுகாப்புப் பணியும் அறக் கட்டளைகளும் அந்தணர்களிடமே ஒப்படைக்கப்பட்டன.

நீதி வழங்குகின்ற பொறுப்பு ஊர்ச் சமையாரிடம் இருந்துள்து. நாட்டில் அறியாமல் செய்த குற்றங்களுக்குச் சிறைத் தண்டனையைக்

கொடுப்பதில்லை. இதற்குப் பதிலாகக் குற்றவாளிகள் கோவிலுக்கு இவ்வளவு தானம் செய்ய வேண்டும் என்ற தீர்ப்பளிக்கப்பட்டுள்ளது. எடுத்துக்காட்டாக குதிரை வேட்டைக்குச் சென்று பேரரையன் என் பவன் கைப்பிழையினால் அம்பு எய்தி ஒருவனைக் கொன்று விட் டான். இக்குற்றத்திற்குக் கோவிலுக்கு அரை நந்தா விளக்கு வைக்க வேண்டுமென்று தீர்ப்பாகியது.[19]

பிறர் நன்மைக்காகத் தன்னைத் துறந்தவர்களின் வழித்தோன் றல்களுக்கு நிலங்கள் தானமாகக் கொடுக்கப்பட்டுள்ளன. இத் தானத்திற்கு 'உதிரப்பட்டி' என்பர். சான்றாகக் கோவில் நிருவாகியின் தவறுகளைக் கண்டித்துத் தீப்பாய்ந்தவன் பரம்பரையினருக்கு 'உதிரப் பட்டி' என்ற தானம் வழங்கப்பட்டு வந்தது.*

சிவன் கோவில் நிருவாகம் மூலவருடையார் என்ற சமையாரிடம் இருந்துள்ளது. இதன் உறுப்பினர்கள் அந்தணர்களாகவே இருந்து உள்ளனர்.

கி.பி.13 ஆம் நூற்றாண்டில் ஏகாம்பர நாதர் கோவிலுக்கு ஈசான தேவர் மடம் பெரிய நாட்டாரால் அன்பளிப்பாக வழங்கப்பட்டு இருக் கிறது.[20] இக்கோவிலின் கீழ்க் கோபுரத்தின் அருகில் ஆலால சுந் தரன் மடம் ஒன்று இருந்துள்ளது.[21] இம்மடம் யாரால் தரப்பட்டது என்பதற்குரிய சான்றுகள் காணப்படவில்லை.

இம்மாதிரியான சைவ மடங்கள் திருப்பதிகம் பாடுபவர்கள் தங்குவதற்கு இடமளித்து ஆதரித்துள்ளன. சான்றாகக் காஞ்சிபுரத் திலுள்ள ஞானப் பிரகாச சுவாமிகள் மடத்தில் ஈக்காடு இரத்தின வேலு முதலியார், மோசூர் கந்தசாமி முதலியார் முதலியோர் தங்கி, சைவ சமயத்திற்குத் தொண்டாற்றியுள்ளனர்.

கோவிலின் சோழர் காலத்தை அடுத்து வந்த விசய நகர மன்னர்கள் காலத்தில் சமயக்கல்வி நன்கு கற்றுத் தரப்பட்டது.[22] இவர்கள் ஆட்சியில் சமயம் பற்றிய இலக்கியங்கள் அதிகமாக இயற்றப்பட்டிருக்கின்றன.[28]

விசய நகர அரசர்களில் புகழ் பெற்றவர் கிருட்டிண தேவராயர். இவர் கோவில் நிருவாகிகளுக்குக் கூறியுள்ள அறிவுரை கீழே குறிக் கப்பட்டிருக்கிறது.

"கோவில்களுக்கும் பிராமணர்களுக்கும் விட்ட நிலங்களைப் பரிபாலனம் செய்யப் பேராசையும் சுரண்டும் தன்மையும் உள்ளவரை அதிகாரியாக நியமிக்கக்கூடாது. இந்த நபர் தெய்வச் சொத்தைச் சுரண்டினால், அந்தப் பாவம் அரசனைத்தான் சாரும்" என்று கிருஷ்ண

தேவராயர் 'அமைச்சரும் அதிகாரியும்' என்ற தலைப்பில் கூறி உள்ளார்.[24]

மேற்கூறிய செய்தியிலிருந்து கிருட்டின தேவராயர் கோவில் களின் சொத்துக்களை நன்கு பாதுகாக்க வேண்டுமென்று விரும்பி உள்ளார் என்பது புலப்படுகிறது.

கி.பி. 17 ஆம் நூற்றாண்டில் அங்கிலேயேர் கலைகளையும் பழம்பொருள்களையும் போற்றினர். இவர்கள் காலத்தில் எல்லாக் கோவில்களும் நன்கு பாதுகாக்கப்பட்டுள்ளன.

விக்டோரியா மகாராணியார் சாசனப்படி மக்களுடைய அனைத்து உரிமைகளும் பாதுகாக்கப்பட்டன. இத்துடன் தமிழ் நாட்டுக் கல் வெட்டுக்களும் சாசனங்களும் பலரும் அறியச் செய்தவர்கள். ஆங் கில அரசாங்கத்தாரே எனலாம்.

ஆங்கிலேயேர் காலத்திற்குப் பின்னர், பெரும்பாலான பெரிய கோவில்களில் பொதுவாகக் கீழ்க்காணுமாறு நிர்வாகங்கள் நடை பெற்று வந்துள்ளன. காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவிலிலும் பெரும் பாலும் இவ்வாறே நிர்வாகம் நடைபெற்று வந்துள்ளது. இதுதவிர சிறப்பாகக் காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவிலில் மட்டும், சில நிர் வாக முறைகள் இருந்துள்ளன. இவை கீழே விளக்கப் படுகின்றன.

கோவில் வேலை செய்பவர்கள் கோவில் பரிவாரங்கள் என் றும் கோவில் பணி செய்வார்கள் என்றும் அழைக்கப்பட்டுள்ளனர். கோவிலில் பணியாற்றியவர்களுக்கு ஊதியம் வழங்கப்பட்டு இருக்கிறது. ஆனால் அப்பணியாளருக்கு எந்த வேலையின் அடிப் படையில் ஊதியம் வழங்கப்பட்டிருக்கிறது என்று அறியப் போதிய சான்றுகள் இல்லை.

கோவிலை நடத்துவதற்கு ஒரு தனிப்பிரிவு இருந்துள்ளது. கோவிலின் விழாக்களைக் கவனிப்போர் மூன்று பிரிவினராக இருந் துள்ளனர்.

முதலாவதாகக் கருதப்படுபவர்கள் தூய்மையான மனத்துடன் மத சம்பந்தமான காரியங்களைச் செய்பவர்கள். இவர்கள் பூசைகளை யும் தோத்திரப் பாடல்களையும் பாடினர்.

இரண்டாவது பிரிவினர் கலைத்துறைக்கேற்ற வேலைகளைச் செய்துள்ளனர்.

மூன்றாவது பிரிவினர் கோவிலின் நிர்வாகத்தினைக் கவனித் தனர். அஃதாவது கோவிலில் வேலை செய்பவர்களை மேற்பார்வை

மிடுதல், கோவிலின் வரவு செலவு கணக்குகளைப் பார்த்தல் முதலியனவாகும்.

கோவிலில் பாட்டுப் பாடுபவர்கள் இருக்கின்றனர். அவர்களை ஓதுவா மூர்த்திகள்' என்பர். இவர்கள் நாள்தோறும் காலையும் மாலையும் கோவிலில் பக்திப் பாடல்களை இசையுடன் பாடுத லோடு, வழிபாட்டுக் காலங்களில், ஒளி அலங்காரத்திற்கு (தீபாரா தனை) முன்பும் பாடுவர். பொதுவாக ஏகாம்பரநாதர் போன்ற எல்லாச் சிவன் கோவில்களிலும் ஓதுவா மூர்த்திகள் உள்ளனர்.

பொதுவாக எல்லாக் கோவில்களிலும் புனித நீரைக் கொண்டு வருவதற்கு அந்தணர்களை ஏற்பாடு செய்துள்ளனர். விழாக் காலங் களில் இவர்கள் கூட்டங் கூட்டமாக வெள்ளிப் பாத்திரங்களையும் தாமிரப் பாத்திரங்களையும் தண்ணிர் கொண்டு வருவதற்காக ஏந்திச் செல்வர். இதற்குத் தனிக் கூலியை அந்தணர்கள் பெற்றனர்.

கோவில்களில் பூசை செய்யும் அந்தணர்கள் இரு பிரிவினராக உள்ளனர் அவர்கள் முறையே குருக்கள் (பூசை செய்வோர்) என்றும் பரிசாரகர் (குருக்களுக்கு உதவி புரிபவர்)என்றும் அழைக்கப்படுவர். இவர்களின் எண்ணிக்கை கோவில்களின் நிலைக்கேற்றவாறு வேறுபடும். இவர்கள் செய்யும் தொழில் பற்றிய விவரங்கள் விரி வாக நான்காம் இயலில் தெரிவிக்கப்பட்டுள்ளன.[25]

மதசம்பந்தப்பட்ட விழாக்களைக் கொண்டாட கோவிலில் பல ஆட்கள் இருந்தள்ளனர். அவர்களின் பணியினை யொட்டிச் சமயல் காரர்கள் பகிர்ந்தளிப்பவர்கள், கோடிக்காரர்கள், தேர் இழுப்பவர்கள், திருவிளக்குகாரர்கள், வெடி வெடிப்போர் சிற்பிகள், தச்சர்கள், கருமான்கள், தட்டார்கள், உலோகவேலை செய்வோர், குயவர்கள், துணி வெளுப்பவர்கள், பந்தலிடுவோர், மாலை தொடுப்போர், தோட் டப் பராமரிப்பு செய்வோர் எனப்பிரித்துக் கொள்ளலாம்.

### சமையல்காரர்கள்

நாள்தோறும் கோவிலுக்கு வேண்டிய உணவுகளைத் தயாரிக்கும் சமையல்காரர்கள் தலைமுறை தலைமுறையாக (பரம்பரையினர்) இருந்து பணியாற்றுகின்றனர் அல்லர். இவர்களால் தயாரிக்கப்பட்ட உணவு எல்லாக்கடவுளர்களுக்கும் படைக்கப்படும். இவர்களைக் கோவில் செயல் அலுவலரும் கோவில் அறங்காவலரும் நியமிப்பர். இவர்களுக்குக் கோவில் மானியம் இல்லை; மாதாந்திர ஊதியமே வழங்கப்படுகிறது. இவர்கள் கோவிலின் விழாக்காலங்களில் சிறந்த உணவுகளைத் தயாரிக்கும் போது, அதற்குரிய ஊதியத்தை நாணய மாகவோ பொருளாகவோ பெறுவர்.

## உணவுப் பங்கீடு செய்வோர்

இவர்கள் கோவில் பிரசாதங்களைக் கோவிலில் பணியாற்றும் உரிமையாளருக்கும் பக்தர்களுக்கும் கொடுப்பர். இவ்வேலைக்கு உரிய தலைவர் ஒருவர் இருப்பார். அவர் உணவு வழங்குவதை மேற்பார்வை செய்வார்.

## கோடிக்காரர்

இவர்கள் இரு தண்டுகளுக்கிடையில் சுவாமியை வைத்து, வெளியில் தூக்கிக் கொண்டு வருவர். உடல் உரம் பெற்றவர்களே இந்தக் கடினமான வேலையைச் செய்வர். கோவிலில் வாகனங்கள் கனமாக இருக்கும். எனவே அவற்றை இவர்கள் பெரிய தண்டுகளில் கட்டிச் செல்வர்.

நூறு அடி நீளமுள்ள பெரிய தண்டினை இவர்கள் சுவாமி தூக்கு வதற்குப் பயன்படுத்துவர். கோடிக்காரர்கள் நான்கு பக்கங்களிலும் சுவாமியைத் தூக்குவர். மேற்கூறிய தண்டினை இவர்கள் முன் தண்டு, பின்தண்டு என அழைப்பர். சுவாமி தூக்குவதற்குரிய ஊதி யத்தை, உணவோடு அன்றாடமே பெற்றுக் கொள்வர். இத்தொழி லைக் காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவிலில் நான்கு குடும்பத்தினர் பரம்பரையாகச் செய்து வருகின்றனர். அவர்களை முறையே முதல் கோடி, இரண்டாம் கோடி, மூன்றாம் கோடி, நான்காம்கோடி என்பர். இத்தொழிலால் நான்கு குடும்பங்கள் வாழ்ந்து வருகின்றன.

சுவாமியையும் அம்பிகையும் தூக்குகின்றவர்கள் பெரிய கோடிக்காரர்கள் என்றும் தண்டிகேசுவரர், விநாயகர், முருகர் ஆகிய சுவாமிகளைத் தூக்குபவர்கள் சிறிய கோடிக்காரர்கள் என்றும் கூறுவர். கந்தர்சஷ்டி, நவராத்திரி ஆகிய விழாக்களில் சுவாமியைத் தூக்குவதற்குச் சிறிய கோடிக்காரர்களைக் கோயிலார் பயன்படுத் திக் கொள்வர்.

விழாக் காலங்களில் திருவுருவங்கள் பெரிய காஞ்சிபுரத்தில் நான்கு இராச வீதிகளிலும் சுற்றிவரும்.

கோவிலில் மரத்தேர், வெள்ளித்தேர், ஆகிய இரண்டினையும் உரிய காலங்களில் இழுப்பதற்குக் கோடிக்காரர்களையே பயன் படுத்துகின்றனர். இக்கோவிலின் மரத்தேர் இழுப்பதற்கும் வெள் ளித்தேர் இழுப்பதற்கும் கோடிக்காரர்கள் உறுதியானத் தடித்த கயிறு களைப் பயன்படுத்துகின்றனர். இதற்காக இவர்களுக்குக் கோவி லில் கொடுக்கப்படும் காசுகளை 'வடம்பிடித்த கூலி' என்பர்.

## தீவட்டி பிடிப்பவர்கள்

இவர்கள் சுவாமி, கோவிலின் உள்ளே சுற்றி வரும் போதும் வெளியே சுற்றிவரும்போதும் எதிரில் தீவட்டியைப் பிடிப்பர். இதற்கு ஒரு உலோகத்தகடு பயன்படுகிறது. இதற்குத் 'திருக்கூலாளி பந்தம்' என்று பெயர். இத்தொழிலைச் செய்பவருக்குக் கொடுக்கும் கூலிக்குத் 'தீவட்டிக் கூலி' என்று பெயர்.

## திருவிளக்குக்காரன்

இவன் சுவாமிக்கு வேண்டிய விளக்கு அலங்காரங்களைச் செய்வான். சிறப்பாகத் திருவிழாக்காலங்களில் இவன் சுவாமிக்கு முன்பு விளக்கு அலங்காரங்களைச் செய்து, அதற்குரிய ஊதியத் தினைப் பெற்றுக் கொள்வான். இத்தொழிலுக்குக் கோவிலில் வேண் டிய போது ஆட்களைக் கோவிலின் செயல் அலுவலர் நியமித்துக் கொள்வார்.

## வெடி வெடிப்போர்

இவர்கள் கோவிலில் விழாக் காலங்களில் வெடி வெடித் தலை யும் வாணங்கள் விடுதலையும் மேற்கொள்வர். இவர்கள் குறிப்பிட்ட சில விழாக்களில் வண்ண வண்ண வாணங்களை விடுவர். இத்தொழி லைச் செய்பவருக்கு 'வாணம் சுடும் ஆள்' என்று பெயர்.

## சிற்பிகள்

கோவிலில் சிற்ப வேலை செய்பவர்களுக்குச் சிற்பிகள் என்று பெயர். இவர்கள் தபதிகள் எனவும் அழைக்கப்படுவர். இவர்கள் கருங்கல்லில் அழகான உருவங்களைச் செதுக்குவர். தென் இந்தி யாவில் இத்தொழிலைச் செய்யும் சிற்பிகள் தலைமுறை தலை முறையாகச் செய்து வருகின்றனர்.

கோவிலில் திருவுருவங்களைப் புதுப்பிப்பதும், கோவில் மண்ட பங்களைப் பழுதுபார்ப்பதும் இவர்களுடைய முக்கியமான தொழி லாகும். இவர்கள் தொழிலில் நிரந்தரம் இல்லாமல், வேலைக்கேற்ற ஊதியத்தைப் பெற்றுக் கொள்கின்றனர். சிற்சில சமயங்களில் இவர் களது வேலைத் திறனைப் பாராட்டி, ஊதியத் தோடு பரிசுகளையும் பெறுவர்.

## தச்சர்கள்

இவர்கள் கோவிலின் வாகனங்களையும் வாகனங்களைத் தூக்கிச் செல்லும் தண்டுகளையும் குடைக்காம்புகளையும் செய்வ

தோடு, அவற்றைச் செப்பனிடும் பணிகளையும் செய்வர். இத்தச்சர் கள் கோவிலில் மரத் தேரினைச் செப்பனிடுவர். தேர்கள் தங்குத் தடை யின்றிச் செல்வதற்கான சீர்திருத்தங்களைச் சக்கரங் களில் செய்வர். இவர்களுக்கு மானியங்கள் இல்லை.

### கருமான்கள்

கோவிலில் கருமான்கள் மரத்தேருக்குரிய இரும்புத் தகடு களையும், திருகு ஆணிகளையும் கம்பிகளையும் பொருத்துவார்கள். கோவிலின் தேர் ஒழுங்காகச் செல்வதற்கும் நிறுத்துவதற்கும் பெரிய இரும்புக் கட்டைகளைச் செய்வர். இதற்குத் 'திருத்தேர் இரும்பு முட்டி' என்று பெயர். இவர்களுக்கும் கோவிலில் மானியங்கள் இல்லை.

### தட்டார்கள்

இவர்கள் கோவிலுக்கு மிகவும் இன்றியமையாதவர்கள் எனலாம். இவர்கள் விலையுயர்ந்த அணிகலன்களைச் சுவாமிக்கும் அம்பிகைக்கும் நுட்பமாகவும் அழகாகவும் செய்வர். இவர்கள் அவ் வப்போது நகைகளைப் பழுது பார்த்து, அவற்றிற்குரிய கூலிகளைப் பெற்றுக் கொள்வர்.

### குயவர்களும் வண்ணார்களும்

குயவர்கள் கோவிலுக்கு வேண்டிய பாத்திரங்களைத் தயாரித் துக் கொடுப்பர். அப்பாண்டங்களில் தானியங்களையும், பருப்பு வகைகளையும் கோவிலார் வைத்துக் கொள்வர். இவர்கள் தம் வேலைக்குத் தகுந்தாற் போல, கூலியைப் பெற்றுக் கொள்வர்.

வண்ணார்கள் கோவிலில் உள்ள திருவுருவங்களுக்கு அணி விக்கப்படும் ஆடைகளைத் தூய்மையாக்கிக் கொடுப்பர். கோவிலில் உள்ள பழைய துணிகளை வீணாக்காமல் அவற்றைத் தீவட்டிக்குக் கொடுப்பர். இவர்கள் செய்யும் வேலைக்கு அவ்வப் போது, கோவி லின் செயல் அலுவலரிடமிருந்து கூலியைப் பெற்றுக் கொள்வர்.

### பந்தலிடுபவர்கள்

இவர்கள் தென்னை மரத்தின் ஓலைகளினால், கோவிலின் திருவிழாக் காலங்களில் பந்தலிடுவர். மூங்கில்களைக் குறுக்கும் நெடுக்குமாகப் போட்டுச் சிறப்பாகப் பந்தலமைப்பர். இப்பந்தல் யாத்திரிகர்களுக்குப் போதிய நிழலைத் தருகிறது. இவர்கள் பந்தல் களின் ஓரங்களில் மாவிலைத் தோரணங்களைக் கட்டுவர். கோவி லில் இவர்களுக்குக் கொடுக்கும் பணத்தைப் 'பந்தல் சிங்காரிக்கக் கூலி' என்பர்.

## தோட்டக் காவலரும் மாலைகளைக் கட்டுவோரும்

இவர்களது பணியை மக்கள் புனிதமாகக் கருதுகின்றனர். கோவிலின் தோட்டங்களை மேற்பார்வை செய்வதும், அவ்விடத்திலுள்ள பூக்களைப் பறித்து மாலைகள் கட்டுவதும் இவர்களது தொழிலாகும். இத்தொண்டுகள் காஞ்சிபுரத்தில் மட்டுமல்லாமல் சிதம்பரம், திருவண்ணாமலை ஆகிய இடங்களிலும் உள்ளன. இவர்கள் கோவிலில் செய்யும் வேலைக்கு ஏற்றவாறு, கூலியினைப் பெற்றுக் கொள்வர்.

மேற்கூறிய செய்திகள் யாவும் பல்லவர் காலந்தொட்டு, அண்மைக் காலம் வரையில் பொதுவாக எல்லாக் கோவில்களிலும், குறிப்பாகக் காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோமிலிலும் நடைபெறும் செயல்களாகும்.

இனி ஏகாம்பர நாதர் கோவிலின் நிர்வாகத்தின் வரலாற்றினைச் சிறப்பாகக் காண்போம்.

## கோவில் நிர்வாகத்தின் வரலாறும் அலுவலர்களும்

காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவிலில் பல்லவர் காலத்தில் (கி.பி.610 - 846) இருந்த நிர்வாக அலுவலர்களும் மேற்பார்வையாளர்களும் சோழர் காலத்திலும் (கி.பி. 907-1246) இருந்து உள்ளனர். மேற்கூறிய அலுவலர்கள் மேற்பார்வையாளர்களுள் வாரியரும் காரனாட்டாரும் குறிப்பிடத்தக்கவர்கள்.

வாரியர்களின் கடமைகள் வரையறுக்கப்பட்டுள்ளன. ஆனால் காரனாட்டாரின் கடமைகள் வரையறுக்கப்படவில்லை. வாரியத்தில் உள்ள உறுப்பினர்க்கு நிலமும், சொந்த மனையும் இருக்க வேண்டும்.

இவைகளுடன் அவர்கள் கல்வியறிவிலும் ஒழுக்கத்திலும் தகுதியுடையவர்களாக இருப்பர். கல்வியிலும் ஆண்டிலும் மூத்தார் பன்னிருவரைச் சம்வத்சரவாரியாகத் தேர்ந்தெடுப்பர். இவர் தோட்ட வாரியராகவும், ஏரிவாரியராகவும், பொன்வாரியராகவும் பஞ்சவாரியராகவும் தேர்ந்தெடுக்கப்படுவர். இவர்களை ஆளுங்கணத்தார் எனவும் பெருமக்கள் எனவும் கூறுவர். வாரியப் பெருமக்கள் கூடுவதற்கு ஊர்தோறும் மாளிகைகள் அமைக்கப்பட்டிருந்தன. இவர்களுள் நீதி விசாரணை செய்வதும், அறநிலையங்கள் நன்கு நடைபெறுகின்றனவா என்று பார்ப்பதும் சம்வத்சரவாரியரது கடமையாகும்.

ஏரி முதலிய நீர் நிலைகளைப் பழுதுறாமற் பாதுகாத்தலும், விளைச்சலுக்கு வேண்டிய நீரைப் பாய்ச்சுதலும் ஏரி வாரியக்காரரும்

நிலத்தைப் பொருத்தனவற்றைத் தோட்ட வாரியக்காரரும் கவனித்திருந்தனர். ஊரில் வழக்கத்தில் உள்ள செப்புக்காசுகளையும் பொற்காசுகளையும் ஆராய்வது பொன் வாரியக்காரர் பொறுப்பாக இருந்துள்ளது. பஞ்ச வாரியக்காரரது கடமை இன்னதெனத் தெரியவில்லை. மேற்கூறிய வாரியக்காரர்கள் பணித்தவற்றைச் செய்பவர்கள் காரனாட்டார் எனப்பட்டனர்.

உத்திரமேரூர் கல்வெட்டுகள் சோழர் காலத்தில் இருந்த வாரியங்களின் அமைப்பு முறைகளைப் பற்றி விரிவான செய்திகளைத் தருகின்றன. வாரியரும் காரனாட்டாரும் கோவிலுக்குப் பொறுப்பாக வேலை செய்துள்ளனர். கோவிலின் நிர்வாகம் பார்ப்பவர்களை ஸ்ரீ காரியம் செய்வார் என்பர். ஸ்ரீ காரியம் செய்பவர்கள், 'கோயில் கணப் பெருமக்கள்' என்றும் 'பாதமூலத்தார்' என்றும் அழைக்கப்படுவர்.

ஆண்டுதோறும் எல்லாக் கோவில்களின் வரவு, செலவு கணக்குகளும் அரசாங்க அதிகாரிகளால் கண்காணிக்கப்பட்டன. இந்த அதிகாரிகள் கோவில் கணப் பெருமக்கள் முன்னிலையில் கோவில் நகைகளை மதிப்பீடு செய்தனர்.

கோவில் பணத்தை எடுத்துக் கொண்டவர்களும் கோவிலுக்குக் கொடுக்க வேண்டிய நெல், நிலக்கடலை முதலியவற்றைக் கொடுக்கத் தவறிய குத்தகையாளர்களும் 'சிவத் துரோகிகள்' என்றும் 'ஊர்த் துரோகிகள்' என்றும் பொது மக்களால் இகழ்ந்து கூறப்பட்டனர்.[27]

வாரியப் பெருமக்கள் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இவர்கள் கோவில் திருப்பணி, நீதி வழங்கல், உழவு வரி வசூலித்தல் முதலிய வேலைகளைக் கவனித்தனர்.

கோவிலில் ஆட்சி செய்து வந்த குழுவினரை 'அமிர்த கணத்தார்' என்று அழைக்கப்பட்டனர். இந்த அமிர்த கணத்தார்கள் கோவில் பத்திரங்களையும் கோவில் பொருள்களையும் கோவிலுக்கு வரும் தானங்களையும் பாதுகாத்து வந்தள்ளனர்.

ஊர் அல்லது நகரத்தில் உள்ள வாரியத்தில் பெரிய மனிதர்களின் ஒத்துழைப்பு கோவிலுக்கு அக்காலத்தில் இருந்து உள்ளது.

கி.பி. 11ஆம் நூற்றாண்டிலிருந்து 18ஆம் நூற்றாண்டு வரை முதலில் வாரியப் பெருமக்களும் பின்னர் தானத்தார்களும்[28] கோவில் நிர்வாகத்தினைக் கவனித்தனர்.

கி.பி. 1221 ஆம் ஆண்டு வரையில் வாரியங்கள் செயல்பட்டன. பின்னர் குழுவாகக் கோவிலின் நிருவாகத்தைக் கவனித்தவர்கள் தானத்தார் என்று பெயர் பெற்றனர்.

முந்தைய குறிப்பேடுகளில் கோவிலின் முக்கிய அலுவலர்களாக இருந்தவர்கள் கர்ணத்தான் என்று அழைக்கப்பட்டனர். கோவில் பணியாளர்களும் கர்ணத்தாரும் கோவிலுக்குப் பணியாற்றியதற்காகப் பணங்களைப் பெற்றுள்ளனர். வாரியப் பெருமக்களும் கர்ணத்தாரும் ஒன்று சேர்ந்து கோவிலின் வேலைகளைப் பார்த்தலும் உண்டு.

## கர்ணத்தான்

கி.பி.12ஆம் நூற்றாண்டில் கர்ணத்தான் என்பவரே கணக்காள ராகவும் குறிப்பேடுகளை வைத்துக் கொள்பவராகவும் இருந்துள்ளார்.

வாரியத்தலைவரே கோவிலின் செயல் அலுவலராக இருந்து உள்ளார். கர்ணத்தார்களே எல்லாச் செயல்களுக்கும் கணக்குகளை வைத்திருந்தனர். பின்னர் சோழர்களும், விசய நகர அரசர்களும், கோயில் கணக்கு என்ற பெயரில் கோவிலின் வரவு, செலவு கணக்கை எழுதிக் கையெழுத்திட்டு வைத்துள்ளனர். கணக்காளர்களுக்குத் தானியமாகவும் பொருளாகவும் ஊதியம் வழங்கப்பட்டது.

கி.பி.1517ஆம் ஆண்டில் கிருட்டின தேவராயர் ஆட்சியில் கோவிலில் கணக்குப் பார்ப்பவர்களைக் கணக்குப் பிள்ளை என்று அழைத்தனர். இக்கணக்குப்பிள்ளையே கோவிலின் எல்லாக் குறிப் பேடுகளையும் வைத்திருந்தார். மேற்கூறியவரின் மரபினரே கோவில் அலுவலகத்தில் வேலைகளைச் செய்வர்.

திருக்கோயிலில் ஸ்ரீபண்டாரம் என்பது கோவிலின் கருவூலமாகக் கருதப்பட்டது. அதற்குப் பொறுப்பு உள்ளவர்கள் 'ஸ்ரீ பண்டாரத்தார்' எனப்பட்டனர்.

## ஸ்ரீ பண்டாரத்தார்

திருக்கோவிலுக்கு அன்பளிப்பாக வந்த பணம், பொருள் ஆகிய வற்றைப் பண்டாரத்தார் கருவூலத்தில் சேர்த்தனர். நிர்வாகத்தின் காரணமாகப் பொருத்தமான விலைக்குப் பண்டாரத்தார் நிலங்களை விற்றனர். இதற்குத் தானத்தார்கள் அனுமதியளிக்க வேண்டும். கோவிலின் பொருளை விற்றுப் பணமாக வசூலிக்கப் பண்டாரத்தாரும் அனுமதி அளிக்க வேண்டும். அவர்கள் தனித்தோ தானத்தார்களுடன் சேர்ந்தோ அனுமதி அளிக்கலாம்.

கோவிலில் கருவூலம் தனியாக இருந்தது. கோவிலில் கடவுளர் களுக்காக ஏற்படுத்தப்பட்ட அறக்கட்டளைகளைத் தனித்தனி கணக்குகளாகக் கருவூலத்தில் வைத்திருந்தனர். ஆனால் சிறு விக் கிரகங்களுக்கு இவ்வாறு இருந்தது பற்றித் தெரியவில்லை.

## கோவில் கட்டுப்பாடு

சோழ அரசர்கள் காலத்திலும் (கி.பி. 846- 1279) விசய நகர அரசர்கள் காலத்திலும் (கி.பி. 1358- 1736) கோவிலின் அறக் கட்டளையை, அதன் அங்கத்தினர்கள் சோதனை செய்யும் பழக்கம் இருந்தது. கோவிலின் செயற்பாடுகளில் அரசு தலையிடுவதில்லை.

அரசு கோவிலுக்குக் கொடுக்கும் வருடாந்திர பணத்தின் மூலம் கோவில் நிர்வாகம் நன்கு நடைபெற்றுள்ளது. உள்ளூரில் உள்ள அலு வலர்களால் கோவில் மேற்பார்வை செய்யப்பட்டள்ளது.

சோழர் காலத்தில் கோவிலின் வருமானங்கள் வரையறைக்குட் பட்டிருந்தன. சான்றாக ஏகாம்பர நாதர் கோவிலுக்கு முதலாம் குலோத் துங்கன், இரண்டாம் குலோத்துங்கன் ஆகியோர் காலத்தில் நடந்த தானங்கள் ஐந்தாம் இயலில் குறிக்கப்பட்டுள்ளன.

கோவிலுக்கு வரும் வருமானமும் நன்கொடைகளும் அதிகமான பின்னர் அரசு கட்டுக்காடு அதிகமானது. அரசர்களும் மற்ற அலு வலர்களும் கோவிலுக்குச் சென்றபோது தகுந்த மரியாதையைப் பெற்றனர். அரசர்கள் தனிப்பட்ட முறையில் பொருள்களை வழங் கினர். உள்ளூரில் இருக்கிற தரகர் ஏதாவது தவறு செய்தால் அரச ருக்குத் தானத்தார் தெரியப்படுத்தினர். சான்றாக, கி.பி. 1529-இல் அச்சுதராயர் அளித்த நன்கொடையைச் செல்லப்பா என்பவர் சிவன் கோவிலுக்கு அதிக நிலத்தையும் வரதராசருக்குக் குறைந்த நிலத் தையும் அளித்து விட்டார்.

உடனே தானத்தார் மேற்கூறிய முறைகேட்டினை அரசனுக்குத் தெரிவித்தனர். பின்னர் அச்சுதராயர் காஞ்சியைப் பார்வையிட்ட போது, சிவன் கோவிலான ஏகாம்பர நாதருக்கும், விட்டுணு கோவி லான வரதராசருக்கும் நிலத்தைச் சமபங்காக்கினார்.[29] இதன் விவரம் ஐந்தாம் இயலில் கூறுப்பட்டுள்ளது.[30]

இவ்வாறு அரசுக்கும் கோவிலுக்கும் நிலவி வந்தத் தொடர்பு கிழக்கு இந்திய கம்பெனியின் இந்திய வருகையோடு முடிவடைந்தது.

ஆங்கிலேயர்கள் மத சம்பந்தமான நிலையங்களை மிகுந்த உற்சாகத்துடன் வளர்த்தனர். இதனால் அதிகமான வருமானம் கோவி லுக்குக் கிடைத்தது.

கி.பி 1841 இல் கிழக்கு இந்திய கம்பெனியில் உள்ள இயக் குநர்கள் மத சம்பந்தப்பட்ட விழாக்களில் தாம் தலையிடுவதில்லை எனத் தீர்மானித்தனர். இதனால் உள்ளூரில் இருந்த பொது மக்களால்

கோவில் நிருவாகத்தைக் கவனிக்க ஒரு குழு ஏற்படுத்தப்பட்டது. அக்குழுவில் உள்ள உறுப்பினர்கள் அறங்காவலர்கள் எனப்படுவர்.

## அறங்காவலர்களின் கடமைகள்

சொத்துரிமை மிகுந்த கோவிலுக்கே அறங்காவலர் குழு நியமிக்கப்படும். காஞ்சிபுரம் ஏகாம்பர நாதர் கோவில் சொத்துரிமை மிகுதியாக உள்ள கோவிலாதலால் இதற்கும் அறங்காவலர் குழு உண்டு. இக்குழு உறுப்பினர்களின் பொறுப்புகளும் கடமைகளுமாக அரசு அறிவித்துள்ள செய்திகளாவன.[31]

1. அறங்காவலர்களின் எண்ணிக்கை மூன்றுக்குக் குறையாமலும் ஐந்துக்கு மேற்படாமலும் இருக்க வேண்டும்.
2. அறங்காவலர்களுள் ஒருவர் நிர்வாக அறங்காவலராகத் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்.
3. அறங்காவலர்கள் புதிய பதவிகளைத் தோற்றுவிக்கக் கூடாது. கோவிலில் பணியாற்றுபவர்களுக்கு மாத ஊதியமும் உதவித் தொகையும் இந்து சமய அறநிலைய ஆட்சித் துறையின் ஆணையர் ஆணையின்றி மாற்றியமைக்கக் கூடாது.
4. கோவிலில் எல்லாப்பற்றுச் சீட்டுகளும் (இரசீதுகளும்) கோவில் கணக்கிலும் அறங்காவலர் குழுவின் தலைவர் பெயரிலும் இருக்கவேண்டும். அறங்காவலர் குழுவின் தலைவருக்குப் பணத்தை வாங்கவும் செலுத்தவும் உரிமை உண்டு.
5. நிர்வாக அலுவலர் தவறு செய்தால், அத்தவற்றினை அறங்காவலர்களும், அறங்காவலர் குழுவின் தலைவரும் இந்து சமய அறநிலைய ஆட்சித் துறைத் துணை ஆணையருக்கு அறிவிக்க வேண்டும்.
6. அறங்காவலர்கள் எந்த நேரத்திலும் கோவிலில் உள்ள பதிவேடுகளையும் கணக்குகளையும் நிர்வாக அலுவலர் பொறுப்பிலுள்ள பொருள்களையும் கண்காணிப்பதற்கு அதிகாரம் பெற்றிருக் கிறார்கள்.
7. அறங்காவலர்கள் குத்தகைக்கு விடப்பட்ட நிலங்கள் பற்றியும் ஆண்டு வரவு, செலவு அறிக்கை பற்றியும் கோவிலின் நிலங்கள் பழுதுபார்த்தல் பற்றியும் கோவிலின் மனைகள் பற்றியும் கூட்டத் தைக் கூட்டி முடிவெடுப்பர்.

8. வங்கியிலிருந்து பணத்தைப் பெற்றுக் கொள்வதற்கு, அறங் காவலர்கள், கோவிலின் செயல் அலுவலருக்க அதிகாரம் அளிக்க வேண்டும்.

9. அறங்காவலர்கள் எப்பொருளையும் மற்றவர்களுக்குக் கொடுக்கக்கூடாது. இதற்கு இந்து சமய அறநிலைய ஆட்சித் துறையின் அனுமதியைப் பெற வேண்டும்.

10. அறங்காவலர்கள் கோவிலின் அசையாத பொருள்களைக் குத்தகைக்கு விடும்போது யார் அதிகம் கேட்கிறார்களோ, அவர்களுக்கே விடவேண்டும். இதற்கு இந்து சமய அற நிலைய ஆட்சித் துறையினர் மேற்கொள்ளும் முறைகளைப் பின்பற்ற வேண்டும்.

11. அறங்காவலர்கள் தங்கள் கடமைகளை உணர்ந்து கோவிலில் செயல்படுவர்.

12. திருக்கோவிலுக்கு அசையும் பொருள், அசையாத பொருள், விக்கிரகங்கள், பொருள்கள் ஆகியவற்றினைத் தானமளித் துள்ளவர்கள் பிணையாட்களாக (கோயிலோடு தொடர் புடையவர்களாக) இருக்கக்கூடாது.

காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவிலில் 1917ஆம் ஆண்டுமுதல் தற்காலம் வரை அறங்காவலர்களாக இருந்தவர்களின் பெயர்களைப் பின்னிணைப்பு -2இல்[32] காண்க.

## தக்கார் (Fit Person)

திருக்கோவிலில் 1983 ஆம் ஆண்டுதான் தக்கார் (Fit Person) பதவி ஏற்பட்டது. இப்பதவியை வகிப்பவர் கோவிலின் சிறப்பிற்கும், வளர்ச்சிக்கும் அரும்பாடுபடுபவராக இருப்பார். இவர் இந்து சமய அறநிலைய ஆட்சித் துறையின் ஆணையர் அவர்களால் நியமிக்கப் படுகிறார். கோயிலைச் சீர்திருத்தம் செய்வதற்கு இவருக்கு உரிமை யுண்டு. இவர் கோவில் இருக்கும் ஊரில் தகுதியுடையோராயும் பெருமையிற் சிறந்தோராயும் இருப்பார்

இவ்வாறு காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவிலில் தக்காராக மூவர் இதுவரை பதவி வகித்துள்ளனர்.[33]

## செயல் அலுவலர் ( Executive Officer)

இந்து சமய அறநிலைய ஆட்சித் துறையின் ஆனையர் அவர் களால் கோவிலுக்குச் செயல் அலுவலர்கள் 1944 ஆம் ஆண்டில்

இருந்து நியமிக்கப்பட்டுள்ளனர். அவர்களுக்குரிய கடமைகளை அரசு அறிவித்துள்ளது. அவைகளாவன,

1. திருக்கோவிலின் திட்டங்களை நிறைவேற்றும் அலுவலர். கோவிலின் அன்றாட நிர்வாகத்திற்குப் பொறுப்பாளராவர். பணத்தைப் பெறுவதும், செலவிடுவதும் கோவிலின் நகை களைப் பத்திரப்படுத்தி வைப்பதும் செயல் அலுவலர் பொறுப்பிலேயே இருக்கும்.

2. அலுவலகக் குறிப்பேடுகளும், செலவினங்களுக்குரிய பற்றுச் சீட்டுகளும் செயல் அலுவரிடத்திலேயே இருக்கும். அவர் உத்தரவின்படியே மற்றவர்கள் பொருள்களைச் செலவு செய்யலாம்.

3. செயல் அலுவலரின் கட்டுப்பாட்டிற்கேற்பவே பணியாட்கள் வேலை செய்ய வேண்டும். மேலும் அலுவலர் கோவிலுக்கு ஆட்களை வைப்பதற்கும் பதவி உயர்வு அளிப்பதற்கும் ஒழுங்கு நடவடிக்கை. எடுப்பதற்கும் இந்து அறநிலைய ஆட்சித் துறையின் அனுமதி பெற்றே செயல்பட வேண்டும்.

4. கோவிலின் செயல் அலுவலர், கோவிலுக்காக உரிமை பேசுவார். இவர் அறங்காவலர்களின் அனுமதி பெற்றே, நீதிமன்றத்தில் வழக்கத் தொடர வேண்டும். மேலும் இந்து சமய அறநிலைய ஆட்சித் துறையின் அனுமதியையும் பெற வேண்டும்.

5. செயல் அலுவலர் ஒவ்வொரு மாதமும் கோவிலில் செல வாகும் விவரத்தை அறங்காவலருக்கு அறிவிக்க வேண் டும். இவர் அறங்காவலர் அனுமதி பெற்றே செலவு செய்ய வேண்டும். எனவே செயல் அலுவலர் வங்கியில் இருக்கிற தொகைக்கு ஏற்றவாறு காசோலை தயாரித்துக் கொள்ள வேண்டும். இவர் அறங்காவலர் குழுவின் தலைவர் கை யெழுத்தைக் காசோலையில் வாங்கியதும் பணத்தைப் பெற்றுக் கொள்ளலாம்.

6. செயல் அலுவலர் அவ்வப்போது வங்கியிலிருந்து பெற்றுக் கொண்ட தொகைக்குக் கோவிலின் பெயரில் கணக்கு வைத் துக் கொள்ள வேண்டும். எந்தவிதமான சூழ்நிலையிலும் கோவிலின் பெயரில் இருக்கும் பணத்தைச் செயல் அலு வலர் அவர்கள், இந்து சமய அறநிலைய ஆட்சித் துறையின்

ஆணையர் இசைவின்றிச் செலவு செய்ய முடியாது. இந்து சமய ஆணையர் வரையறை செய்துள்ள பணத்திற்கு மேற்படாமல் இவர் வங்கியிலிருந்து பெற்றுக் கொள்ளலாம்.

செலவினங்கள் ரூ.25/- க்கு மேல் இருக்குமானால், செயல் அலுவலர் காசோலையாகக் கொடுக்க வேண்டும். எல்லாப் பற்றுச்சீட்டுகளும் கோவில் கணக்கிலும் அறங்காவலர் குழுத் தலைவர் பெயரிலும் இருக்கவேண்டும். ஆனால் காசோலைப் புத்தகம் செயல் அலுவலரிடமே இருக்க வேண்டும்.

7. செயல் அலுவலர் தனியாக அவர் பெயரில் வங்கியில் கணக்கு வைத்திருக்க வேண்டும். அக்கணக்கில் அவர் பணத்தைச் செலுத்தவோ பெறவோ வேண்டும்.

8. கோவிலில் செயல் அலுவலரே அன்றாடம் நடைபெறும் பூசைகளுக்கும், வழக்கப்படி நடைபெறுகிற விழாக்களுக்கும் பொறுப்பானவராவார்.

9. கோவில் செயல் அலுவலரே இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை ஆணையருக்கு அளிக்க வேண்டிய தகவல்களைக் குறித்த காலத்தில் அனுப்புதல் வேண்டும்.

செயல் அலுவலர் ஒவ்வொரு மாதமும் செய்த வேலைகளை அடுத்த மாதம் முதல் வாரத்திற்குள் இந்து சமய அறநிலையத் துணை ஆணையருக்கு அனுப்ப வேண்டும்.

மேலும் அவர் ஒவ்வொரு மாதமும் திருக்கோவிலின் பண்டகசாலை, சரிபார்க்கப்பட்ட குறிப்பை அடுத்த மாத முதல் வாரத்திற்குள் அனுப்ப வேண்டும். மாதாந்திர கோவில் கணக்குகளை அடுத்த மாதம் பதினைந்து நாட்களுக்குள் அனுப்ப வேண்டும்.

10. செயல் அலுவலர் காலாண்டில் வரும் வசூல்களையும் நிலுவைகளையும், சரிபார்த்த தகவல்களையும், அசையும் பொருள், அசையாப் பொருள் பற்றிய குறிப்பினையும் ஒவ்வோர் ஆண்டும் ஜூலை மாதத்தில் இந்து சமய அறநிலையத்துறை ஆணையருக்கு அனுப்ப வேண்டும்.

மேற்கூறியவற்றின் நகல்களை அறங்காவலருக்குச் செயல் அலுவலர் அனுப்புதல் வேண்டும்.

11. பசலி முடிவதற்குள் செயல் அலுவலர் குறிப்பிட்ட படிவத்தில் வரவு செலவு அறிக்கையை அறங்காவலர் கூட்டத்தில் அளிக்க வேண்டும். அந்த அறிக்கையின் ஒரு படியினை இந்து சமய அறநிலைய அட்சித் துறை ஆணையருக்கும் அனுப்ப வேண்டும்.

    ஒரு சமயம் அறங்காவலர்கள் கூட்டம் நடைபெறாவிட்டால், இந்து சமயத் துணை ஆணையரிடம், வரவு செலவு அறிக்கை பற்றிய ஒப்புதலைப் பெற வேண்டும்.

12. செயல் அலுவலர் கோவிலுக்குள்ள எப்பொருளையும் மற்றவர்களுக்குக் கொடுக்கக்கூடாது. இதற்கு இந்து சமய அற நிலைய ஆட்சித் துறையின் இசைவைப் பெற வேண்டும்.

13. செயல் அலுவலர் கோவிலில் தேவையற்ற பொருள்களையும் தானியங்களையும் பயனில்லாத பொருள்களையும் அறங் காவலர்களைக் கலந்தாலோசித்தும் இந்து சமய அற நிலைய ஆட்சித் துறையின் ஒப்புதல் பெற்றும் விற்று விட அதிகாரம் உண்டு.

14. இந்து சமய அறநிலைய ஆட்சித் துறையின் துணை ஆணையர், அவ்வப்போது அறிவிக்கும் விதிமுறைகளைச் செயல் அலுவலரும் அறங்காவலர்களும் மற்ற பணியாட்களும் பின்பற்ற வேண்டும்.

காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவிலுக்கு 1955 ஆம் ஆண்டிலிருந்து செயல் அலுவலர்கள் நியமிக்கப்பட்டு வருகின்றனர். அவர்களது பட்டியலைப் பின்னிணைப்பு 3- இல்[34] காண்க.

இக்கோவிலுக்குரிய அறங்காவலர்களும் செயல் அலுவலர்களும் உரிய காலங்களில் நியமிக்கப்பட்டு, 1955ஆம் ஆண்டு, அரசு அறிவித்துள்ள அறிவிப்பின்படி, ஒழுங்காக இக்கோவில் நிர்வாகம் நடைபெற்று வருகிறது எனலாம்.

இவ்வியலில் கோவிலின் உடைமைகளும் கோவில் நிர்வாகமும் பற்றிய விவரங்கள் நோக் கப்பட்டன. இதை அடுத்த நான்காம் இயலில் கோவிலில் எவ்வாறு பூசைகளும் வழிபாடுகளும் மேற்கொள்ளப்படுகின்றன என்பது விளக்கப்படுகிறது.

### அடிக்குறிப்புகள்

1. இதன் பசலி 1393-இல் (கி.பி. 1983) பொது ஏல குத்தகைக்கு விடப்பட்டது. ஏலம் எடுக்க யாரும் முன் வரவில்லை. எனவே பசலி 1394 முதல் 1396 பசலிக்கு வார குத்தகை விடப்பட்டுள்ளது.

   இரசீது எண். 1122, நாள் : 31.5.86

   பசலி என்பது கி.பி. 591 முதல் தொடங்குவதும் கி.பி. 1555 ஆம் வருடத்தில் அக்பர் சக்கரவர்த்தியால் ஏற்படுத்தப் பட்டதுமான ஓர் ஆண்டு.

   கழகத் தமிழ் அகராதி, மு.கா.நூ.ப. 629

2. பசலி 1364 குத்தகைக்கு விடப்பட்டது. பசலி 1380 முதல் 1384 வரை குத்தகைதாரர் திரு.வி.வைகுந்தம் பயிர் செய்து வந்தார். பாக்கி ஏற்பட்டதால் பசலி 1385 முதல் 1396 வரை வார சாகுபடி முறையில் 91 பேர் பயிர் செய்து வருகிறார்கள்.

   Original suit No (O.S) 121, 78 Sub. Court, Kancheepuram dated 20-8-78.

   Miscellaneous Demand Register, Dated1.7.1976.

   Receipt No.1123 dated 31.5.86. நெல் வாரமாகப் பெறப்பட்டுள்ளது.

3. பசலி 1390 இல் குத்தகைக்கு விடப்பட்டுள்ளது.

4. 1397 பசலிக்கு நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது.

5. பசலி 1396 இல் குத்தகைக்கு விடப்பட்டுள்ளது.

6. தரிசு - பயிர் செய்யாத நிலம் உள்ளிடுபரல், கழகத் தமிழ் அகராதி, மு.கா.நூ.ப.517.

7. சமர்ப்பிக்கப்பட்டது - கொடுக்கப்பட்டது.
   நீலாம்பிகை. தி., மு.கா.நூ.ப.176

8. நிலம் விற்பனை சம்பந்தமாகச் சட்டப் பிரிவு 34-இல் உரிய முறை யில் விண்ணப்பிக்கப்பட்டுள்ளது. செயல் அலுவலர் அறிக்கை நாள் 22-10-85, மற்றும் 27.11. 1985. இந்த சமய அறநிலைய ஆட்சித் துறை, சென்னை-34, துணை ஆணையர் அலுவலகம்,

   நகல் எண். 682/85 அ3 நாள் 26.12.1985.

9. விண்ணப்பம் இந்து சமய அறநிலைய ஆட்சித் துறை ஆணை யருக்கு ந.க.21768/65 அ.3 நாள்: 25.3.86இல் பரிந்துரை செய்யப்பட்டுள்ளது.

10. 1397- பசலிக்குக் குத்தகை விட ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

11. சென்னை உயர்நீதி மன்றத்தில் சி.எம்.பி. 12176/82-இல் தடை உத்திரவு பெற்று, வழக்கு எண்.எஸ்.ஏ. 1241/82 இன்படி வழக்கு நடைபெற்று வருகிறது.

12. 5.4.1979இல் தீர்ப்பு (Decree) செய்யப்பட்டுள்ளது. தற்சமயம் 9.2.1987-இல் நிலவிறைப் பணம் (வாய்தா) போடப்பட்டுள் ளது. கழகத் தமிழ் அகராதி மு.கா.நூ., ப. 833

13. 14.9.81-இல் மனையிலிருந்து காலி செய்ய வழக்கறிஞர் மூலம் அறிவிப்பு அனுப்பப்பட்டுள்ளது.

14. 17.9.1985-இல் குத்தகைதாரர் மனையை விலைக்கு வாங்க விருப்பம் தெரிவித்துள்ளார். 1959ஆம் ஆண்டு இந்து மத அற நிலைய ஆட்சித் துறையில் சட்டப்படி, விற்பனைக்குரிய மனை, சென்னை பூந்தமல்லி நெடுஞ்சாலையில் சர்வே எண். 229/12இல் 31 கிரவுண்டு 600 சதுர அடி உள்ளது.

15. ஒரு கிரவுண்டு என்பது 2400 சதுர அடியாகும்.

16. கோவிலின் மூலம் 14-9-1981இல், காலி செய்ய அறிவிப்பு கொடுக்கப்பட்டுள்ளது. மேலும் 17-9-1986 அன்றும் அறிவிப்பு கொடுக்கப்பட்டுள்ளது.

O.S. No. 7323/89 Madras city Court dated 9-8-1989.

17. விற்பனை மனைகள் சட்டப்பிரிவு 34ன் கீழ் சர்வே எண். 229/2 கதவு எண். 772, பூந்தமல்லி நெடுஞ்சாலை, சென்னை - 10.

18. இயல் ஒன்றில் குறிப்பிடப்பட்டுள்ளது.

19. பிள்ளை. கே.கே. தமிழக வரலாறு-மக்களும் பண்பாடும்,மு.கா. நூ., ப.303.

பிள்ளை. கே.கே., தமிழக வரலாறு- மக்களும் பண்பாடும், மு.கா. நூ., ப.303

20. Srinivasan. C.R., Op. Cit. p.252.

21. பாலூர் கண்ணப்ப முதலியார்., மு.கா.நூ., ப.17.

22. பரமசிவானந்தம், அ.மு.தமிழக வரலாறு, மு.கா.நூ., ப.310

23. திருவிளையாடற் புராணம், நீதிநெறிவிளக்கம், பிரபுலிங்க லீலை, சீறாப்புராணம், தேம்பாவணி, வில்லிபாரதம், திருப்புகழ், தாயுமான வர் பாடல்கள், அரிச்சந்திர புராணம், நைடதம்,சிதம்பர புராணம், மதுரைச் சொக்கநாதர் உலா, ஏகாம்பர நாதர் உலா, ஞானப்பிரகாசர் இயற்றிய கச்சிக் கலம்பகம் (இந்நூல் கிடைக்கவில்லை) முதலியன.

பிள்ளை. கே.கே. மு.கா.நூ., ப.425

24. நாராயணசாமி, ஆர். அதிகாரியும் அமைச்சரும், மஞ்சரி இதழ் 5 (சென்னை: 1975) ப. 96.

25. நான்காம் இயலில் கூறப்பட்டுள்ளது.

26. S.I.I. VI. No. 295.

பிள்ளை. கே.கே. ,மு.கா.நூ., ப. 304

27. இராசமாணிக்கனார். மா. தமிழக ஆட்சி, இரண்டாம் பதிப்பு, (சென்னை: மெட்ரோபாலிடன் பிரிண்டர்ஸ், 1972) ப. 151.

28. தானத்தார் - கோவில் அதிகாரிகள்

தானத்தான் - சிவாலயத்தில் பூசை செய்யும் குருக்கள்.

கழகத் தமிழ் அகராதி , மு.கா.நூ., ப.535

29. Srinivasan C.R. op.cit., p.254.

30. பார்க்க. ஐந்தாம் இயல்.

31. கி.பி. 1959 ஆம் ஆண்டு, சென்னை இந்து சமய அறநிலைய ஆட்சித்துறையின் துணை ஆணையர் அவர்கள் கோவில் நிர்வாகத்தில் சில மாற்றங்களை ஏற்படுத்தினார். அதன்படி சைவ அந்தணர்கள், பிராமணர் அல்லாதவர்கள் ஆகியோர் அறங்காவலர்களாக இருக்க வேண்டுமாயின் அவர்கள் காஞ்சிபுரத்திலேயே இருக்க வேண்டும்.

Tamil Nadu Act 22 of 1959 o.s. No. 30/67 By sub court.

32. பின்னிணைப்பு- 2.

33.

| ஆண்டுகள் | தக்கார் |
|---|---|
| கி.பி. 1983 - 1987 | எம். கிருஷ்ணமாச்சாரி |
| கி.பி. 1987 - 1988 | எ. சண்முக சுந்தரம். |
| கி.பி. 1988 - 1989 | வே.கு. நடராசன். |

34. பின்னிணைப்பு - 3.

# நாள் வழிபாடும் திருவிழாக்களும்

ஆதியில் விலங்குகளைப் போல் வாழ்ந்த மக்களுக்கு மனிதப் பண்புடன் வாழ்வதற்கு வழிகாட்டியவற்றுள் தெய்வ நம்பிக்கையும் ஒன்றாகும். தெய்வ நம்பிக்கைக்கு அடிப்படையான காரணங்களுள் பயமும் ஒன்றாம். அது மூட நம்பிக்கையாகவும் இருக்கலாம் என்பர். மக்கள் பின்னர் அறிவு வயப்பட்ட தெய்வ வழிபாட்டினால் ஏற்படும் நன்மை தீமைகளைப் பற்றிச் சிந்திக்க முற்பட்டார்கள்.

பண்டைக்கால மக்கள் நீதிநெறியோடு வாழ்வதற்கு வழிகாட்டியது தெய்வ நம்பிக்கையேயாகும். சங்க காலத் தமிழர்கள் சிவபெருமான், முருகன், திருமால், வருணன், கொற்றவை முதலிய தெய்வங்களை வணங்கினார்கள். அக்காலத்தில் நிலம் ஐந்து வகையாகப் பகுக்கப்பட்டிருந்தது. இந்த ஐவகை நிலத்து மக்களும் தனித்தனி தெய்வங்களை வணங்கினர்.

முல்லை நிலத்தினர் திருமாலையும் குறிஞ்சி நிலத்தினர் முருகனையும், மருத நிலத்தினர் இந்திரனையும் நெய்தல் நிலத்தினர் வருணனையும் வணங்கினர்.[1] இதனால் பண்டைத் தமிழ் மக்களிடம் திருமால், முருகன், இந்திரன், வருணன் ஆகியோர் வணக்கங்கள் இருந்தன என்பது அறியப்படுகிறது.

சங்க காலந்தொட்டு மக்கள் இறை வழிபாடுகளை ஆற்றியுள்ளனர் என்பது பாடல்கள் வழி அறிய முடிகிறது. அக்காலத்தில் மக்கள் சிறு தெய்வங்களையும் பெருந் தெய்வங்களையும் வழிபட்டுள்ளனர். பல்வேறு பொருள்களை இறைவனுக்குத் தம் அன்பின் காணிக்கையாகவும் தாம் விரும்பியதைப் பெறுவதற்காகவும் அளித்துள்ளனர்.

பண்டைக் காலத்தில் தெய்வ வழிபாடு பெரும்பாலும் இயற்கை வழியிலேயே நடைபெற்றுள்ளது. நிலம், நீர், காற்று, ஆகாயம்,

விண்மீன், தாவரங்கள், ஞாயிறு, சந்திரன், மலை போன்ற இயற்கைப் பொருள்களை வழிபடுவதே இயற்கை வழிபாடாகும். மூன்றாம் பிறையை வணங்கும் பழக்கமும் இத்தகையதே.[2]

மரத்தின் மீது தெய்வங்கள் தங்கியிருந்தன என்று அக்கால மக்கள் நம்பினர்.[3] ஆலமரத்தின் கீழ்ச் சிவபெருமான் இருப்பதாகப் புராணக் கூற்றுகள் உண்டு. ஆலிலை மேல் திருமால் பள்ளி கொண்டுள்ளார்; நாவல் மரத்துடன் கொன்றை, வில்வம், கடம்பு, வேம்பு முதலிய மரங்கள் தெய்வீகம் பெற்றிருந்தன என்பன போன்ற கருத்துகளைப் பிற்காலத்து நாயன்மார் பாடல்களிலும் காண முடிகிறது. எடுத்துக்காட்டாக, திருஞான சம்பந்தர் இறைவனை,

> வெண்நா வலமர்ந் துறைவே தியனை[4]

என்று பாடியுள்ளமை அறியத்தக்கது.

சங்க காலத்தில் கடவுளர்க்கு மக்கள் தம் அன்பைப் பல்வேறு விதங்களில் வெளிப்படுத்தினர். தமிழர்கள் தங்கள் பழக்க வழக்கத்திற்கு ஏற்ற உணவைத் தெய்வத்திற்கும் படைத்து வழிபட்டனர். எடுத்துக்காட்டாகக் கண்ணப்ப நாயனார், தான் நல்ல ஊண்களைச் சுவைத்துப் பார்த்து, அதையே இறைவனுக்குப் படைத்தார். இறைவனும் அதை ஏற்றுக் கொண்டார் என அறிகிறோம்.

தமிழகத்தில் சங்க காலம் முதல் கி.பி.7ஆம் நூற்றாண்டு வரை கோயில் வழிபாடு மேம்பட்டிருந்தது; சைவர்களும் வைணவர்களும் பக்தி நெறியைப் பரப்பினர். இக்காலத்தில் கோயில்களும் அதிகமாகக் கட்டப்பட்டன. சான்றாக இராசசிம்மனால் காஞ்சி புரத்தில் கயிலாசநாதர் கோயில் கட்டப்பட்டது.[5] இது போன்றே பல கோயில்கள் இக்காலத்தில் கட்டப்பட்டன.

சைவ சமய குரவர்களான திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்க வாசகர் ஆகியோர் பல சிவத்தலங்களுக்குச் சென்று வழிபட்டனர். இவர்கள் சாதிபேதமற்று மக்கள் வழிபாடு ஆற்ற வேண்டுமென விரும்பினர். இதனைத் திருநாவுக்கரசரது,

> ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும் கங்கைவார்
> சடைக் கரந்தார்க்கு அன்பராகில்
> அவர் கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே[6]

என்ற பாட்டில் காணமுடிகிறது.

இறைவனை, மக்கள் எளிதில் அடைய முடியாது என்று எண்ணினர். எனவே அவனை அடைவதற்குக் கோயில்களில் வழிபாடுகளை இயற்றினர்.

வழிபாடு மக்களின் வாழ்வுக்கு அவசியம். இதையே அப்பர் பெருமான் பின்வரும் பாடலால் விளக்குகிறார்.

வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியுந் தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்த வாவினை யேன்நெடுங் காலமே[7]

இதனால் வழிபாட்டை மனம், மொழி, மெய் என்ற முக்கரணங்களால் செய்யலாம் என்பதனை நூல்கள் நுவலும் பொருளால் அறிய இயலு கிறது. அஃதாவது நாள்தோறும் மனத்தால் இறைவனை நினைத்துக் கொண்டிருக்க வேண்டும்; உடலால் தொண்டாற்ற வேண்டும்; மொழி யால் இறை புகழ் பாடவேண்டும்.

வழிபாடு என்னும் சொல் வழிபடு என்ற அடிச் சொல்லிலிருந்து பிறந்து "வழியிற் செல்லுகை, பின்பற்றுகை, வணக்கம், பூசனை என்ற பொருள்களைத் தருகிறது.[8]

வழிபாடு என்பது நம் மனத்தை இறையுணர்வில் வழிப்படுத் துதல் ஆகும். உலகியலில் உழன்று கொண்டிருக்கும் மனத்தை, இறைவனிடம் செலுத்தி, வழிபடுவதன் மூலம் இப்பிறப்பில் சுகமும், மறு பிறப்பில் முக்தி நலமும் வாய்க்கப் பெறுவோம். எனவே வழி பாடு என்பது இன்றியமையாததாகக் கருதப்படுகின்றது.

வழிபாட்டில் தனி வழிபாடு, கூட்டு வழிபாடு என இருவகை யுண்டு. தனி மனிதன் தன் அளவில் செய்யும் வழிபாடு, தனி வழி பாடாகும். இறைவனிடத்து பக்தியுடைய அன்பர்கள் பலர் ஒன்று கூடி நடத்துவது கூட்டு வழிபாடாகும்.

மக்களிடையே சமய ஒருமைப்பாட்டை நிலைநிறுத்த இந்தக் கூட்டு வழிபாடு மிகச் சிறந்ததாகும். தமிழகத்திலுள்ள வார வழி பாட்டுச் சபைகள், பாராயணக் கழகங்கள், திருமுறை மன்றங்கள், சமய மன்றங்கள் முதலியவை இவ்வழிபாட்டை மேற்கொண்டு நாள், வார, மாத வழிபாடுகளாக நடத்தி வருகின்றன. இவ்வகையில் காஞ்சிமா நகரில் கடந்த இருபத்தாறு ஆண்டுகளாகக் "காஞ்சிச் சிவனடி யார் திருக்கூட்டம்" திருவேகம்பத்தில் வார வழிபாடாகத் திங்கட் கிழமை தோறும் கூட்டு வழிபாட்டை மேற்கொண்டு வரு கின்றது.

வழிபடுவதற்காகத் திருக்கோயிலுக்குச் செல்லும் போது எண் ணெய், திரி கொண்டு சென்று இறைவனின் முன்பு விளக்கேற்றுவது புண்ணியச் செயலாகும். எனவேதான் திருநாவுக்கரசு சுவாமிகள்,

விளக்கிட்டார் பேறு சொல்லின் மெய்ந்நெறி ஞானமாகும்[9]

என்று பாடியுள்ளார்.

திங்கட்கிழமை, முழுநிலா (பௌர்ணமி), அமாவாசை, திருவாதிரை, மாதப்பிறப்பு, சிவராத்திரி முதலிய புண்ணியக் காலங் களில் சில வழிபாட்டினை மேற்கொள்வது சிறந்ததாகும் என்பர். பிரதோட காலத்தில் வழிபாடாற்றுவோர் நல்ல மனைவி, அறிவறிந்த மக்கட் பேறு, அழியாச் செல்வம், நீண்ட ஆயுள், நோயற்ற வாழ்வு, வீடு பேறு முதலியன பெற்று வாழ்வார்கள்.

இத்துடன் சிவ வழிபாட்டை மேற்கொண்டால் வறுமை, நோய், பயம், வேதனை ஆகிய துன்பங்களைப் போக்கி முக்திப் பேற்றை அடையலாம்[10] என நம்பப்படுகிறது.

ஒவ்வொரு நாளிலும் மாலை நாலரை மணி முதல் ஏழரை மணி வரை உள்ள காலமே பிரதோட காலமாகும். இப் பிரதோட காலத்தில் சிவபெருமான் ஆனந்தத் தாண்டவமாடி எல்லா உயிர்களுக்கும் அருள் புரிகின்றான் என்பது நம்பிக்கை. எனவே இக் காலத்தைச் சைவர்கள் புண்ணியக் காலமாகக் கருதிப் பண்டைக் காலம் முதல் கோயில் களுக்குச் சென்று பக்தியோடு வழிபட்டு வந்துள்ளனர்.

சிவன் கோயிலை மூன்று, ஐந்து, ஏழு, ஒன்பது, பதினைந்து, இருபத்தொன்று என்ற எண்ணிக்கையில் வலம் வரவேண்டும். காஞ்சி ஏகாம்பரநாதர் கோவில், ஐந்து முறை வலம் வருவதற்குரிய அமைப் பில் அமைந்துள்ளது.

இறைவனைக் காலையில் வணங்கினால் அவரவர்க்குள்ள துன்பங்கள் நீங்கும். உச்சி வேளையில் வணங்கினால் கொடுமை யான துன்பங்கள் அகலும். மாலை வேளையில் இறைவனை வணங் கினால் ஏழு பிறப்புகளில் செய்த தீமைகள் எல்லாம் நீங்கி விடும். இதனை,

காலைதொழ அற்றைவினைக் கட்டகலும் கட்டுச்சி
வேலைதொழ இப்பிறப்பில் வெந்துயர்போம் – மாலையினில்
வந்து சிவன் தாளை வந்தித்தால் ஏழ்பிறப்பில்
வெந்துயர மெல்லாம் விடும்.[11]

என்ற செய்யுளால் நன்குணரலாம்.

வழிபாடுகள் கோயில்களில் காலந்தவறாமல் நடைபெற வேண் டும். இவை தவறுமாயின் நாட்டிற்கும், உலகிலுள்ள மக்களுக்கும் தீமை ஏற்படும்; மழை பருவத்திற் பெய்யாது.

இச்செய்தியினைத் திருமூலர்,

> ஆற்றரு நோய்மிக் கவனி மழையின்றிப்
> போற்றரு மன்னரும் போர்வலி குன்றுவர்
> கூற்று தைத்தான் திருக்கோயில் களெல்லாஞ்
> சாற்றிய பூசைகள் தப்பிடில் தானே[12]
>
> முன்னவ னார்கோயில் பூசைகள் முட்டிடின்
> மன்னர்க்குத் தீங்குள வாரி வளங்குன்றும்
> கன்னம் களவு மிகுத்திடும் காசினி[13]

என்ற பாடல்கள் வாயிலாக உணர்த்தியுள்ளார்.

கற்புடை மங்கையர் பிள்ளைப் பேறு வாய்ப்பதற்கும், தம் கணவரது செயல் நிறைவேறுவதற்கும், கணவர் போரில் வெற்றி பெறுவதற்கும் முருகனை வேண்டி வழிபடுவர்.[14] இவ்வாறு இன்றும் காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோயிலின் மாவடியில் புத்திரப் பேறு இல்லாதவர்கள் அப்பேறு வேண்டி, தொட்டிலைக் கட்டி வேண்டிக் கொள்ளும் நிலையைக் காணலாம்.

மக்கள் தெய்வ வழிபாட்டினை மேற்கொள்ளும் போது தெய்வ பேதம், மூர்த்தி பேதம் குறித்து மாறுபாடு கொள்ளாமல் நிலையான அன்புடன் இறைவனை உள்ளத்தின் விருப்பத்தினால் வழிபட வேண்டும். இச்செய்தியை,

> யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வமாகி யாங்கே
> மாதொரு பாகனார்தாம் வருவார்[15]

என்று சிவஞான சித்தியார் பேசுகிறது. திருமூலர் இறை வழிபாட்டின் சிறப்பைக் கூறும் போது,

> புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு
> அண்ணல் அதுகண் டருள் புரியா நிற்கும்[16]

என்று பாடியுள்ளார்.

இறைவழிபாடு செய்வது நிலையான புண்ணியம் ஆகும். இதைச் செய்யும் எண்ணம் தோன்றுவது பெரும்பேறு என லாம். அதனால்தான் திருமூலர், "புண்ணியம் செய்வார்க்கு" என்று இயம்பியுள்ளார். இறைவழிபாட்டிற்கு வேண்டுவன பூவும் தண்ணீருமாம். அவை புண்ணியஞ் செய்வார்க்கு எளிதில் கிடைக்கும். எனவே இறைவன் புண்ணியம் செய்பவர்களுக்கு அருள் புரிந்து கொண்டிருப்பான் என்பது தெற்றெனப் புலப்படுகிறது.

## திருவேகம்பர் கோயிலின் வழிபாட்டுக் காலங்களும் முறைமைகளும்

மக்கள் நலன் குறித்து கோவில்களில் வெவ்வேறு காலங்களில் பூசைகள் நிகழ்த்தப்பெறுகின்றன. ஏகாம்பரநாதர் கோவிலிலும் பல் வேறு பூசைகள் பக்தர்களுக்காக நிகழ்த்தப்படுகின்றன.

### நித்திய பூசை

திருவேகம்பர் கோவிலில் வழிபாடு குறிப்பிட்ட காலங்களில் ஒழுங்கு தவறாது ஆற்றப்படுகின்றன. இக் கோயிலில் நாள்தோறும் ஆறுகால வழிபாடுகள் நடக்கின்றன. அவை நித்திய பூசை எனப் படும். இவை பின்வரும் கால முறைப்படி நடந்துகொண்டு வரு கின்றன.

| | |
|---|---|
| 1. விடியற்காலம் | (உஷைக்காலம்) காலை 6-7 மணி |
| 2. காலைச் சந்தி | காலை 8-8.30 மணி |
| 3. உச்சிக்காலம் | (நண்பகல்) 11-12 மணி |
| 4. மாலைக் காலம் | (பிரதோட காலம்) மாலை 5-5.30 மணி |
| 5. சாயுங் காலம் | (சாயரட்சை) மாலை 6-7 மணி |
| 6. நள்ளிரவு | (அர்த்தசாமம்) இரவு 8-8.45 மணி |

இவ்வித வழிபாடுகள் ஆற்றும்போது திருக்கோயிலில் நிலாத் துண டப் பெருமாளுக்கு எதிரில் உள்ள கிணற்று நீரே திருமுழுக்கு (அபி டேக) நீரராகப் பயன்படுகிறது.

மேற்கூறிய வழிபாடுகள் நித்திய பூசைகள் என அழைக்கப் படும். இவற்றுள் முதன்மையாக விடியற்கால பூசை (உஷைக்கால பூசை) அமையும்.

திருக்கோயிலில் நாள்தோறும் பூசைகள் தொடங்குவதற்கு முன்னரே சுப்ரபாதம்[17] பாடப்படுகிறது. எல்லா வடிவிலும் விளங்கும் இறைவன் எழுந்தருள வேண்டும் என்பதற்காகவே சுப்ரபாதம் பாடு கிறார்கள்.

### விடியற்கால பூசை

இப்பூசை காலை ஆறு மணியிலிருந்து ஏழு மணிக்குள் நடக் கும். அக்காலத்தில் ஏகாம்பரநாதர் பள்ளியறையிலிருந்து புறப்பட்டு மூலத்தானத்திற்கு வருவார்; கோயில் குருக்கள் ஒளி வழிபாடு

செய்வார். அவ்வமயம் திருப்பள்ளி எழுச்சியைத் திருக்கோயிலின் ஓதுவார் பாடுவார்.

### காலைச் சந்தி பூசை

இக்காலத்தில் பெருமானுக்கு அக்கினி காரியம் செய்து பல்லக்கில் எழுந்தருளச் செய்வர். பெருமாள் பலிபீடம் வரையில் சென்று, அக்கினி காரிய மேடையில் வீற்றிருப்பார். பின்னர் சுவாமிக்கு அபிடேகத்தையும் வழிபாட்டையும் செய்வர்.

### உச்சிக்கால பூசை

இப்பூசையில் நாள்தோறும் பெருமானுக்கு அபிடேகம் செய்து வெறும் சோற்றினைப் படைப்பர்.

### மாலைக் கால பூசை

இப்பூசையில் பெருமானுக்கு அபிடேகமும் வழிபாடும் நடந்த பிறகு பஞ்சபுராணம்[18] பாடல்களை ஓதுவார் பாடுவார்.

### சாயுங்கால பூசை

இக்காலத்தில் பெருமானுக்கு அபிடேகம் செய்து, உணவுப் பொருள்கள் படைக்கப்படுகின்றன.

### நள்ளிரவு பூசை

இப்பூசை இரவு எட்டு மணி முதல் எட்டே முக்கால் வரை நடக்கும். பெருமானுக்கு அபிடேகமும் வழிபாடும் நடந்த பிறகு, பள்ளி அறைக்குப் பெருமானைப் பல்லக்கில் எடுத்துச் செல்வர். இச் சமயத்தில் திருவாசகத்தில் உள்ள பொன்னூ சல் பாடல்களைப் பாடுவர்.

மேற்கூறிய பூசைகளோடு ஏகாம்பரநாதருக்குப் பதினைந்து நாட்களுக்கு ஒருமுறை மகா பிரதோட கால பூசை செய்யப்படுகிறது. அன்று பெருமான் இடப வாகனத்தில், அலங்காரத்துடன், உள்திருச் சுற்றிலும், வெளித் திருச்சுற்றிலும் பவனி வருகிறார். பூசை நடக்கும் காலங்களில் திருக்கோயிலில் பெரிய மணி அடிக்கப்படுகிறது.

ஏகாம்பரநாதர் கோவிலில் நாள்தோறும் நடக்கும் பூசைகளோடு நைமித்திய, காமிக பூசைகளும் நடைபெறுகின்றன. இப்பூசைகளைச் சிறப்புடன் செய்வதற்குரியவர்களை வெவ்வேறு பெயர்களால் அழைப்பர்.

நித்திய பூசைகளைச் செய்பவரை அர்ச்சகர் என்றும், பூசைக்கு உரியதான மந்திரங்கள், வேதங்கள் ஆகியவற்றைச் சொல்லுபவரை

வாசகர் என்றும், ஒவ்வொரு பூசைக் காலங்களிலும் இறைவனுக்குப் புட்பங்களாலும், அணிகலன்களாலும் அலங்காரம் செய்பவரை அலங்கிருதர் என்றும் பூசைக்குரிய கருவிகளைக் கொடுத்து உதவி செய்பவரைச் சாதகர் என்றும் கூறுவர்.

மேற்கூறிய வழிபாடுகள் தவிர ஏகாம்பரநாதர் கோவிலில் அவ்வப்போது சிறப்புத் திருமுழுக்கு வழிபாடுகளும் நடைபெறு கின்றன. இதனைத் திருமுழுக்கு என்பர். சிவபெருமானுக்குத் திங்கட் கிழமைகளில் திருமுழுக்குச் செய்வது மிகவும் சிறந்ததாகும். திரு முழுக்குப் பொருள்களின் வகைகளையும் அவற்றைச் செய்தலில் ஏற்படும் நன்மைகளையும், பயன்களையும் பின்னிணைப்பு நான்கில் காணலாம்.[19]

சிவன் கோவில்களில் பூசை செய்பவர் குருக்கள் எனப்படுவார். விட்டுணு கோவில்களில் பூசை செய்பவர் பட்டர் என்று அழைக்கப் படுவர்.[20] பூசைக்குரிய கட்டணங்களைப் பின்னிணைப்பு ஐந்தில் காணலாம்.

அறிவு நூல்களை (ஆகமங்களை) உணர்ந்து, அதன்படி நாளும் தவறாது, நைமித்திய கிரியைகளைச் செய்பவன் ஆசாரியன் ஆவான். கோவிலில் உள்ள ஆசாரியர், அர்ச்சகர், அலங்கிருதர், வாசகர், சாதகர் ஆகிய ஐவர்களைப் பஞ்சாச்சாரியார் என அழைப்பர்.

## நைமித்திய பூசை

நைமித்தியம் என்பது ஒரு காரியத்தின் நிமித்தமாகச் செய்யும் பூசைகள் ஆகும். சான்றாகக் கிரகண காலம்,[21] தீட்டு முதலிய காலங் களில் அவற்றின் பொருட்டுச் செய்யும் பூசைகளைக் கூறலாம்.

## காமிய பூசை

காமியம் என்பது விருப்பம். ஒரு விருப்பத்தின் பொருட்டுப் பலனை எதிர்பார்த்தோ பாவங்களைப் போக்குவதற்கோ, வழிபாட்டில் ஏற்படும் தவறுகளை ஈடு செய்வதற்கோ பூசை செய்வது காமிய பூசையாகும்.[22]

ஏகாம்பரநாதர் கோமிலில் நித்திய, நைமித்திய, காமிய பூசை களைத் தவறாமல் பண்டைக்கால முதல் செய்த பதினெட்டுப் பரம் பரையினர்களின் பெயர்களைப் பின்னிணைப்பு ஆறில் காணலாம்.[23]

மேற்கூறிய பூசைகளைத் தொடர்ந்து செய்பவர்களுக்குக் கோமில் மானியமோ ஊதியமோ இல்லை கோமில்களுக்கு வந்து

வழிபட வருகின்றவர்கள் கொடுக்கின்ற காசுகளே அவர்களுக்கு ஊதியமாகும். இத்துடன் பூசையில் இறைவனுக்குப் படையலிட அளிக்கப்படும் அரிசி முதலிய பொருட்கள் அவர்கள் வாழ்க்கைக்கு ஆதாரமாக உள்ளன. அப்பொருட்களைக் குருக்கள், 'படித்தரம்' என்பர்.

இத்தகைய பூசைகளில் நைவேத்தியம், தாம்பூலம் ஆகியவை இறைவனுக்குப் படைத்த பின்னர் இறைவன் ஆனந்தமாக இருப்ப தாகக் கருதி, பக்தர்கள் தங்கள் குறைகளை அந்தணர் மூலம் விண்ணப்பம் செய்வர். இவற்றிற்கு உரிய பலன் கிடைக்கும் என்ற நம்பிக்கையே கோயில்களின் வாழ்வுக்கும் வளர்ச்சிக்கும் ஆதார சக்திகளாக அமைகின்றன.

இக்கோயிலில் பண்டைக்கால முதல் வழிபாடு நிகழ்த்தியவர் களுள் உமையம்மை, உருத்திரர், திருமால், பிரமன் ஆகிய தெய்வங் களும் வாலி போன்ற மன்னர்களும் சமயகுரவர்களான நால்வரும் கச்சியப்ப சிவாசாரியார், பட்டினத்தடிகள், இரட்டைப் புலவர்கள் ஆகிய அடியார்களும் குறிப்பிடத்தக்கவர்களாவர். தெய்வங்கள் வழி பட்டதனை மக்களிடையே பரம்பரையாக வழங்கி வரும் கதைகளில் இருந்தும் புராணங்களிலிருந்தும் அறியலாம்.

## உமையம்மை வழிபாடு

திருக்கயிலையில் உமையம்மையார் இறைவனோடு வீற்றிருந்த போது, விளையாட்டாக இறைவரின் கண்களை மூடினார். இதனால் உலகம் இருண்டது. எனவே உலகத்திலுள்ள உயிர்கள் துன்பப் பட்டன. அப்பழிச் சொல் தீர்வதற்கு இறைவர் கச்சியம்பதிக்குச் சென்று தம்மை வழிபடுமாறு கட்டளையிட்டார். இதனையே சேக்கிழார் திருக் குறிப்புத் தொண்டர் புராணத்தில்

மாவ மர்ந்தநம் மிருக்கையி லணைந்து
மன்னுபூசனை மகிழ்ந்துசெய் வாய் [24]

என்று பாடியுள்ளார். அதனால் காமாட்சியம்மை காஞ்சியம்பதிக்கு எழுந்தருளினாள். [25]

இறைவனிடம் இரண்டு நாழி நெல் பெற்று, காமாட்சி என்னும் பெயருடன் காம கோட்டத்தில் எழுந்தருளியிருந்து முப்பத்திரண்டு அறங்களையும் செய்தாள்.[26] அவ்வாறு காமாட்சியம்மை செய்த முப்பத்திரண்டு அறங்களையும் பின்னிணைப்பு ஒன்றில் காணலாம்.

உமையம்மை காஞ்சியில் கம்பை யாற்றங்கரையில் மணலாற் சிவலிங்கம் உருவாக்கிப் பூசை செய்தாள். இக்கருத்தினைச் சேக்கிழார்,

> எம்பி ராட்டியிவ் வேழுல கீன்றவ
> டம்பி ரானைத் தனித்தவத் தாலெய்திக்
> கம்பை யாற்றில் வழிபடு காஞ்சி[27]

என்று பாடியுள்ளார். இப்பூசையின் சிறப்பை வெளிப்படுத்த இறைவன் கம்பை ஆற்றில் வெள்ளம் வரச் செய்தான். அதைக் கண்ட அம்மையார், பெருமான் திருமேனிக்கு இடையூறு வரக்கூடாதே என்று எண்ணித் தமது இரு கரங்களாலும், பெருமான் திருமேனியைத் தழுவிப் பற்றிக் கொண்டார். அம்மையின் வளைத் தழும்பும், முலைத் தழும்பும், தன் திருமேனி மீது படியக் குழைந்து கொடுத்து, அம்மைக்கு அருள் புரிந்தார் இறைவர்.[28]

காஞ்சி இறைவனை, உமை வழிபட்டதோடு மற்ற கடவுள்களும் அடியார்களும் மக்களும் வழிபட்டுள்ளனர்.

## உருத்திரர், திருமால், பிரமன் ஆகியோரின் வழிபாடுகள்

ஏகாம்பரநாதரை உருத்திரர் சிறந்த முறையில் நேரிய எண்ணத்துடன் வழிபட்டமையால், ஏகாம்பரநாதர் நல்லகம்பர் எனப் பெயர் பெற்றார். இவரைப் பேரன்பு கொண்டு வழிபாடு செய்தவர்கள் எக்காலத்தும் மேனிலை அடைவர். அவர் தம் திருவடி, கைலாயத் திற்கு வழிகாட்டுந் தகையது. நல்ல கம்பரின் சிறப்பைச் சிவஞான முனிவர்,

> உருத்திரன் நலத்தகும் ஒருமை பூண்டுயர்
> கருத்தோடும் வழிபடு நல்ல கம்பனை
> அருத்தியின் வழிபடும் அடியர் எம்பிரான்
> மருத்தபூந் திருவடிக் கலப்பின் மன்னுவார்[29]

என்று காஞ்சிப் புராணத்தில் பாடியுள்ளார்.

திருமால் காஞ்சியிலுள்ள ஏகாம்பரநாதரை மயக்குறுத்தும் கருத்தொடு வழிபட்டமையால் இவர் 'கள்ளக் கம்பர்' எனப் பெயர் பெற்றார். இவரை வணங்கும் சிறப்புப் பெற்றவர், அச்சத்துக்குக் காரணமாகிய தீய செயல்களின் மயக்கத்துள் விழ மாட்டார்கள்.[30]

திருமால் ஏகாம்பரநாதரை வழிபட்ட நிலையை,

> மருள்புரிய கருத்தினான் மாயன் ஏத்தலின்
> கருதும்அப் பெயரிய கள்ளக் கம்பனைத்

திருவடி வழிபடப் பெற்ற சீரியோர்
உருகெழு கொடுவினை மைய லுட்படார்

என்று சிவஞான முனிவர் கூறியுள்ளார்.

பிரமன் திருவேகம்ப நாதரைக் கள்ள மில்லாத தூய்மையான உள்ளத்தொடு வணங்கிய காரணத்தால், ஏகாம்பரநாதர் வெள்ளக் கம்பர் எனப் பெயர் பெற்றார். இவரை வழிபடுவோர் உடற்சுமை நீங்கித் தூயராவர். மக்களைப் பிறவித் துன்பத்தினின்றும் காப்பவர் இவரே ஆவர். இதனை,

வாலிய சிந்தையான் மலர்ப்பொ குட்டனை
மேலவன் வழிபடும் வெள்ளக் கம்பனை
ஆலிய அன்பினால் அருச்சித் தேத்துவார்
தோலுடற் பொறைகழிஇத் தூய ராகுவார்[31]

என்னும் காஞ்சிப்புராணப் பாடலால் அறியலாம்.

## வாலியின் வழிபாடு

தேவேந்திரன் மகனாகிய வாலி, தன்னைப் போரில் யாவர் எதிர்ப்பினும், அவரது வலியில் தனக்குப் பாதியும் தோல்வியில்லாத வெற்றியும் வரவேண்டுமென்று திருவேகம்ப நாதரை வழிபட்டனன். அவ்வாறு வழிபட்டதால் வாலி தன்னை எதிர்த்தவர் வலியில் செம் பாதி பெற்றான்.

இவ்வாலீசுவரர் கோயில் ஏகாம்பரநாதர் கோயிலில் கச்சி மயானத்திற்குக் கிழக்கேயுள்ளது என்பதை முன்பே கண்டுள்ளோம்.

சித்தர்கள் வழிபடத் தோன்றிய வாயுலிங்கமே வாலீசமாகும். வாலி காஞ்சியில் தான் பூசித்த வாயு இலிங்கத்தைத் தன் இருப்பிடத் திற்குக் கொண்டு போகவேண்டி வலித்தனன். இலிங்கத்தை வாலில் கட்டி இழுத்ததால், வாலியின் வால் அறுந்துவிட்டது. இதனால் வாலி, வாலில் வடுவைப் பெற்றான். அத்துடன் இறைவனும் “காஞ்சியை விட்டு என்றும் நீங்கோம்” என்று கூறி வாலிக்கு அருள் புரிந்துள்ளார்.[32]

## சமயகுரவர்கள் நால்வரின் வழிபாடு

திருஞானசம்பந்தர் ஏகாம்பரநாதர் பெருமையைச் சிறப்பாகப் பாடியுள்ளார். காஞ்சியிலுள்ள ஏகாம்பரநாதரை வணங்கினால் நம் முடைய துன்பங்கள் நீங்கும். திருஞானசம்பந்தரது உள்ளம் காஞ்சி

யிலுள்ள ஏகாம்பரநாதர் மேல் மிகுந்த ஈடுபாடுடையதாய் இருந்தது என்பதனை,

ஏகம்பந் தொழ இடர் கெடும்[33]

ஏகம்பந் தொழ வல்லினை மாய்ந்திடும்[34]

ஏகம்பத்தானை யல்ல துள்காதென் உள்ளமே[35]

என்றெல்லாம் அவர் தமது தேவாரத்தில் பாடியுள்ளதால் அறியலாம். திருநாவுக்கரசர் ஏகாம்பரநாதரை எப்போதும் மனத்தில் வைத்திருப்ப தாகவும், கருவுற்ற நாள் முதலாக தம் மனம் உருகிற்றென்றும் பாடியுள்ளார்.[36]

சுந்தரமூர்த்தி நாயனார் திருவொற்றியூரில் வாழ்ந்திருக்கும் நாளிலே, ஒருநாள் திருவாரூரில் வீற்றிருக்கின்ற வீதிவிடங்கப் பெரு மானை நினைந்து அப்பகுதிக்குப் போகக் கருதினார். அவ்வாறு அவர் அங்குச் செல்வதற்குத் திருவொற்றியூரை நீங்கிய பொழுது, அவர் தம்மனைவி சங்கிலியாரிடம் திருவொற்றியூரை விட்டு நீங்கேன் என்று கூறிய வாக்குறுதி தவறினமையால் அவருக்கு இரண்டு கண்களும் பார்வை இல்லாமல் போயிற்று. அப்பொழுது நாயனார் திகைத்து "சபதம் தவறினமையால் இது நிகழ்ந்தது" என்று நினைத் தார். இந்தக் கொடுந்துயரத்தை நீக்கும் பொருட்டு காஞ்சீபுரம் சென்று திருவேகம்பப் பெருமானை வணங்கினார்.

"விண்ணாள்வார் அமுதுண்ண விடமுண்ட பெருமானிடம்"[37] தம்பிழை பொறுத்துக் கண்ணொளி தருமாறு வேண்டினார்.

இரு கண்பார்வைகளை இழந்து வருந்தும் வருத்தத்தினைக் காணப் பொறுக்காத ஏகாம்பரநாதர் இடக்கண்பார்வை சுந்தரருக்குக் கிடைக்குமாறு அருள் செய்து தமது கோலமும் காட்டினார். சுந்தரர் பக்திப் பெருக்கால்,

ஆலந்தான் உகந்து அமுது செய்தானை
ஆதியை அமரர் தொழுது ஏத்தும்
சீலம் தான் பெரிதும் உடையானைச்
சிந்திப்பார் அவர் சிந்தை உளானை
ஏலவார் குழலாள் உமை நங்கை
என்றும் ஏத்தி வழிபடப் பெற்ற
கால காலனைக் கம்பன் எம்மானைக்
காணக்கன் அடியேன் பெற்றவாறே[38]

என்ற பாடலைப் பாடியருளினார். மேலும் சுந்தரர் கச்சி ஏகம்பப் பதிகப் பாடல்களின் ஈற்றடிகளில் "கம்ப னெம்மானைக் காணக் கண்ணடியேன் பெற்றவாறே" என்று பாடியிருப்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

மாணிக்கவாசகர் கச்சித் தவத்திற்கெனத் தனியாகப் பாடல்களைப் பாடாவிடினும் தாம் பாடியுள்ள பாடல்களில் ஆங்காங்கே 'கச்சி ஏகம்பமேயபிரான்' பற்றிப் பாடிய பாடலடிகள் இரண்டாம் இயலில் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன.

சேக்கிழார் எழுதிய பெரிய புராணத்தில் முப்பத்து ஒன்று நாயன் மார்கள் இலிங்க வழிபாடு செய்து நற்பேறு பெற்றுள்ளனர்.*

திருவேங்கட செட்டியார் என்ற பெயரினை உடையவரும் திருவெண்காடர் என்று வழங்கப்படுபவரும் பத்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த வருமாகிய பட்டினத்தடிகள் திருவேகம்பப் பெருமானை அன்புடன் பச்சிலையினால் வழிபட்டாலும் வீடுபேற்றினை அருள்வான் என்று பாடுகிறார்.[39]

மேற்கூறிய சமயகுரவர் நால்வரும் பட்டினத்தடிகளும் காஞ்சி மாநகரில் எழுந்தருளியுள்ள ஏகாம்பரநாதர் பற்றிப் பாடியிருக்க கந்த புராண ஆசிரியரும் பன்னிரண்டாம் நூற்றாண்டின் தொடக்கத்தி வாழ்ந்த வருமாகிய கச்சியப்ப சிவாசாரியாரும் ஏகாம்பரநாதர் கோவி லில் மாவடியின் கீழ் எழுந்தருளியிருக்கின்ற முருகப் பெருமானின் அறுதிருமுகங்களுக்கும், அம்முகங்களிலிருந்து பொழிகின்ற கருணைக்கும், தேவர்கள் வணங்குகின்ற பன்னிரண்டு தோள்களுக்கும் மலர் போன்ற திருவடிகளுக்கும் சேவற்கொடிக்கும் மயிலூர்திக் கும் திருக்கையிலுள்ள வேலாயுதத்திற்கும் வணக்கத்தைக் கூறுகின்றார்.[40]

கச்சியேகம்பனைப் பாடிய பிற்காலப்புலவர்களுள் இரட்டைப் புலவர்கள் குறிப்பிடத்தக்கவர்கள். இவர்கள் சோழ நாட்டில் ஆலந் துறையில் பிறந்தவர்கள். இவர்கள் இயற்றிய ஏகாம்பர நாதர் உலா வில், சிவபெருமான் உமாதேவியர்க்கு அருளும் பொருட்டு, காஞ்சி மாநகரில் எழுந்தருளித் திருக்கோயில் கொண்டார் என்று பாடியுள்ளனர்.[41]

இவ்வாறு கடவுளர்களாலும் அடியார்களாலும் வழிபடப்பட்ட காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவிலில் நாள் வழிபாடுகள், சிறப்பு வழிபாடுகள் ஆகியவற்றைக் கோவிலில் தவறாது நிகழ்த்துவதற்கு மன்னர்களும் மக்களும் பேருதவி புரிந்து வந்துள்ளனர். இவை

பணமாகவும் நிலங்களாகவும் பொருள்களாகவும் அளிக்கப்பட்டன. குறிப்பிட்ட காலப்பகுதிக்கு மட்டும் இவை அளிக்கப்பட்டதுடன், நிரந்தரமாகக் கோயிலுக்கு வருவாய் கிடைப்பதற்காக நிலங்கள், கால்நடைகள் முதலியவற்றையும் கோவிலுக்கு மன்னரும் மக்களும் அளித்தனர்.

'இச்செய்திகளை அவ்வக்காலப்பகுதியில் எழுதப்பட்ட கல் வெட்டுகள் எடுத்தியம்புகின்றன. இத்தகைய தானங்களுள் சிறப் பாக நந்தாவிளக்கு எரிப்பதற்காகக் கோயிலுக்கு அளிக்கப்பட்ட தானங்கள் குறிப்பிடத்தக்கன. இத்தானங்களுள் பெரும்பாலானவை, கோவிலுக்கு விளக்கெரிப்பதற்கும் நெய்யளிப்பதற்கும், பசுக்களை யும், எருதுகளையும் நன்கொடையாக அளித்தமையாகும். இச்செய்தி களைக் கல்வெட்டுகள் எடுத்தியம்புகின்றன.

கி.பி.1155இல் இரண்டாம் இராசராசன் ஆட்சியில் கோயிலில் திரு நந்தா விளக்கு ஒன்று எரிவதற்காக விட்டுணுதேவன் முப்பத் திரண்டு பசுக்களையும் ஒரு காளையும் தானமாக வழங்கியுள்ளான்.[42]

கி.பி.1160ஆம் ஆண்டாகிய இரண்டாம் இராசராசனின் பதி னைந்தாம் ஆட்சியாண்டில், இக்கோயிலில் நந்தாவிளக்கொன்று எரிப்பதற்காக விக்கிரம சோழ சதுர்வேதிமங்கலத்து மகாசபையார் பத்துப் பாற்பசுக்களையும் பன்னிரண்டு சினைப்பசுக்களையும் ஆறு வறள்பசுக்களையும் நான்கு இளமையான கடாக்களையும் ஒரு எருதையும் தானமளித்துள்ளனர்.[43]

அதேபோல இம்மன்னன் காலத்திலேயே பத்தொன்பதாம் ஆட்சி யாண்டில் ஏகாம்பரநாதர் கோயிலில் நந்தா விளக்கொன்று எரியவும், நாள் ஒன்றுக்கு ஒரு உழக்கு நெய் அளிக்கவும் கால் நடைகளான முப்பத்திரண்டு பசுக்களையும் எருதையும் புவனாதி கங்கன் என்பவன் தானமளித்துள்ளமை பற்றிய குறிப்புகளைக் காண்கிறோம்.[44]

இதுதவிர கி.பி.1192இல் இரண்டாம் இராசராசனின் இருபத் தேழாம் ஆட்சியாண்டில் காமிநாயக்கர் என்பவர் இக்கோயிலுக்கு நந்தா விளக்கொன்று எரிவதற்காக நாளொன்றுக்கு ஒரு உழக்கு நெய்யை அளிக்கப் பாற்பசுவும், சினைப்பசுவும், நாகும், காளை ஒன்றும் தானமாகக் கொடுத்தார். அத்துடன் தராக் குத்து விளக் கொன்றையும் அளித்ததாகத் தெரிய வருகிறது.[45]

மூன்றாம் குலோத்துங்க மன்னனுடைய 27ஆம் ஆட்சிக் காலத் துக் கல்வெட்டொன்றும் அந்நாட்டில் வாழ்ந்த குவளாலபுர பரமேசு

வரன் கங்கல உத்பவ குலத்தில் தோன்றியவனான சீயகங்கன் அமரா பரணன் என்பவன் திருநந்தா விளக்கு ஒன்று எரிப்பதற்காக முப்பத்தி ரண்டு பசுக்களையும் ஒரு எருதினையும் தானமளித் துள்ளமையைக் கூறுகின்றது.[46]

இதையடுத்து கி.பி.1265ஆம் ஆண்டில் விசயகண்ட கோபால தேவர் என்பர் இக்கோயிலுக்கு திருநந்தா விளக்கு ஒன்று எரிப்பதற் காகவும் ஒரு நாழி தயிரமுதுக்காகவும் (தயிர் சாதம்), பத்துப் பாற் பசுக்களையும், பத்துச் சினைப் பசுக்களையும், பன்னிரண்டு பொலிமுறை நாகுகளையும், ஒரு எருதையும் தானமளித்துள்ளார்.[47]

கி.பி.1269ஆம் ஆண்டு புவனேக வீரன் என்ற மாகாணத் தலைவன், தன்பெயரால் கோயிலில் சந்திபூசை ஒன்றும், ஒவ்வொரு மாதமும் தான் பிறந்த நாளில் விசேட பூசை ஒன்றும், நடத்துவதற்காக சமரகோலாகல நல்லூரும், புவனெகவீர நல்லூரும் தானமிட்டுள் ளான்.[48] இவ்வூர்களைக் கீழ்க்காணும் பொருள்கள் வாங்குவதற்காக மாகாணத் தலைவன் தானமிட்டதாகக் கல்வெட்டில் குறிக்கப் பெற் றிருக்கிறது. அப்பொருள்களாவன: அமுதுபடி, கறியமுது, இலை யமுது, அடைக்காயமுது, திருப்பரி வட்டம், திருமாலை, திரு விளக்கு, கடமைவரி, காணிக்கை, வினியோகம், பஞ்சு, பீலி, செக் கிறை, தறியிறை, தட்டொலி, தட்டார்ப்பாட்டம், பொன்வரி, அச்சுக் காரிய ஆராய்ச்சி முதலியன.

இக்கல்வெட்டுக்களிலிருந்து கோயிலுக்குப் பசு, எருது, சினைப் பசு, எருது முதலியவற்றைக் கொடுத்து, அவற்றிலிருந்து கோயி லுக்கு வேண்டிய பால், தயிர் , நெய் அளித்த முறைமையைக் காண முடிகிறது. மேலும் கால்நடைகளை நந்தா விளக்கெரிப் பதற்காக அளித்ததுடன், ஊர்களையும் தானமாக அளித்துள்ளார்கள் என்பதனை அறிகிறோம். இதனை விசயநகர மன்னரான வீரகம்பண்ண உடையார் என்பவர் கி.பி.1366ஆம் ஆண்டு எயிற்கோட்டத்தைச் சார்ந்த கலை குலையகம் என்ற வரியில்லா ஊர் ஒன்றினைக் கடவுளர் திருவேகம்ப முடையார்க்கும், திருக்காமக் கோட்ட நாச்சியாருக்கும், ஓடும் நீரில் தவம் செய்யும் தேவிக்கும் (ஏலவார்குழலி) நந்தா விளக்கு எரிக்க வும் பூமாலை சேர்க்கவும் தானமளித்துள்ளார் என்பது கல்வெட்டு வாயிலாக அறிய இயலுகிறது.[49]

ஊர்களைத் தானமாகக் கொடுத்ததுடன் காசுகளையும் இவ் வாறு நந்தா விளக்கெரிப்பதற்காக மக்களும் மன்னரும் தானமளித் துள்ளனர். இதற்குச் சான்றினைக் கி.பி.1268 முதல் 1308 வரை

ஆட்சி செய்த குலசேகர தேவர், தனது 15-ஆவது ஆட்சிக் காலத்தில் ஏகாம்பரநாதர் கோயிலுக்கு 200 பணம் அப்பத்திற்கும் (பிரசாதம்) 100 நந்தா விளக்கிற்கும் தானமளித்துள்ளமையில் இருந்து காண முடிகிறது.[50]

இவ்வாறு நந்தா விளக்கிற்குத் தானமளிக்கும்போது, அவை சந்திர சூரியன் நிலவும் வரை நிலைபெற்று நடைபெற வேண்டு மென்றும், இவ்வாறு நடைபெறுவதற்குப் பொறுப்பு ஏற்றுக் கொண்டவர்கள் தம் பொறுப்பிலிருந்து தவறினாலோ அன்றேல் அப்பொறுப்பை ஏற்றுக் கொண்டவர்களுக்கு இடையூறு ஏதேனும் யாராவது விளைவித்தாலோ அவர்களுக்கான தண்டனைகளும் கல்வெட்டுக்களில் கூறப்பட்டுள்ளன.[51]

குறிப்பாக இவர்கள் கங்கையிலும் குமரியிலும் செய்த பாவத்தை ஒத்த பாவத்தைப் பெறுவார்கள் எனக் கல்வெட்டுகள் கூறுகின்றன.

இவை தவிர கி.பி.13ஆம் நூற்றாண்டில் அச்சுதப்ப நாயக்கர் திருமலைகிளியப்பன், மல்லய்யன் ஆகிய மூவரும் கோயிலில் வழி பாட்டிற்கு வேண்டிய வாசனைத் திரவியங்களான கற்பூரம், புனுகுச் சட்டம், பன்னீர், குங்குமப்பூ, சாம்பிராணி, சல்லப்பட்டு ஆகியவற் றைத் தானமளித்துள்ளனர்[52] என்றும் அறிகின்றோம்.

வழிபாடு, அவற்றிற்கான நிதிக்கொடை முதலியவற்றைக் கண்ட நாம் அடுத்து இக்கோயிலில் நிகழும் விழாக்கள் பற்றி நோக்குவோம்.

## விழாக்கள்

விழா என்பதற்கு மங்கலச் சடங்கு என்பது பொருள்.[53] விழா, விழவு என்ற இரண்டும் ஒரே பொருளையுடையன. விழா என்னும் சொல் திரு என்னும் அடைமொழி பெற்று விளங்குகிறது. திரு விழா என்றால் சிறப்பான கொண்டாட்டம் எனக் கொள்ளலாம். இச் சொல்லை உற்சவம் எனும் வடசொல்லாலும் அழைப்பர்.

திருவிழாக்கள் என்பன மதத்தொடர்பாகச் செய்யும் சடங்குகள் மட்டும் அல்ல; கலைகளை வளர்க்கவும், வாணிகத்தை வளர்க்கவும் இன்றியமையாதனவாக அமைவதுடன் சமுதாய ஒருமைப்பாட்டிற் கும் வழிவகுக்கின்றன. அவை மக்களுடைய வாழ்வில் ஒன்றாகக் கலந்துவிட்டன.

மக்கள் விழாக்களைப் பண்டிகைகள், விரதங்கள், பிறந்த நாள் கள், திருவிழாக்கள் என நான்கு வகையாகக் கொண்டாடுகின்றனர்.

சமயம் சார்ந்தவைகளை ஆன்ம ஈடேற்றத்தை வளர்ப்பனவாகத் திருவிழாக்கள் அமைமினும் இவை நடைபெறும் காலத்தில் பிரிந்திருக்கும் குடும்பத்தினர் மறுபடியும் ஒன்றாகச் சேர்வதற்கு இவை சிறந்த வாய்ப்பை அளிக்கின்றன.

பொதுவில், சமுதாயத்தில் தனிப்பட்டவர்களின் மகிழ்ச்சி, குடும்பத்தில் இன்பம், சமுதாயத்தில் குதூகலம் ஆகியவை திருவிழாக்களினால் உண்டாகின்றன.

பெரும்பாலான திருவிழாக்கள் பயிர் அறுவடை முடிந்து மக்கள் ஓய்வாக இருக்கும் பங்குனி, சித்திரை, வைகாசி மாதங்களில் நிகழ்கின்றன. மக்கள் மாலைப் பொழுதை இன்பமாகக் கொள்ளவும் ஓய்வை அனுபவிக்கவும் திருவிழாக்கள் ஏற்பட்டிருக்கின்றன.

திருவிழாக்களில் இறைவன் ஊரில் வலம் வருவதனால் மக்கள் யாவருக்கும் இறைவன் காட்சி கிட்டுகிறது. கோமிலுக்குச் செல்ல முடியாத அன்பர்கள், முதிர்ந்த வயதினர்கள், நடக்க முடியாதவர்கள், உடலுறுப்புகள் குன்றியிருப்பவர்கள், நோய், தீட்டு போன்ற காரணங்களால் கோமிலுக்குள் செல்ல இயலாத மக்கள் ஆகியோருக் கும் இறைவன் அவர்களைத் தேடிச் செல்லும் வாய்ப்பைத் திருவிழாக் கள் அளிக்கின்றன. இறைவனிடத்தில் அன்பாக இருக்கும் பக்தர்கள் இறையுருவங்களை நேரடியாகப் பார்த்து வழிபடவும் விழாக்கள் வழிவகுக்கின்றன.

திருவிழாக்கள் நடத்துவதற்காக மன்னர்களால் கொடுக்கப்படும் தானங்கள் மக்களுக்கு விருப்பத்தை ஏற்படுத்தியுள்ளன.[54] அவற்றைப் போல் மக்களும் தானங்களைச் செய்தனர். இனிய பாக்களைப் பாடுகின்றவர்கள் கோவில் நிகழ்ச்சிகளில் பங்கேற்று மக்களுக்கு இசையமுதம் ஊட்டினர். திருவிழாக்காலம் முழுவதும் சமயத் தொடர்பான விரிவுரைகள், இசையரங்குகள், கிராமியக் கலைகள், புராண விளக்கங்கள் முதலியன நடப்பதால் மக்களுக்கு மன நிறைவையும், களிப்பையும் திருவிழாக்கள் அளிப்பனவாகின்றன.

தமிழ்நாட்டுக் கோமில்களில் திருவிழாக்கள் விரிவாகவே கொண்டாடப்படுகின்றன. திருவிழாக்களின் போது மக்கள் பல பொருள்களை வாங்குகின்றனர். கோமில்களுக்குக் காணிக்கை அளிக்கின்றனர். அவரவர்கள் வீட்டிற்கு வரும் விருந்தினர்களை நன்கு உபசரிக்கின்றனர். ஒருவித சமூக ஒன்றுகூடல் இதன்வழி நிகழ்கிறது.

இவ்வாறு திருவிழாக்கள் மக்களுக்கு மனமகிழ்ச்சியை ஏற் படுத்திய போதிலும், சில நேரங்களில் இதனால் பாமர மக்களுடைய பொருளாதாரமும் ஓரளவிற்குச் சீர்குலைந்து போவதைக் காணலாம். சிலர் கடன்பட்டு, விழாக்களைச் சிறப்பாகக் கொண்டாடுகின்றனர். சில நாட்கள் சென்ற பின்னர், இக்கடன்களை அடைக்க முடியாது அவர்கள் பெரிதும் வருந்துகின்றனர்.

மக்களாகப் பிறந்தவர்கள் மெய்யடியார்களுக்கும், உணவிட்டு உபசரிப்பதும், இறைவன் உலாக்காட்சி கண்டு, உள்ளம் மகிழ்வதும் இன்றியமையாது செய்யத்தக்கன என்பது மக்களின் நம்பிக்கையாம். இதனாற்றான் திருஞானசம்பந்தர்,

மண்ணி னிற்பிறந் தார் பெரும் பயன்மதி சூடு
மண்ண லாரடி யார்தமை யமுதுசெய் வித்தல்
கண்ணி னாலவர் நல்விழாப் பொலிவுகண் டார்தல்[55]

என்று பாடியுள்ளார்.

நம்நாட்டில் தற்சமயம் நிலவும் பல விழாக்களும் நம் முன்னோர் கள் ஏற்படுத்தியவைகளேயாகும். அவற்றைப் பழமையான முறைப் படி கொண்டாடுவதன் மூலம் நம் முன்னோர்கள் மரபினைப் பேணுவது டன் நாமும் விழாக்கள் வாயிலாக மனமகிழ்வு எய்துகிறோம்.

விழாக்கள் இல்லாத சமூக வாழ்க்கை இன்பத்துடன் இருக்க முடியாது. தனித்தனியே காட்டில் வாழும் புலிகள் போல் மக்கள் இருப்பர். சமூகத்தில் மக்கள், கூட்டங்களும் ஆரவாரங்களும் இல்லாமல் வாழ்வர்; ஆரவாரத்தில் ஏற்படும் இன்பப் பெருக்கமும் உணர்ச்சிப் பெருக்கமும் அவர்களிடையே இரா.

விழாக்களைக் குழுமி இருந்து கொண்டாடுவதால் உள்ளம் மகிழ்ச்சியுறும். விழாக்கள் கொண்டாடும் போது உடல், உள்ளம் ஆகிய இரண்டும் ஒருங்கே சிறந்த நிலையில் அமைய வாய்ப்பு ஏற்படுகிறது.

மக்களுடைய நல்லுணர்ச்சிகளை எழுப்பி, அவர்களைக் கூட் டாகப் பலவித வேலைகளில் ஈடுபடுமாறு செய்யும் ஆற்றல் மிக்கது விழாக் கொண்டாட்டம். எந்த விழாவைக் கொண்டாடுவதிலும் பலரின் ஒருமித்த ஈடுபாடு உள்ளதைக் காணலாம்.

தோரணம் கட்டுதல் கோலம் போடுதல், பாடுதல், ஆடுதல், விளையாடுதல், நாடகம் நடித்தல், நடனம் ஆடுதல், படம் போடுதல்,

கும்மி, கோலாட்டம், வில் அடித்தல், கரகம், சிலம்பம், ஒயில் கும்மி ஆடுதல் முதலிய பற்பல கலை நிகழ்ச்சிகளும் விழாக்களின் போது நடைபெறுகின்றன. அவற்றால் கூடிப் பழகும் குடிமைப் பயிற்சி விழாக் கொண்டாடுதல் மூலம் ஏற்படுகிறது எனலாம்.

## சமய விழாக்கள்

சிறு தேவதைக்கும், பெருங்கடவுளர்க்கும் சமுதாயத்தில் விழாக்கள் நடைபெறுகின்றன. பெருங்கோயில்களில் பெரும்பாலும் பத்து நாள் விழா நடைபெறும். இதனைப் பெருவிழா என்பர்.

திருவிழா நாளன்று கடவுளின் உற்சவமூர்த்தி வீதியுலா வருதல் வழக்கமாகும். மூலவராய் நின்று அருள்புரியும் ஆண்டவன் விழாக் காலத்தில் உற்சவ மூர்த்தியாய் வீதியுலா வருவார். இவ்வாறு நடைபெறும் சிறப்பு விழாக்கள் மக்கள் வாழ்வொடு எவ்வாறு பின்னிப் பிணைந்துள்ளன என்பதைக் காணின் 'சமய உணர்வே வாழ்வின் அடிப்படை' என்பது நன்கு விளங்கும்.

> **பசியும் பிணியும் பகையும் நீங்கி**
> **வசியும் வளனும் சுரக்க**[56]

வேண்டியே விழாக்களை இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே தமிழர் கொண்டாடியுள்ளனர். சமய சம்பந்தமான கோயில் விழாக்களில் இந்த நிலை இன்றும் காணலாம்.

பெருவிழாக் காலங்களில் வருபவருக்கு இல்லை என்னாது வழங்கும் மடங்களுக்கு இன்றும் குறைவில்லை.

நாட்டில் பிணியும் பகைமையும் நீங்கும் வழியிலே நாட்டு விழாக்களும் வீட்டு விழாக்களும் அமைகின்றன. விழா நாட்களில் மற்றவரையும் அழைத்து, வேறுபாட்டை மறந்து, கலந்து வாழ்வது பகை நீக்கத்திற்கு வழி வகுக்கிறது.

இவ்வாறு நாட்டைத் துன்புறுத்தும் பசி, பிணி, பகை ஆகியவைகளைக் களைவது, சமயச் சார்பான விழாக்கள் எனக் காணும்போது, அச்சமய உணர்வு, மக்கள் வாழ்வொடு பிணைந்த ஒன்றாக விளங்குகிறது. அவ்வாறே மழையும் வளனும் சுரக்க, ஆற்றும் விழாக்களும் மழையாலும் அதன் வரவால் பெற்ற வளனாலும் கொண்டாடும் விழாக்களும் நாட்டை வாழ்விக்க வல்லனவாகும்.

இடைக்கால மக்கள் தம்மை சமயநெறியோடு பிணைத்து, மனித வாழ்வு வேறு, சமய உணர்வுவேறு என்று எண்ணம் தோன்றாத

படி வாழ்ந்தும் வழிகாட்டியும் சென்றுள்ளனர். பொதுவாகக் கோயில் களில் ஆடி, புரட்டாசி, மார்கழி, பங்குனி மாதங்களில் திருமணங்கள் போன்ற நன்னிகழ்வுகளை மக்கள் கொண்டாடுவதில்லை.

புகழ்பெற்ற கோயில்களில் திருவிழாக்காலங்களில் குறிப்பிட்ட பாடல்கள் பாடப்படுகின்றன. மயிலைக் கபாலீசுவரர் கோயில், திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோயில், காஞ்சிபுரம் ஏகாம்பர நாதர் கோயில், திருநெல்வேலி நெல்லையப்பர் கோவில் ஆகியவற்றின் திருவிழாக்களில் குறிப்பிட்ட பாக்களையே பாடவேண்டும் என்ற கட்டுப்பாடு உண்டெனத் தெரிகிறது.

விழாக்காலங்களில் தனிப்பட்டோரும் நடனங்களையும், நடன நாடகங்களையும் சொற்பொழிவுகளையும் நிகழ்த்துவர். இக்கலை யின் முக்கிய நோக்கம் நம்நாட்டு வரலாறு, புராணம் ஆகிய வற்றினின்றும் அரிய காட்சிகளை நடத்தி, மக்களுக்குத் தெய்வ நம்பிக்கையும் பக்தியையும் வளர்ப்பதேயாகும்.

மக்கள் நம் இறைவனுக்கு எடுக்கும் திருவிழாக்களாக ஆடி மாதத்தில் ஆடிப்பூரம், புரட்டாசியில் நவராத்திரி, மார்கழியில் திருவா திரை, மாசியில் மகா சிவராத்திரி, பங்குனியில் உத்திரப் பெருவிழா ஆகியவற்றைக் கூறலாம்.

காஞ்சிபுரத்திலுள்ள கோயில்களிலும் இவ்விழாக்கள் சிறப் பாகக் கொண்டாடப்படுகின்றன. விழாக்களின் போது இறைவனை ஊர்வலமாகக் கொண்டு செல்வது வழக்கம். திருவிழாக்களில் எல்லாக் கோயிலிலும் உள்ள கடவுளரின் மூர்த்திகளை ஊர்வலம் கொண்டு செல்லும் போது காஞ்சிபுரத்தின் அமைப்பு முறைக்கேற்ப அவை காமாட்சியம்மன் கோயிலைச் சுற்றிக் கொண்டு செல்வது குறிப்பிடத்தக்கது. காஞ்சியிலுள்ள கோயில் விழாக்களுள் ஏகாம்பர நாதர் கோயிலில் பங்குனி உத்திரப் பெருவிழாவும், கச்சபேசர் கோயிலில் சித்திரைப் பெருவிழாவும் குமரகோட்டத்தில் ஐப்பசியில் நிகழும் மகா சஷ்டிப் பெருவிழாவும் கயிலாயநாதர் கோயிலில் மகா சிவராத்திரியும், வரதராசர் கோயிலில் வைகாசியில் நிகழும் கருடோற் சவமும் சிறப்பான விழாக்களாகும். ஏகாம்பரநாதர் கோயிலி லும் இத்தகைய விழாக்கள் பல எடுக்கப்படுகின்றன. இங்கு நிகழும் விழாக்களைப் பற்றிக் கீழே நோக்குவோம்.

காஞ்சிபுரம் ஏகாம்பரநாதருக்கு ஒவ்வொரு நாளும் விழா வெடுத்தல் வழக்கமாக உள்ளது. உற்சவ மூர்த்தியைக் கொடிக்

கம்பம் வரை எடுத்துக் கொண்டு வந்து செல்வதாக நடைபெறும் விழாவே இவ் விழாவாகும்.

ஐந்து பருவ விழாக்கள், நவராத்திரி முடிவில் நடக்கும் விசய தசமி விழா, பவித்திரோத்சவ விழா[57] முதலியன இக் கோவிலில் சிறப்பான விழாக்களாகும். இவற்றுக்கெல்லாம் சிகரம்போல் அமைவது இங்குக் கொண்டாடப்படும் பங்குனி உத்திரத் திருக்கல்யாணப் பெருவிழாவாகும். இவ் விழா பதினான்கு நாட்கள் நடைபெறும். இப்பொழுதெல்லாம் இவ் விழாக்களைச் செய்யும் புண்ணிய சீலர்கள் போட்டி போட்டுக்கொண்டு, பெரும் பொருட் செலவில் காலை, மாலை விழாக்கள் ஒவ்வொன்றையும் மிகச் சிறப்பாக நடத்துகின்றனர்.

## பங்குனி உத்திரப் பெருவிழா

பங்குனிஉத்திர விழா கல்யாண விரதம் எனவும் அழைக்கப்படும். முதலில் இவ்விழா மதுரையில் கொண்டாடப்பட்டது. பின்னர் தமிழ் நாட்டிலுள்ள எல்லாக் கோவில்களிலும் கொண்டாடப்படுகின்றது. பங்குனி உத்திரம் மாரிக் காலத்திலிருந்து பருவம் கோடை காலமாக மாறத் தொடங்கும் நாளாகும். இவ்விழா சோழர் காலத்திலேயே தமிழ்நாட்டில் கொண்டாடப்பட்டமைக்கு திருவொற்றியூரிலுள்ள ஆதி புரீசுவார் கோயில் பிராகாரத்திலுள்ள ராச கேசரி வர்மன் எனப்படும் திரிபுவனக் சக்கரவர்த்தி இராசாதிராசன் II (1172-86) காலக் கல்வெட்டுச் சான்றாகிறது. இம்மன்னன் பங்குனி உத்திர விழாவில் கலந்து கொண்டமை குறிப்பிடப்பட்டுள்ளது. திருவேகம்பர் கோயிலில் ஆண்டுதோறும் பங்குனி மாதத்தில் ஒழுங்காகக் குறிப்பிட்ட காலங்களில் விழாக்கள் நடக்கின்றன. அவை பின்வரும் முறைப்படி நடந்துகொண்டு வருகின்றன.

### நாளும் விழாவும்

| | காலை | இரவு |
|---|---|---|
| | | விநாயகர் உற்சவம் |
| 1. | கொடியேற்றம் | சிம்மம், கிளி வாகனம் |
| 2. | சூரியப் பிரபை | சந்திரப் பிரபை, அன்ன வாகனம் |
| 3. | பூத வாகனம் | சின்ன காஞ்சிபுரம் எழுந்தருளல் ஏசல் |
| 4. | நாக வாகனம் | வெள்ளி இடப வாகனம் |
| 5. | வெள்ளி அதிகார நந்தி சேவை | கைலாச பீட இராவணேசுவர வாகனம் |
| 6. | அறுபத்து மூவர் | வெள்ளித் தேர் அலங்காரம் |

| | | |
|---|---|---|
| 7. | ............ | இரதோற்சவம் |
| 8. | அறுமுக சுவாமி எடுப்புத் தேர் | பிட்சாடனர், குதிரை வாகனம் |
| 9. | ஆள்மேல் பல்லக்கு | வெள்ளி மாவடி வழிபாடு |
| 10. | சபா நாதர் காட்சி அம்பிகை ஒக்கப் பிறந்தான் குளத் திற்கு எழுந்தருளல் | பங்குனி உத்திர திருக் கல்யாணம் |
| 11. | கந்தப்பொடி வசந்தம் | உருத்திரகோடி விமானம் |
| 12. | புருடா மிருக வாகனம் | பஞ்ச மூர்த்திகள் உலா |
| 13. | தீர்த்தவாரி (சர்வ தீர்த்தத்தில்) | யானை வாகனம் கொடியிறக்கம் |
| 14. | ............ | திருமுறைப் பெருவிழா திருப்பனந் தாள் ஸ்ரீ காசி மடத்துக் கட்டளை யின்படி நடைபெறுவது. திருமுறை கள் யானை மீது புறப்பட்டு நான்கு இராச வீதிகளிலும் உலா வருதல். இரவு திருமுறை வணங்களால் திரு முறைப் பாராயணம் நடைபெறும். |

இவற்றுடன் திருவிழா நாள்களில் நாள்தோறும் மாலையில் கோயி லில் அமைக்கப்படும் சிறப்புப் பந்தலில் சமயச் சொற்பொழிவுகளும், நாதசுவரக் கச்சேரிகளும், தேவாரப் பாராயணமும் நடை பெறும்.

மேற்கூறியவற்றுள் நான்காம் நாள் இரவு நடைபெறும் இடபக் காட்சியும், ஆறாம் நாள் காலை அறுபத்து மூவர் விழாவும், அன்று இரவு நடக்கும் வெள்ளி இரதக் காட்சியும் ஒன்பதாம் நாள் இரவு நடக்கும் வெள்ளி மாவடிச் சேவையும், பத்தாம் நாள் இரவு ஏலவார் குழலியம்மை,[58] காமாட்சியம்மை, கருக்கினில் அமர்ந்த அம்மை என்ற மூவரும் திருமணக் கோலம் புனைந்து ஒன்றாகச் சேர்ந்து உலா வருங் காட்சியும் காண்பதற்கினியன: சிறப்புடையன. இதேபோல் திருமணவிழாவின் அடுத்த காலைப் போதில் இறைவன் தங்கத் தாலான இடப வாகனத்தில் செல்லும் திருக் கலியாணக் கோலக் காட்சியும் சிறப்பானது. அவற்றுடன், பன்னிரண்டாம் நாளில் முன் னைய விழாக்கள் போல் ஊர்திகளில் இறைவன் எழுந்தருளாது, மக்கள் தோள் மேல் ஊர்வலமாகச் செல்லும் ஐந்து மூர்த்திகள் காட்சி யும் கண் கொள்ளாக் காட்சியாகும். இந்த விமரிசையான விழாக் களைப் பல்லாயிரக் கணக்கான மக்கள் கண்டு மகிழ்வர்.

இவை தவிர ஆண்டு தோறும் இக்கோவிலில் விழாக்களாகச் சித்திரையில், பெருவிழாவும் (மகோற்சவமும்), புரட்டாசியில் நவ ராத்திரி உற்சவமும், ஐப்பசியில் கந்தர் சஷ்டி விழாவும், கார்த்திகைச் சோம வாரங்களில் நடக்கும் விழாக்களும், மார்கழியில் மாணிக்க வாசகர் உற்சவமும் நடைபெறுகின்றன.

இனி இக்கோவிலில் நடைபெறும் விழாக்களை மாத முறைப் படி காண்போம்.

## சித்திரைத் திருவிழா

சித்திரை என்பது தமிழர்களுக்கு முதல் மாதம். இம்மாதத்தில் முதல் நாள் அன்று ஐந்து அங்கங்களையுடைய பஞ்சாங்கம்[59] படிக்கும் நிகழ்ச்சியை ஏகாம்பர நாதர் கோயிலின் நிர்வாகிகளே நடத்துகின்றனர்.

இம்மாதத்தில் திருவேகம்பர் கோயிலில் விடாய் ஆற்றி விழா ஆறு நாட்கள் நடைபெறுகின்றன. இவ்விழா நாட்களில் மக்களுக்கு ஏற்பட்டுள்ள விடாயை (துன்பத்தை) ஆற்றிக் கொள்ளும் பொருட்டு, இறைவனுக்கு விழாவினைச் செய்து வழிபடுகிறார்கள்.

முதல் விழாவையும் இரண்டாம் நாள் விழாவையும் காஞ்சிப் பெருமக்கள் செய்கின்றனர். மூன்றாம் நாள் விழாவினை மாவட்ட முன்சீப் நீதிமன்றமும், நான்காம் நாள் விழாவினைக் காஞ்சிபுரம் மத்திய கூட்டுறவு வங்கியும் நடத்துகின்றன.

ஐந்தாம் நாள் விடையாற்றி விழாவில் வணிகப் பெருமக்களால் மூலவருக்குச் சந்தனத்திருமுழுக்கு சிறப்பாகச் செய்யப்படுகின்றது.[60]

ஆறாம் நாள் விழாவில், ஏகாம்பர நாதரும் ஏலவார் குழலியும் புட்பப் பல்லக்கில் எழுந்தருளி வீதியுலா வருவது கண்கொள்ளாக் காட்சியாகும். இவ்விழாவிற்கு ஆகும் செலவினைச் சென்னை, தினமணி எஸ்டேட் உரிமையாளர்கள் ஏற்றுக் கொள்கின்றனர். திருக் கோயிலில் மேற்கூறிய ஆறு நாட்களிலும் சிறப்பாகப் பூசைகள் நடத்தி, அங்குள்ள மூர்த்திகளின் திருவுருவங்களைப் பலவித வாகனங்களின் மேல் எழுந்தருளச் செய்து, நடத்தப்படும் விழாவிற்குப் பெருவிழா என்றும் மகோற்சவம் என்றும் சொல்லப்படும். பொதுவாகத் திருவிழா என்றும் கூறுவர்.

திருவிழா தொடங்குவதற்கு முதல் நாள் மண்ணெடுப்பதும், முளையிடுவதும், மண்ணைப் பதம் செய்து வித்திடுவதும் படைப்பைக்

குறிக்கும். பெரும்பாலும் இம்மகோற்சவம் அமாவாசையிலும், சிறுபான்மை பௌர்ணமியிலும் தொடங்குவது வழக்கம்.

சித்திரை மாதத்தில் விடையாற்றி விழா நடக்கும் ஆறு நாட்களிலும், ஏலவார் குழலியும் ஏகாம்பர நாதரும் நான்கு திருவீதிகளிலும் வலம் வருவர்.

## பாலூர் திருவிழா

இவ்விழாவினைக் கோயிலாரே சிறப்பாக நடத்துகின்றனர். ஒவ்வோர் ஆண்டும் சித்திரை மாதம் தேய்பிறை பஞ்சமி திதியில் காஞ்சிபுரத்தை அடுத்த ஊரான பாலூர் பெருமக்கள் ஏகாம்பர நாதரை வரவழைப்பார்கள். ஏகாம்பர நாதரும், காமாட்சியம்மையாரும் ஆண்டு தோறும் பாலூருககு வருவதற்கு, அவ்வூர் மக்கள் பெரிதும் உதவி செய்கின்றனர்.

காஞ்சியிலிருந்து ஏகாம்பர நாதர் இரவு புறப்பட்டுப் பாலூர் கிராமத்திற்குச் செல்கிறார். அக்கிராமத்தைச் சுற்றி வந்த பிறகு, பாலாற்றின் கரையில் அமைந்துள்ள மண்டபத்தில் எழுந்தருளுகிறார். இங்குத் திருமுழுக்கு, ஒப்பனை, ஒளிவழிபாடு ஆகியவை நடந்த பின்னர், மாலையில் நாதசுர இசை முழங்கும். இரவு எட்டு மணிக்கு மண்டபத்தை விட்டுப் புறப்பட்டு, ஆற்று மணல் வெளிக்கு ஏகாம்பர நாதர் செல்கிறார்.

இவ்விழாவினை மக்கள் "பாலூர் திருவூறல் விழா" என்று அழைக்கிறார்கள். ஊறல் என்றால் நீருற்று என்று பொருள். இறைவன் இந்நீருற்று பகுதிக்குச் செல்வதால் மக்கள் இவ்விழாவினைத் திருவூறல் விழா எனக் கூறுவர். விழா சிறப்பாக நடைபெறுவதைக் கண்டு மக்கள் மகிழ்ச்சியடைவர்.

திங்கட்கிழமை ஏகாம்பர நாதருக்குச் சிறப்பு வழிபாடாற்றும் நாளாகையால், அன்று இவ்விழா இடம் பெறுவதில்லை. அந் நாளில் இவ்விழா வந்தால், அதற்குப் பதிலாக, அதன் முன் நாளே இறைவன் பாலூருக்குச் சென்று, காட்சியளித்துக் காஞ்சிக்குத் திரும்பி விடுவார்.

## சமய குரவர் விழாக்கள்

திருக்கோயிலில் சைவ சமய குரவர் நால்வருக்கும், அவரவர்க்குரிய காலத்தில் விழாக்கள் நடைபெறுகின்றன. அம்முறையில் அப்பர் முக்தியடைந்த நாளாகிய சதய நட்சத்திரத்தில், அவருக்குத் திருமுழுக்கு வழிபாடு செய்வர்.[61] அவர் எண்பத்தொரு ஆண்டுகள்

வாழ்ந்தவர். இதையடுத்து வைகாசியில் நடைபெறும் விழாவினை நோக்குவோம்.

## வைகாசி மாதத்தில் நடைபெறும் விழாக்கள்

### தெப்பத் திருவிழா

இவ்விழா வைகாசி மாதத்தில் காஞ்சியிலுள்ள சருவதீர்த்தக் குளத்தில் மூன்று நாட்கள் நடைபெறும். பெரிய குளங்கள் உள்ள கோயில்களில் இவ்விழா நடைபெறுகிறது. காஞ்சிபுரத்தைப் போன்றே மதுரையிலும் இவ்விழா நடைபெறுவதைக் காணலாம்.

இறைவன் நீரில் வாழ்ந்து வரும் எல்லா உயிரினங்களுக்கும் அருள் செய்கின்றார் என்பதே இவ்விழாவின் தத்துவம் என்பர். சருவ தீர்த்தத்தில் பெரிய தெப்பங்கட்டி, அதில் திருவேகம்பநாதரை அலங் காரங்களுடன் எழுந்தருளச் செய்து வலம் கொண்டு வருவர். தெப்பக் குளத்தையும், அதிலுள்ள மண்டபத்தையும் மின் விளக்குகளால் அலங் காரம் செய்து நீரின் காட்சியையும், திருவிழாக் காட்சியையும் மக்கள் கண்டு மகிழ்வர். இவ்விழாவினைக் காஞ்சிபுரம் கொல்லா சிக்கண்ண செட்டியாரின் அறக்கட்டளை சிறப்பாக நடத்துகின்றது.

வைகாசி மாதம் மூல நட்சத்திரம் திருஞான சம்பந்தர் முக்தி யடைந்த நாளாகும். எனவே இந்நாளில் சம்பந்தர் விழா நடைபெறும்.

வைகாசி மாதத்தில் விசாக நட்சத்திரத்தில் வரும் முழு நிலா வன்று பௌர்ணமியன்று காஞ்சிபுரத்தில் ஏகாம்பரநாதர் கோயிலில் உள்ள நிலாத்துண்டப் பெருமாளுக்கு, மிகவும் சிறப்பான நாளாகும். எனவே இந்நாளில் பெருமாளுக்குத் திருமுழுக்கும் வழிபாடும் செய் யப்படுகின்றன. இதனையடுத்துத் திருக்கோயிலில் ஆனித் திருமஞ் சனம் நடைபெறும்.

### ஆனித் திருமஞ்சனம்

ஆண்டு தோறும் ஆனி மாதம் உத்திர நட்சத்திரத்திற்குப் பத்து நாட்களுக்கு முன் கோயிலில் கொடியேற்றுவர். அடுத்து உற்சவ மூர்த்திகளான ஏகாம்பரநாதர், ஏலவார் குழலி அம்மை, விநாயகர், சுப்பிரமணியர், சண்டேசுவரர் ஆகியோர் தனித்தனி வாகனங்களில் வீதியுலா வருவர்.

பின்னர் ஏகாம்பர நாதர், ஏலவார் குழலியம்மன் ஆகிய மூர்த்தி களை கோயிலின் சபா நாயகர் மண்டபத்தில் எழுந்தருளச் செய்து, திருவாபரணம் அணிவித்து வழிபாடு நிகழ்த்துவர்.

ஆனி மாதத்தில் மக நட்சத்திரத்தில் மாணிக்கவாசகர் முக்தி யடைந்த நாள் ஆகும். அன்று மாணிக்க வாசகர், பஞ்ச மூர்த்திகளு டன்[62] வீதியுலா வருவார். இவ்விழாவினையடுத்து ஆடிப்பூர விழா கொண்டாடப்படும்.

## ஆடிப்பூர விழா

ஆண்டாண்டு தோறும் ஆடி மாதத்தில் வரும் பூர நட்சத்திரத் திற்கு ஆடிப்பூரம் என்று பெயர். இந்நாளில்தான் உலகத்தாயாகிய பார்வதி அவதரித்துள்ளாள் என நம்பப்பட்டு வருகின்றது. அந்நாள் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றது.

அந்நாளில் பார்வதியை வணங்கினால் எல்லா நன்மைகளும் ஏற்படும் என்பது நம்பிக்கை. அந்நாள் வெள்ளிக் கிழமையில் வந் தால் அதற்கு மற்ற ஆடிப்பூர நாட்களை விட மிகவும் மேலானதாகக் கருதப்படும்.

தேவி உருவை குடமுழுக்கு செய்து, பூசை செய்தால் எல்லா நன்மைகளையும் எளிதில் பெறலாம் என்பது மக்களின் கருத்தாகும். முக்கியமாகப் பெண்கள் இப் பூசையை விரதத்துடன் மேற்கொண் டால், அவர்களின் கணவர்களுக்கு நீண்ட ஆயுளும் புத்திரப் பேறும் பெறுவர் என நம்பப்படுகிறது.

ஆடிப்பூர விழா தேவிக்கு எல்லாத் திருக்கோயில்களிலும் ஆடி மாதத்தில் வரும் பூர நட்சத்திரத்திற்கு முன் வரும் ஒன்பது நாட்கள் சிறப்பாக நடைபெறும். அவற்றுள் மிகவும் சிறப்பாக மதுரை, திரு வில்லிபுத்தூர், திருநெல்வேலி, வேதாரணியம், நாகப்பட்டினம், திரு வாரூர், சம்புகேசுவரம், திருவையாறு, திருவிடை மருதூர், கும்ப கோணம், திருவாஞ்சியம், திருவண்ணாமலை முதலிய இடங்களில் கொண்டாடப்படுகிறது.

'ஆடிப்பட்டம் தேடி விதை' என்னும் தமிழர் பழமொழிப்படி ஆடி மாதத்தில் பயிரிடத் தொடங்கும் பயிர்களுக்காக ஆனித் திங்கள் இறுதியில் நெல் விதைகளை முளைக்கச் செய்யுங்காலத்தில் இவ் விழா தொடங்கப்படுகிறது. காஞ்சிபுரத்தில் ஏகாம்பரநாதர் கோயிலில் ஏலவார் குழலி அம்மைக்குப் பூர நட்சத்திரம் கூடிய இரவில் விசேட திருமுழுக்கு அலங்காரங்கள் செய்யப்படும். இவ்விழாவினை இப் போது சென்னையிலுள்ள சிவகுமார் குருக்கள் சிறப்பாகச் செய்வர்.

இவ்வாடி மாதத்தில் பூர நட்சத்திரத்திற்கு அடுத்து வரும் சுவாதி நட்சத்திரம் சுந்தரமூர்த்தி சுவாமிகள் முக்தியடைந்த நாளாகும். இந்

நாளில் திருக்கோயிலில் சுந்தரர் விழா நடைபெறும். இவற்றை யடுத்துத் திருகோயிலில் பவித்திர விழா கொண்டாடப்படுகின்றது.

## பவித்திர விழா (தூய்மைப்படுத்தும் விழா)

இவ்விழாவினை ஆவணி மாதத்தில் அவிட்ட நட்சத்திரத்தில் கொண்டாடுவர். சிவனுக்காகத் தேவர்கள் செய்கின்ற பூசையிலும், மக்கள் செய்கின்ற பூசையிலும் கூறும் மந்திரங்களிலும் குறைகள் ஏற்படலாம். இவ்விரு குறைகளையும் போக்குவதற்காகவே பவித்திர விழா கொண்டாடப்படுகின்றது. இதைப் பிராயச் சித்தம் செய்யும் விழா எனவும் கொள்வர்.

இவ்விழாவில் இரு வகை உண்டு. அவை நித்தியப் பவித்திர விழா, ஆண்டுப் பவித்திர விழா என்பன. இவற்றுள் முன்னையது அன்றாடம் ஏற்படும் குறையைப் போக்கிக் கொள்ளச் செய்வதாகும். மற்றையது ஆண்டிற்கொரு முறை செய்யப் பெறுவதாகும்.

காஞ்சிபுரம் ஏகாம்பர நாதர் கோயிலில் பவித்திர விழா ஏழு நாட்கள் கொண்டாடப்படுகிறது. இவ்விழாவின்போது மூர்த்திகளுக்குப் பட்டிழைகளாலான மாலைகள் மஞ்சள் நீரில் தோய்த்து அணிவிக்கப்படுகின்றன. விழாக்கள் முடிந்த பின் இம்மாலைகளைப் பெற விழையும் அடியவர்களுக்குக் கொடுத்து விடுவர்.[63] அடுத்து இம்மாதத்திலேயே விநாயகர் உற்சவம் நடைபெறும்.

## விநாயகர் திருவிழா

இவ்விழாவினை ஆவணியில் கிருட்டின பட்சத்துச் சதுர்த்தியில் கொண்டாடுவர். மக்கள் பொன், வெள்ளி, மண் முதலியவற்றால் விநாயகர் திருவுருவம் செய்து கல்வி, கேள்விகளில் வல்லவராகவும் எடுத்த காரியம் முடிக்கவும், தங்கள் துன்பங்களை நீக்கவும் வேண் டிப் பூசிப்பர். விநாயகர் தன் உருப் பெற்றமை குறித்தும் இவரின் செயல்கள் குறித்தும் பல புராணச் செய்திகள் உண்டு.[63அ] இந்நாளில் விநாயகருக்குத் திருமுழுக்கு வழிபாடுகளைச் செய்வர். பின்னர், விநாயகருக்கு ஆடை அணிகலன்கள் அணிவித்து திருவீதி உலா வரச் செய்வர்.

விநாயகர் தனக்கு மேல் நாயகரில்லாமையால் இப்பெயரினைப் பெற்றார். இவருக்குச் சிந்தாமணி விநாயகர், கபில விநாயகர், வல்லபை கணேசர் முதலிய பல பெயர்கள் உள்ளன. இவர் கணங் களுக்கெல்லாம் தலைவனாகையால் கணபதி எனவும் பேர் பெற்றார்.

விநாயகரைப் பிரமன், திருமால், தக்கன், இந்திரன், உருத்திரன், உமை, சண்முகன், இராவணன், அகத்தியன் காசிபன் முதலியோர் பூசித்து இட்டசித்தி அடைந்தவர்[54] என்பர்.

திருக்கோயிலில் விநாயகர் விழாவினையடுத்து நவராத்திரி விழா நடைபெறும்.

## நவராத்திரி விழா

இவ்விழாவினைத் தென்னாட்டில் நவராத்திரி என்றும், வட இந்தியாவில் துர்க்காப் பூசை என்றும், மைசூரில் தசரா என்றும் கூறுவர். காஞ்சிபுரம் ஏகாம்பர நாதர் கோயிலில் நவராத்திரி விழாவினைக் கொண்டாடுவதற்குச் சென்னையில் வாழும் இலட்சுமி என்பவரும் காஞ்சிபுரத்திலுள்ள சரஸ்வதிபாய் என்பவரும் பொருளுதவி செய்கின்றனர். இவ்விழா இருவகைப்படும். ஒன்று புரட்டாசி மாதத்தில் வரும். மற்றொன்று சித்திரை மாதத்தில் வரும். சித்திரையில் வரும் நவராத்திரியை 'வசந்த நவராத்திரி' என்பர்.

புரட்டாசி மாதத்தில் மகாளய அமாவாசையில் எல்லா வகுப்பினரும் கோயிலின் குளக்கரையில் இறந்த முன்னோர்களுக்கு வழிபாடுகளைச் செய்வர்.

அமாவாசை அடுத்து ஒன்பது நாட்களில் தேவியைக் கும்பத்திலும், பிம்பத்திலும் எழுந்தருளச் செய்வர். ஒன்பது இராத்திரிகளில் தேவியை வழிபடுவதால் இக்காலம் 'நவராத்திரி' என்னும் பெயரினைப் பெற்றுள்ளது. சிற்சில இடங்களில் பத்து இராத்திரிகளில் வழிபடுவதால், தசராத்திரி என்று வழங்கப் பெறும்.

இவ்விழா நாட்களில் மக்கள் வீரத்தைப் பெறும் பொருட்டு, முதல் மூன்று நாள்களில் பராசக்தியைத் துர்க்கையாகக் கருதி வழிபடுவர். அடுத்த மூன்று நாட்களில் செல்வத்தைப் பெறுவதற்குத் தேவியை இலட்சுமியாகக் கருதி வழிபடுவர். கடைசி மூன்று நாட்களில் கல்வியைப் பெறும் நோக்கத்தோடு, தேவியைச் சரசுவதியாகக் கருதி வழிபடுவர். இவ்வாறு வழிபடுவதால், இவ்விழாவினைத்துர்க்கா, இலட்சுமி, சரசுவதி என்றும் 'மகா நவமி பூசை' 'சரசுவதி பூசை' என்றும் வழங்குவர்.

இறுதி நாளாகிய பத்தாவது நாளில் குதிரை வாகனத்தில் ஏகாம்பர நாதரை எழுந்தருளச் செய்து வன்னி மரத்தில் அம்பு தொடுத்தல் என்னும் நிகழ்ச்சி நடத்தப்படுகிறது. இவ்விழா, இறைவன் ஆன்மாக்களது ஆணவம், கன்மம், மாயை ஆகிய மலங்களைப்

போக்கிப் பக்குவப்படுத்துகின்றார் என்று நம்பிக் கொண்டாடப்படு கிறது. நவராத்திரி நாட்களில் விரதமிருந்து, தேவியைப் பூசிக்க வேண்டும் என்பர். மேற்கூறிய நாட்களில் கன்னிப் பெண்களைத் தேவி யின் அம்சமாகக் கருதி வழிபடுதலும் உண்டு.

முற்காலத்தில் இந்தியாவில் சிற்றரசர்கள் இந்த நவராத்திரி யைச் சிறப்பாகக் கொண்டாடியுள்ளனர். அதன் தொடர்பாகக் கோவில் களில் தெய்வங்களின் பெயரால் இந்த விழா கொண்டாடப்படுகின்றது.

இவ்விழா பல இல்லங்களிலேயும் சிறப்பாகக் கொண்டாடப் படுகிறது. அஃதாவது நவராத்திரி விழாவின் போது பலவிதமாக வியக்கத்தக்கப் பொம்மைகளைப் பெண்கள் தங்கள் வீடுகளில் அலங்காரமாகக் காட்சிக்கு வைக்கின்றனர். அவை பெரும்பாலும் திருமாலின் பத்து அவதாரங்களையும் மற்ற கடவுளர்களையும் தேச வீரர்களையும் குறிப்பனவாய் அமைந்திருக்கும்.[65]

நவராத்திரி விரதம் என்பது புரட்டாசி மாதம் பூர்வபட்ச பிரதமை முதல் திரிதியை வரையில் உருத்திரியையும் சதுர்த்தி முதல் சஷ்டி வரையில் இலக்குமியையும் சப்தமி முதல் நவமி வரையில் சரசுவதி யையும் பூசித்துத் தசமியில் முடிப்பதாகும்.[66] இந்த விரதத்தைப் பற்றி ஒரு கதை உண்டு. அஃதாவது சுகேது என்னும் அரசன், அரசாட்சி இழந்து வருந்தியதால், அவன் மனைவியாகிய துவேதியை ஆங் கிரச முனிவர், நவராத்திரி விரதம் மேற்கொள்ளுமாறு கற்பித்தார். அவ்வாறு அவள் அவ்விரதத்தை மேற்கொண்ட பின்னர், அவள் வயிற்றில் பிறந்த குமரனாகிய சூரியப் பிரதாபன், இழந்த நாட்டைப் பகைவரிடமிருந்து மீட்டனன் என்பர். இந்த விரதத்தை இராமன் மேற் கொண்டதால், சீதை இருக்கும் இடத்தை அறிந்தான் என்று தேவி பாகவதம் கூறுகிறது.[67]

திருக்கோவிலில் விசயதசமி விழாவினையடுத்து தீபாவளி விழாவினைக் கொண்டாடுவர்.

### தீபாவளிப் பண்டிகை

இப்பண்டிகை திருக்கோயிலில் கொல்லாச் சிங்கண்ண செட்டி யாரின் அறக்கட்டளையினரால் கொண்டாடப்படுகிறது. இஃது ஐப்பசி மாதம் தேய்பிறையில் (கிருட்டின பட்சத்தில்) திரயோதசி திதியின் முடிவாகவும் சதுர்த்தசி திதியின் தொடக்கமாகவும் உள்ள நாள் தீபாவளியாகும். இந்நாள் உலகத்தைத் துன்புறுத்தித் துன்ப இரு ளில் மூழ்கச் செய்த நரகாசூரனைக் கண்ணன் கொன்ற நாள் என்பர். இதனால் ஏற்பட்ட மகிழ்ச்சியினால் எல்லா மக்களும் அந்நாளில்

எண்ணெய் தேய்த்து நன்னீராடி, விளக்குகளை வரிசையாக வைத்துக் கொண்டாடுவர். தீபாவளிப் பண்டிகையை அடுத்து கந்தர்சஷ்டி விழாவினைக் கொண்டாடுவர்.

## கந்தர் சஷ்டி விழா

ஆண்டு தோறும் ஐப்பசி மாதத்திலோ கார்த்திகை மாதத்திலோ வளர் பிறையில் (சுக்கில பட்சத்தில்) பிரதமையில் தொடங்கி, சஷ்டி வரை உள்ள ஆறு நாள்களில் சுப்பிரமணியருக்கு விழா நடைபெறும். இந்தக் கந்தர் சஷ்டி விழாவினைத் திருக்கோவிலில் காஞ்சித் தன வந்தர்களே செய்வர். கந்தர் சஷ்டி[68] விழாவினையடுத்து வருவது கார்த்திகை தீபம்.

## கார்த்திகை தீபம்

கார்த்திகை மாதம் திங்கட்கிழமை இறைவனைப் பூசித்தல் சிறந்ததாகும். இந்நாளில் விரதத்தை மேற்கொள்பவர்கள் எல்லா நலன்களையும் அடைவர். இவ்விரதத்தை வசிட்டர் மேற்கொண்டு அருந்ததியை அடைந்தார் என்பர்.

மேலும் தேவர், முனிவர்கள், அரசர்கள் இன்னும் பலர் கார்த்திகை விரதத்தை மேற்கொண்டு பெரும் பாக்கியங்களைப் பெற்றுள்ளனர். இத்தீப வழிபாட்டிற்குக் கடம்பர் கோயில் இரத்தின கிரி, திருவேங்கடமலை முதலிய தலங்கள் முக்கியமானவையாகும்.

மாயவரம் அருகில் இருக்கும் திருக்கடையூர் தலம் இதற்கு முதன்மை பெற்றது.

கும்பகோணத்தில் உள்ள கும்பேசுவரர் கோயிலிலும் கார்த்திகைத் தீபத்திருவிழா விசேடமாகக் கொண்டாடப்படுகின்றது.

கார்த்திகை மாதத்தில் பௌர்ணமி திதியுடன் கூடிய நாள் கார்த்திகை என்று கொண்டாடப்படுகிறது. இந்த திதி இரண்டு நாளில் சேர்ந்து வருமாயின் மறு நாளே விரத தினமாகக் கொள்வர். இந்தக் கார்த்திகை நட்சத்திரத்தோடு கூடிய கார்த்திகைப் பௌர்ண மிக்கு "பத்மகம்" என்று பெயர். இது மிகவும் சிறந்த காலமாகக் கொண்டாடப்படுகிறது. இந்நாளில் முருகனைப் பூசை செய்வதால் எல்லாப் பாவங்களும் நீங்கி, வீடு பேற்றைப் பெறலாம்.

இப் பௌர்ணமி வியாழன் அல்லது திங்கள் தினத்தில் வந்தால் "மகாதிதி" என்றும் மகத்தான புண்ணியத்தை உண்டாக்கும் என்றும், "மகா கார்த்திகை" என்றும் பெயர் பெறுகிறது.

கார்த்திகை மாதத்தில் வரும் கிருத்திகையன்று இரவில் தெருக் களில் விளக்கு வைத்து, மாலைகளைப் போட்டு, மக்கள் விழா கொண்டாடுவர்[69] என்று அகநானூற்றில் கூறப்படுதலினால் இது தொன்மையான விழா என்பதறியலாம். இவ்விழா முருகனைச் சார்ந்து வழிபடும் விழாவாகும். இந்நாளில் ஏகாம்பர நாதர் காஞ்சிபுரத்தில் பஞ்சமூர்த்திகளுடன்[70] புறப்பட்டு வீதி உலா வருவார்.

கார்த்திகை நாளில் திருக்கோயிலுக்கு எதிரில் சொக்கப் பாணம் கொளுத்தப்படும். இதற்குக் காஞ்சிபுரம் தினகரன் பட்டு சேலை வியாபாரியான சிங்கார முதலியார் பொருளுதவி செய்கிறார்.

கந்தரது விரதங்களுள் ஒன்று கார்த்திகை விரதம். மக்கள் பரணி நட்சத்திரத்தில், புராணங்களைக் கேட்டு, மறு நாள் கந்த பூசை முடித்து விரதமிருப்பர். இந்த விரதத்தை அரிச்சந்திரன், அந்திமான் ஆகியோர் மேற்கொண்டு முக்தியடைந்துள்ளனர்.[71]

கார்த்திகை விளக்குப் போடுவதனால் உலகத்திற்கும் தேவர் களுக்கும் நன்மை உண்டாகும் என்பர். இவ்விழா எல்லாக் கோயில் களிலும் கொண்டாடப்பட்டாலும், மிகவும் சிறப்பாகத் திருவண்ணா மலையில் கொண்டாடப்படுகிறது.

பரமேசுவரன் கண்ணைப் பொத்திய பாவம் நீங்கக் காஞ்சிபுரம் சென்று பார்வதி தவம் புரிந்து, அப்பாவத்தை நீக்கிக் கொண்டாள். பின்னர் அவள் அருணகிரியில் தவம் செய்தால், இறைவர் தமது இடப் பாகத்தைப் பெறலாம் என்று வரம் தந்தார். எனவே பார்வதி, கார்த் திகைத் திங்களில் கார்த்திகை நட்சத்திரத்தில் திருவண்ணாமலை யைச் சுற்றிவந்து, பரமேசுவரனின் இடப்பாகத்தைப் பெற்றாள் என்பர்.[72]

சிவபெருமான் முப்புரத்தை[78] எரித்த நாளே "கார்த்திகை பௌர் ணமி, கார்த்திகைத் தீப விழா" நாளாகும்.

கார்த்திகைத் தீப விழா செய்பவர்கள் ஐம்பொறிகளினால் உண் டாகும் பற்றையும், மயக்கமாகிய அஞ்ஞானத்தையும், பேரின்பத் தால் நீக்கி, சிவானந்தச் சோதியாய் விளங்கும் இறைவனைக் காண்பர். இச்சிவானந்தச் சோதியை நினைவுபடுத்துவதே "அண்ணா மலை தீபம்" ஆகும். இதனைத் திருஞான சம்பந்தர் "தொல் கார்த் திகை நாள்"[74] எனக் கூறியுள்ளார். அடிமுடி காண முடியாத இறை வனே அண்ணாமலை என்பர்.

இறைவன் முப்புரத்தை எரித்த காலத்தில் தேரோட்டியாகவும் அம்பாகவும் இருந்தவர்கள் முறையே பிரம்மாவும் விட்டுணுவும்

ஆவர். இவர்கள் இருவராலும் இறைவனது அடியையும் முடியையும் தேடிக்காண முடியவில்லை. இந்நிகழ்ச்சியால்தான் இறைவன் ஆதியும் அந்தமும் இல்லாத சோதி வடிவானவன் என்று அவர்கள் உணர்ந்தார்கள் என்பர்.

மகாபலிச் சக்கரவர்த்தி என்பவர் கார்த்திகைத் தீபத்தினால் தனது முற்பிறவியை அறிந்தார் என்பர். அவர் இறைவன் திருவடியை அடையும் பொழுது "உலகிலுள்ள எல்லா மக்களும் இத்தீப விழாவினைச் செய்து நன்மை அடைய வேண்டும்" என்றும், "மாவலியோ மாவலி" என்று கூறி, "கார்த்திகை மாதம் முழுவதும் விளக்கேற்ற வேண்டும்" என்றும் இறைவனிடம் வேண்டினான் என்பர். இவ் வேண்டுகோளின்படி மாவலி சுற்றுதல் என்னும் நிகழ்ச்சி இந்நாளிலும் நிகழ்ந்து வருவதைக் காணலாம்.

வருடந்தோறும் ஏகாம்பரநாதர் கோமிலில், கடைசி திங்கட்கிழமையன்று 'விளக்கீட்டு விழா' நடைபெறும். இவ்விழா பண்டைக் காலத்திலிருந்தே தமிழ்நாட்டில் நடைபெற்று வருகிறது என்பதனைக் கார் நாற்பது,[75] களவழி நாற்பது,[76] அகநானூறு[77] ஆகிய இலக்கியங்களின் வாயிலாக அறிந்து கொள்ளலாம்.

திருக்கோயிலில் விளக்கீட்டு விழாவினையடுத்து, மாணிக்கவாசகர் விழா கொண்டாடப்படுகின்றது.

## மாணிக்கவாசகர் விழா

இவ்விழா மார்கழி மாதத்தில் ஏகாம்பரநாதர் கோமிலில் பத்து நாட்கள் நடைபெறும். இவ்விழா நாட்களின் போது நாள்தோறும் மாணிக்க வாசகர் திருவீதிவுலா வருவார். பத்தாம் நாள் இரட்டினப் பொன்னூசல் விழா நடைபெறும். மார்கழியில் மாணிக்க வாசகரால் இயற்றப்பட்ட திருவெம்பாவை, திருப்பள்ளியெழுச்சிப் பாடல்கள் பாடகர்களால் பாடப்படுகின்றன. இவரது விழாவினைக் காஞ்சிப் பெரு வணிகர்களே நடத்துகின்றனர். மாணிக்க வாசகர் விழாவினை அடுத்துத் திரு ஆதிரை விழா நடைபெறும்.

## திரு ஆதிரை விழா

இவ்விழா 'மார்கழி விழா' என்றும் பெயர் பெறும். இது சிவத் தொடர்பான விழாவாகும். சிவபெருமான் ஆதிரை முதல்வன் எனப் பட்டான்.[78] ஒவ்வொரு மாதமும் திருவாதிரை நட்சத்திரம் வந்த போதிலும் சூரியன் தனூர் இராசியில் இருக்கும் காலமாகிய மார்கழி மாதத்தில் இந்தத் திருவாதிரை நட்சத்திரம் வரும் காலத்திற்கு விசேடம் அதிகம்.

விடியற் காலத்தில் இந்த விரதம் மேற்கொள்வோர் எல்லா நலன்களையும் பெறுதலுடன் வீடு பேற்றினையும் பெறுவர்.

இந்நாளில், ஆபத்துக்களையெல்லாம் நீக்கி மங்கலம் உண் டாக்குகின்றவரும் உலகில் உள்ள எல்லாப் பிராணிகளுக்கும் தன் னுடைய ஆனந்த நடனத்தைக் காண்பிக்கின்றவரும் ஆகிய நடராசப் பெருமானுக்கு மக்கள் அபிடேகமும், பூ வழிபாடும் (அருச்சனை) செய்து சருக்கரைப் பொங்கலைப் படைத்து வணங்குவர்.

இந்நாள் எல்லாச் சிவாலயங்களிலும் விழாவாகக் கொண்டாடப் பட்ட போதிலும், சிதம்பரத்தில் மிகுந்த சிறப்புடன் கொண்டாடப் படுகிறது.

சென்னைக்கு அருகில் உள்ள திருவாலங்காடு என்னும் கோயி லில் ஈசுவரன் காளியுடன் நடனஞ் செய்து, அவளை ஊர்த்துவத் தாண்டவத்தில் வெற்றி பெற்ற பெருமை பற்றி, இவ் விழா மிக்க சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

காஞ்சிபுரத்தில் ஏகாம்பர நாதர் கோயிலில் திரு ஆதிரை விழாவினை நடத்துவதற்குக் காஞ்சிபுரம் சி.பி. கன்னியப்ப முதலி யார் பொருளுதவி செய்கிறார்.

திருவாதிரை விழாவன்று நடராசப் பெருமானின் நடனக் கோலத் தைக் கண்டு மக்கள் நீங்கா மகிழ்ச்சி அடைவர். இதனைத் "திருவா திரை ஒருவா களி" என்று வழக்காற்றில் வழங்கி வருதலால் அறிய லாம். தற்காலத்தில் இவ்வழக்காற்றின் பொருள் மாறி அந்நாளில் வீடுகளில் அரிசியை வறுத்து மாவாக்கித் 'திருவாதிரைக் களி' என்று சொல்லும்படியான ஒரு வகை உணவுப் பண்டத்தைத் தயாரித்து இறைவனுக்குப் படைத்து உண்கின்றனர்.

கோயிலில் திருவாதிரை விழாவினை அடுத்து வருவது பொங் கல் விழாவாகும்.

## பொங்கல் விழா

இவ்விழாவினைக் கோயிலில் தை மாதம் முதல் நாளில் கொண் டாடுவர். தை மாதம் முதல் நாளில் உத்தராயணம் (கதிரவன் வடபாற் போதல்) தொடக்கமாகிறது. பொங்கல் விழாவினை உழவர்களின் அறுவடை விழா[79] என்றே குறிப்பிடுவர்.

தை மாதத்தில் கொண்டாடப்படும் விழா 'தை விழா' எனப்படும். இதைத் 'தைந் நீராடல்' என்றும் கூறுவர். அன்று மக்கள் தாம் விரும்

பிய தெய்வங்களை வணங்குவர்.[80] இவ்வித விழாக்களைக் கொண்டாட மன்னரும், மக்களும் கோவிலுக்குத் துணை புரிந்துள்ளனர்.

சோழ அரசர்களும், விசயநகரப் பேரரசர்களும் கோயில் விழாக்களுக்காகப் பல்வேறு தானங்களைச் செய்தனர். சான்றாக முதலாம் குலோத்துங்கன் ஆட்சியாண்டு ஆறில் (கி.பி.1075) கதிரவன் வடக்கு நோக்கிச் செல்லும் காலத்தில் (உத்தர அயனந் தோறும்) கோயிலில் கலசம் ஆட்டுவதற்கு வீரணுக்கண் தாமோதரன் கேளாந்தக மாராயன் என்பவன் கீழ்க்காணும் பொருள் களைத் தானமளித்துள்ளான் என ஒரு கல்வெட்டு குறிப்பிடுகிறது.

| | |
|---|---|
| கலசமிடும் குயவர்க்கு | 2 காசு |
| நூலுக்கு | ¾ காசு |
| எண்ணெய்க்கு | ¼ காசு |
| சகனத்திற்கும் (ஆசனத்திற்கும்) கற்பூரத்திற்கும் | ½ காசு |
| கலசம் சுற்றும் புடைவை பதினெட்டு நிறப்புடைவை பாவாடைப் புடைவை | 2½ காசு |
| ஆசாரியருக்கு உடை உத்தரியம் (மேற் போர்வை) | 1½ காசு |
| திருவாராதனை செய்வார்க்குக் கூறை | ½ காசு |
| உடையார்க்குச் சாத்துக் கூறை | 1 காசு |
| காய்கறிகள் செய்யும் 25 பேருக்கு | 2 காசு |
| ஆசாரியருக்குக் காணிக்கை (தட்சணை) | ½ காசு |
| நெல் | 10 கலம் 7 குறுணி |
| அரிசி கலசத்திற்கு | 2 கலம், |
| மாணிகள் (துறவிகள்) எண்மர்க்கு | 1 கலம், தூணி நெல்[81] |
| பால், பழம், அமிர்தம் | 2 தூணி நெல் |
| வாண கலசம் | 2 தூணிப் பதக்கு[82] |

| | |
|---|---|
| அமுதுக்கு | கலம், தூணி நெல் |
| இம்மூபதார்த்தம் செய்பவர்கள் 25 | 7 குறுணி அரிசி[83] |

இக்கல்வெட்டு முடிவுறாமல் பழுதாகியுள்ளது.[84]

ஆண்டுதோறும் தை மாதம் பூச நட்சத்திரத்தில் காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோயிலில் தெப்ப விழா மூன்று நாள்கள் நடைபெறும். அன்று முழுநிலவு இருப்பதைக் காணலாம். ஏகாம்பரநாதர் மிகுந்த அலங்காரத்துடன், தெப்பத்தில் வருவதை நகர மக்களும், கிராம மக்களும் கண்டு மகிழ்வர். தைப் பூசத்தில்தான் நடராசப் பெருமான் ஆனந்த நடனம் செய்தார் என்பர்.

மேற்கூறிய தெப்பத் திருவிழாவிற்கு முற்கால மன்னர்கள் தானங்களைச் செய்துள்ளனர். சான்றாக, கி.பி.1517இல் கிருட்டின தேவராயர் கல்வெட்டு ஒன்று தெப்ப உற்சவத்தின் போது நடை பெறும் ஊர்வலத்திற்காக இரு ஊர்களை நன்கொடை அளித்த தாகக் கூறுகின்றது. அத்துடன் ஏகாம்பரநாதர் கோயிலுக்கு ஒரு தேரையும், பெருமாள் கோயிலுக்கு ஒரு தேரையும் அளித்ததாகவும் கூறுகிறது.[85]

மேலும் ஒரு முறை கிருட்டின தேவராயர் காஞ்சிப்புரத்தைப் பார்வையிட்ட போது ஏகாம்பர நாதர் கோயில் தேரும், பெருமாள் கோயில் தேரும் தடையின்றிச் செல்வதற்கு என்றே வீதிகளைச் சீர் திருத்தம் செய்து ஒழுங்குபடுத்தியுள்ளார்[86] என்றும் அறிய முடிகிறது.

விசய நகர மன்னர்களுள் கிருட்டின தேவராயர் காஞ்சிபுரத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தார். இவர் காலத்தில் மக்கள் மகிழ்ச்சியுடன் வளமாக வாழ்ந்ததாகக் கூறுவர். சமூக, பொருளாதார சமய வளர்ச்சியில் இவர் வகித்த பங்கைக் காஞ்சிபுரத்தில் உள்ள 23 கல்வெட்டுக்களின் வாயிலாக அறிய முடிகிறது.

இவற்றில் பெரும்பான்மையானவை கோயில்களுக்கு நன்கொடை அளித்தையே எடுத்துக் காட்டுகின்றன. இக்கல்வெட்டுகள் பெரும் பாலும் அரசனுக்காகவோ அரசன் பெயரிலோ, அரசன் நன்மை குறித் தோதான் எழுதப்பட்டவையாகும். எடுத்துக் காட்டாக, ஒரு கல்வெட் டில் மன்னன் ஏகாம்பர நாதருக்கு விழா எடுக்கும் நாளன்று, விழாப் பொருள்களைக் கோயிலுக்கு அளிப் பதற்காகக் குலோத்துங்க சோழ வளநாட்டு என்ற புலியூர் கோட்டத்திலுள்ள குண்ணத்தூரை நன்கொடை

யாகக் கொடுத்து இருக்கிறான்.[87] இக் கல்வெட்டு கி.பி.1510இல் டிசம்பர் 26ஆம் நாளன்று எழுதப்பட்டுள்ளது.

அடுத்து அச்சுதராயரின் முடிசூட்டு விழாவின்போது (கி.பி. 1529-1542) சாளுவ நாயக்கர் என்ற சிவன் கோயில் அதிகாரி பெருமாள் கோயிலுக்கும், சிவன் கோயிலுக்கும் சமமாகக் கொடுக்க வேண்டிய ஊர்களை, ஒருதலைப்பட்சமாக அதிக ஊர்களைச் சிவன் கோயிலுக்கு ஒதுக்கியதால் அதற்கு மன்னரால் தகுந்த நடவடிக்கை எடுக்கப்பட்டது[88] எனத் தெரியவருகிறது. இத்தகைய செய்திகளால் விசய நகர மன்னர்கள் கோயிலுக்குப் பெரிதும் உதவி புரிந்துள்ளனர் என்பதறியலாம்.

திருக்கோயிலில் தைப்பூசத் தெப்ப விழாவினையடுத்து சிவராத்திரி விழா கொண்டாடுவர்.

## சிவராத்திரி

ஆண்டுதோறும் மாசி மாதத்தில் கிருட்டினபட்சத்தில் சதுர்த்தசி இரவு பதினான்கு நாழிகையில் மகா சிவராத்திரி வருகிறது. சிவனை வழிபடுகின்றவர்கள் தம் பாவங்களைப் போக்க விரதமிருந்தும், தியானம் செய்தும் வழிபடுதலுக்குக் குறித்துள்ள நாளே சிவராத்திரி எனப்படும். சிவராத்திரியில் நான்கு சாமங்களிலும்[89] உளமார்ந்த பூசைகளும் தானங்களும் செய்வர்.[90]

அவ்வாறு பூசை செய்தவர்கள் இப்பிறப்பில் எல்லா நலன்களும் பெற்று, மறுமையில் வீடு பேற்றையும் பெறுவார்கள்[91] என நம்பப்படுகிறது.

சிவராத்திரி[92] நாளன்று ஏகாம்பர நாதருக்கு நாள்தோறும் நடக்கும் ஆறுகால பூசைகளுக்கு மேல் இரவு நான்கு கால பூசைகளும், இலட்சார்ச்சனைகளும் நடைபெறும். நான்கு கால பூசைகள் முடிந்தவுடன் பெருமான் இடப வாகனத்தின் மீது புறப்பட்டு வீதிவலம் வருவார்.

சிவராத்திரியடுத்து தவன விழாவினைக் கோயிலில் கொண்டாடுவர்.

## தவன விழா

ஏகாம்பர நாதர் கோயிலில் மாசி மாதத்தில் புனர் பூச நட்சத்திரத்தில் தவன விழா மூன்று நாள்கள் நடைபெறும். முதல் இரு விழாக்களைக் கோயிலார் செய்கின்றனர். இறுதி நாள் விழாவினைக்

காஞ்சிபுரம் மணிகேச முதலியார் செய்கிறார். இந்த விழாவில் நான்கு கடவுளர்களான ஏகாம்பர நாதர், ஏலவார்குழலி, விநாயகர், முருகர் ஆகியோர்களின் வாகனங்களுக்குத் தவனம் என்ற நறுமணம் மிக்க தழையினால் அலங்காரங்கள் செய்யப்படுகின்றன.

தவனத்தினால் அலங்கரிக்கப்பட்ட மண்டபத்தில் இறைவர் பல மணி நேரங்கள் தங்கியிருப்பர்.[96]

திருக்கோயிலில் தவன விழாவினையடுத்துப் பங்குனி உத்திரப் பெருவிழா நடைபெறும்.

## பங்குனி உத்திரப் பெருவிழா

திருக்கோயிலில் பங்குனி மாதத்தில் உத்திர நட்சத்திரத்தில் இப் பெருவிழா, கொண்டாடப்படுகிறது. இப்பெரிய விழாவினை மகோற்சவம் என்பர். இதனைப் பதினான்கு நாள்கள் மக்கள் சிறப் பாகக் கொண்டாடுவர். இப்பதினான்கு நாள்களிலும் காலை, மாலை ஆகிய இரு வேளைகளில் விழாக்களைச் செய்வோர் விவரங்களை பின்னிணைப்பு ஏட்டில் காணலாம்.

பங்குனி உத்திரப் பெருவிழாவிலும் கொடியேற்றுவிழா, வாக னாதி விழா, தேர் விழா, மௌன விழா, தீர்த்த விழா முதலிய திரு விழாக்கள் நடைபெறுகின்றன.

மேற்கூறிய திருவிழாக்களுள் ஒவ்வொன்றும் இறைவனுடைய தொழில் தத்துவத்தை உணர்த்துகின்றன. அவற்றுள் கொடியேற்று விழா படைத்தலையும், வாகனாதி விழா காத்தலையும் தேர் விழா அழித்தலையும், மௌன விழா மறைத்தலையும், தீர்த்த விழா அரு ளையும் அறிவுறுத்துகின்றன.

உயிர்கள் நலம் பெறவே பங்குனி உத்திரப் பெருவிழாக் கொண் டாடப்படுகிறது என்பர்.

ஒவ்வோர் ஆண்டும் பங்குனி மாதத்தில் உத்திர நட்சத்திரத்தில் இறைவர் ஏகாம்பர நாதருக்கும், இறைவி ஏலவார்குழலிக்கும் திரு மணம் நிகழ்கிறது. பங்குனி உத்திர நாள் திருமணத்திற்குச் சிறந்த நாளாகக் கருதப்படுகிறது.

பங்குனி உத்திர நாள் குளிர் காலத்திலிருந்து கோடை காலமாக மாறுவதற்கு உரிய நாள் என்பர்.

இக்காலத்தில் நாட்டுப்புற மக்கள் ஓய்வாக இருப்பர். எனவே, கோயில்களுக்கு நெல் காணிக்கையாகக் கொடுத்து, மகிழ்ச்சியுடன்

உத்திரப் பெருவிழாவில் பங்கு கொள்வர். திருவிழாத் தொடங்கு வதற்கு முன்னால் மண் எடுப்பதும் மண் ணைப் பதம் செய்து வித்திடு வதும், முளையிடுவதும் படைப்பைக் குறிப்பதாகும். அன்று இரவு விநாயகர் உற்சவம் நடைபெறும்.

பதினான்கு திருவிழாவில் முதல் திருவிழாவாகிய கொடியேற்று விழா என்பது ஓர் உயரிய தத்தவத்தை உணர்த்துகிறது.

## கொடியேற்றம்

இடப உருவத்தை ஒரு துணியில் எழுதி, அதற்குப் பூசைகள் செய்து, கயிற்றில் கட்டிக் கொடி மரத்தின் உச்சிக்கு ஏற்றுவது கொடி யேற்றம் ஆகும். சமம் (ஈடு), விசாரம் (கவலை), இன்பம் (மகிழ்ச்சி), சாது (அமைதி) சங்கமாகிய நான்கு குணங்களையும் உடையது நந்தி, இந்த நந்தி, வெள்ளை நிறம் பொருந்திய தரும தேவதை யாகும். இதனை ஒப்ப ஆன்மாக்கள் தூய்மை உடையவர்களாகி, அந் நான்கு குணங்களையும் உடையவர்களானால், அவர்களை இறை வன் இருக்கும் நிலையிலிருந்து உயர்த்துவான் என்பதைக் கொடி யேற்றம் உணர்த்துகின்றது.

சிவ ஆகமப்படி கொடி மரம், பதியாகிய சிவபெருமானைக் குறிக்கும். கொடிக் கயிறு திருவருட் சக்தியைக் குறிக்கும். கொடிச் சிலை பசுவையும், தருப்பைக் கயிறு பாசத்தையும் குறிக்கும்.[94]

இந்நாள் காலையில் கொடியேற்றிய பின்னர் ஏகாம்பரநாதர் பவழக்கால் சப்பரத்தில் (விக்கிரகந்தாங்கி) வீதியுலா செல்வார். பூசை நடக்கும் போதும், திருவீதியுலாவின் போதும் வணங்காமல் இருப்பது பெருமானை இகழ்தல் என மக்கள் கொள்வர்.

இவ்விழாவில் இரவில் இறைவர் சிம்ம வாகனத்திலும் இறைவி யாரான ஏலவார்குழலி கிளி வாகனத்திலும் உலா வருவர். பெரும் பாலான தலங்களில் வாகனங்களின் அமைப்பு பக்கத் திசையிலேயே அமைந்திருக்கும். சுவாமி நேராக நோக்குவார். ஆனால் காஞ்சியில் சுவாமியின் நோக்கும் வாகனங்களின் முகமும் ஒரே திசையில் இருக் கும், இம்முறை குறிப்பிடத்தக்கதாகும்.

முற்காலத்தில் முடியாட்சி நிலவியிருந்தபோது அரசர் நீதி யாகிய புதல்வரைப் பெற்று மேன்மையடையவே முதல் திருவிழாக் கொண்டாடப்படுகிறது.[95]

உலகில் உள்ளவர்களுக்கு வலிமையை ஏற்படுத்தும், செல்வம் பெறவே கோவிலில் இவ்விரண்டாம் நாள் விழா கொண்டாடப் படுகிறது.

## இரண்டாம் நாள் விழா

இவ்விழாவின் காலையில் ஏகாம்பர நாதர் சூரியப் பிரபையில் எழுந்தருளுவார். உலகத்திலுள்ள உயிர்களுக்குச் சூரியனது வெப்பம் அவசியமாகிறது. சூரிய வெப்பத்தினால்தான் கடல் நீர் ஆவியாகி மேலே சென்று மேகமாகி, அம்மேகங்கள் குளிர்ந்து மழையைத் தருகின்றன.

காலை விழாவை மண்டித் தெரு மளிகை வியாபாரிகளின் மகமைச் சங்கத்தினர் ஏகாம்பரர் கோவிலில் நடத்துகின்றனர். அன்று இரவில் சந்திரப் பிரபையுடன் அன்ன வாகனத்தில் இறைவர் எழுந்தருளுவார். சந்திரன் இன்பத்தைத் தருவதாகும். எனவே இவற்றில் இறைவனை வைத்து வணங்குதல் எம்பெருமானின் தொழிலுக்கு இன்ப அறிகுறி என்பர். இதைப் பெரிய காஞ்சிபுரம் பலசரக்கு வியாபாரிகள் செய்வர்.

## மூன்றாம் நாள் விழா

இவ்விழாவின் காலையில் ஏகாம்பரநாதர் பூத வாகனத்தின் மீது எழுந்தருளுவார். இறந்தவுடன் ஆன்மாக்களைக் கொண்டு போகும் தொழிலினை மேற்கொண்டது பூத கணம். இதன் மீது இறைவன் எழுந்தருளுவது சங்கார மூர்த்தி என்பதைக் குறிப்பதாகும். நாட்டில் என்றும் மழை பொழிய வேண்டியே இம்மூன்றாம் நாள் விழா கொண்டாடப்படுகிறது.[36]

இரவு விழாவில் சுவாமி, அம்பிகை ஆகியோர் பவழக்கால் சப்பரங்களிலும், விநாயகர் பெருச்சாளி வாகனத்திலும், சுப்பிரமணியர் மயில் வாகனத்திலும் சண்டிகேசுர் எழுந்தருள சிறிய காஞ்சிபுரம் வரதராசர் கோயிலில் ஏசல் செய்யப்படுகிறது.

## ஏசல் விழா

வரதராசர் கோயிலின் எதிரில் ஏகாம்பர நாதர் அம்பிகையுடன் ஒரு மண்டபத்தில் தங்குவார். இரவு ஒன்பது மணிக்கு மேல் விநாயகர் பெருமானும், முருகப் பெருமானும் வரதராசர் கோயிலுக்குச் செல்வர். அப்பொழுது வரதராசப் பெருமாள் கோயில் அர்ச்சகர் ஒளி வழிபாடு (தீபாராதனை) செய்வர்.

வழிபாட்டிற்கு வைத்த பொருள்களை அக்கோவிலின் குளத்தில் விட்டுவிடுவர். இவ்வாறு அர்ச்சகர் செய்வதற்குக் காரணம், சைவத் தெய்வங்கட்குப் பயன்படுத்தப்பட்டதை, வைணவர்கள் பயன் படுத்தக் கூடாது என்பது கருதியே என்பர். இது போன்றே வரதராசப் பெரு

மாளைத் தோளில் தாங்கி வரும் கோடிக்காரர்களை வைகாசி விழா வில் ஆறாம் நாளும் எட்டாம் நாளும் முறையே யானை மீதும், குதிரை மீதும் எழுந்தருளி, ஏகாம்பரநாதர் கோயிலின் முன்பு வந்து, யானை யின் பின் பக்கத்தையும், குதிரையின் பின் பக்கத்தையும் காட்டிக் காட்டி முன்னும் பின்னும் சென்று வருவர். இந்நிகழ்ச்சியை ஏசல் விழா என்பர்.

ஏகாம்பர நாதருக்குத் திருமால், தனது தங்கையைத் திருமணம் செய்துக் கொடுத்துள்ளார் என்பது நம்பிக்கை. மைத்துனரான ஏகாம் பரநாதருக்கு ஏசல் காட்டுவது போல மேற்கண்ட நிகழ்ச்சி நடக்கும். இந்த நிகழ்ச்சியின் போது ஏகாம்பர நாதர் கோயில் குருக்கள் வரத ராசருக்கு ஒளி வழிபாடு முதலான உபசாரங்களைச் செய்வர்.

## நான்காம் நாள் விழா

சுவாமி காலையில் நாகவாகனத்தில் எழுந்தருளுவார். இந்த வாகனம் மறைத்தல் தொழிலைக் குறிப்பதாகும்.

அரசனின் பகைவர்கள் அழிய வேண்டி இந்த நான்காம் நாள் விழா கொண்டாடப்படுகிறது என்பர். இதனையே கச்சாலையர் காஞ்சிப்புராணத்தில், "நான்கு சேர்தின மரசர்தம் மருவலர் நசிக்க"[37] என்று இயம்பியுள்ளார்.

இரவு விழாவில் இறைவன் வெள்ளியில் செய்யப்பட்ட இடப வாகனத்தில் எழுந்தருளுவார். இவ்வாகனம் குற்றமற்றது. ஆணவ மலத்தையொழித்து, அருளொடு கூடிய அறிவைப் பணிவுடன் ஏற்று நிற்கின்றது. ஆன்மாக்கள் இவ்வாறு ஆகும் போதுதான் இறைவன் பேரருள் சுரக்கின்றார். எனவே இக்காட்சி அருட்காட்சியாகின்றது என்பர்.

## ஐந்தாம் நாள் விழா

ஐந்தாம் நாள் விழாக் காலையில் இறைவன் வெள்ளி அதிகார நந்தியில் காட்சியளிக்கிறார். மான், மழு, சதுர்ப்புசம், மூன்று கண்கள் முதலிய அடையாளங்களையுடைய சாருப்பிய[38] பதவி பெற்றவர் களுள் அதிகார நந்தி சிறந்தவர். இதன் மீது இறைவன் எழுந்தரு ளுவது சங்காரமூர்த்தி என்பதைக் குறிப்பதாகும்.

இரவு விழாவில் இறைவன் இராவணேசுவரன் வாகனத்தில் எழுந்தருளுவார். இதைப் பற்றி ஒரு வரலாறு உண்டு. அஃதாவது இராவணன், ஆணவ மலம் நிறைந்து உயிர் இருப்பது கைலாச மலை என்பதை அறிந்திருந்தான். இவன் அம்மலையைத் தூக்க முயல்

வது, ஆணவ உலகை அறிந்து இன்புற முயல்வதாகும். இராவணன் மலையைத் தூக்க முடியாமல் துன்பம் அடைந்தான். அவ்வளவில் ஆணவ மலம் நிறைந்த உயிரும், கடைசியில் ஆணவத்தை இழந்து, இறைவனை வணங்கி அவனது அருள் பெற்றுத் திருவடி சார்ந்தது என்பதை உணர்த்துகின்றது.

இவ்விழா வஞ்சகமான பகைவர் அழிவர் என்பதைக் குறிக்கும் வகையில் கொண்டாடப்படுகிறது.[99]

## ஆறாம் நாள் விழா

ஆறாம் நாள் விழாக் காலையில் சேக்கிழாரின் பெரிய புராணத்தில் கூறப்படுகின்ற அறுபத்து மூன்று நாயன்மார்கள் திருவீதி உலா வருவர். இறைவனும் இறைவியும் கண்ணாடி விமானத்தில் எழுந்தருளுவர். இரவு விழாவில் இறைவனும் இறைவியும் வெள்ளித் தேரில் பவனி வருவர். வெள்ளித் தேர் கண்களைக் கவரக் கூடியதாய் உள்ளது. இது சித்திர வேலைப்பாடுகளுடன் காணப்படுகின்றது. இறைவன் உலக வடிவினராகவும், உலகக் கர்த்தராகவும் விளங்குபவர். இவர் ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலக் காரியங்களை நீராக்கித் தாரகாட்சன், கமலாட்சன், வித்துன்மாலி என்னும் மூவர்களையும் தேவர்களையும் ஆட்கொண்டு அருள் புரிந்தார் என்பர். மும்மலக் காரியங்களைக் கெடுத்து மூவகை உயிர்களுக்கும் முக்தி அளித்த தத்துவமே தேர்த்திருவிழாவாகும்.

அரசர் மிக்க வலிமையுடன் வாழவும், வெற்றியோடு விளங்கவும் இவ்விழாக் கொண்டாடுவர்.[100]

## ஏழாம் நாள் விழா

இத்திருவிழாவில் பகல் விழா இல்லை. இரவு விழா மட்டும் உண்டு. இரவில் இறைவனும் இறைவியும் மகாரதத்தில் எழுந்தருளி, உலா வருவர். தேர் வாகனத்தின் தத்தவத்தை முன்னரே குறிப்பிடப்பட்டிருக்கிறது. உலகில் நல்லொழுக்கம் சிறந்த விளங்கவே இவ்விழா கொண்டாடப்படுகிறது.[101]

பங்குனி உத்திரப் பெருவிழாவில் ஏழாம் திருவிழா அன்று காமாட்சி அம்மன் கோயிலில் காமாட்சிக்குத் தெப்பம் தொடங்கி மூன்று நாட்கள் தொடர்ந்து நடைபெறும். இங்குள்ள திருக்குளத்தை உலகாணித் தீர்த்தம் என்பர். இதில் வெள்ளிக் கிழமையில் நீராடினால் நலம் பயக்கும் என்பர்; யாத்திரிகர்கள் தங்கிச் சமையல்

செய்யக் குளத்தைச் சுற்றிப் பல அறைகள் போன்ற அமைப்புகள் காணப்படுகின்றன.

## எட்டாம் நாள் திருவிழா

எட்டாம் நாள் திருவிழாவின் காலையில் முருகர் எடுப்பு இரதத்தில் வருவார். ஏகாம்பர நாதர் இரத்தல் (பிட்சாடன) மூர்த்தியாக[102] பவனி வருவார். இதன் கருத்தாவது முனிவர்களும், முனி பத்தினிகளும், ஆணவ மலத்தால் இறைவரை மறந்தனர். அவர்கள் இறைவனை உணர்வதன் காரணமாகவே சிவபெருமான் பிட்சாடன மூர்த்தியாகச் செல்வார். முனி பத்தினிகள் அவர் அழகினை விரும்பினர்.

இந்த இரு செயல்களாலும் முனிவர்களும் முனிபத்தினிகளும், தாங்கள் தங்கள் அகந்தையை அடக்கி, இறைவனை உணர்ந்தனர். இறைவன் அவர்களை அவ்வாறு உணரும் வண்ணம் செய்து மறைந்தார் என்பர். இரவில் இறைவன் குதிரை வாகனத்தில்[103] மின் விளக்கொளியுடன் வருவார். இறைவன் குதிரை மீது எழுந்தருளுவது சங்காரக் (அழிவு) காட்சியாகும். இறைவன் வேதத்தைக் குதிரையாகக் கொண்டதால், அவர் வேதக் குதிரையர், வேத ரூபர், வேதாதீதர், வேத நாதர் என்ற திருப்பெயர்களைப் பெற்றார் என்பர்.

மக்கள் ஆணவ மலத்தை நீக்கி, வீடு பேற்றினைப் பெறுவதற்காக இவ்விழா கொண்டாடப்படுகிறது.[104]

## ஒன்பதாம் நாள் விழா

இவ்விழாவன்று ஏகாம்பர நாதர் காலையிலே பல்லக்குச் சேவைக் கோலமாக எழுந்தருளுவார். இது மறைத்தல் தொழிலைக் குறிப்பதாகும்.

இரவில் வெள்ளியால் ஆன மாவடியில் சுவாமியும் அம்பிகையும் மிக்க அலங்காரத்துடன் காட்சி அளிப்பர். இறைவனின் இவ்விழாக் கோலத்தைப் படைப்புக் கோலம் என்பர். மரத்தின் இலைகள், நரம்புகள், கிளைகள் போல உலகில் தத்துவங்கள், பிறப்புக்கள், உயிரினங்கள் உள்ளன. மரத்தில் உள்ளவற்றிற்கெல்லாம் வேர் ஆதாரமாக உள்ளது போலக் கடவுளும் உலகத்திற்கு ஆதாரமாக இருக்கிறார் என்பதே அதன் தத்துவமாகும்.

உலகினில் திறனுள்ள தொழில்கள் சிறக்கவே இவ்விழாவினைக் கொண்டாடுகின்றனர்.[105]

## பத்தாம் திருவிழா

இத்திருவிழாவன்று காலையில் சபாநாதர் காட்சி கிடைக்கும். கம்பா நதியில் தீர்த்த விழா[106] நடைபெறும். அம்பிகை ஒக்கப் பிறந் தான் குளம் எழுந்தருளுவாள். காஞ்சிபுரம் ஒக்கப் பிறந்தான் குளத்தி லிருந்து ஏலவார் குழலியம்மை, காமாட்சியம்மை, கருக்கினில் அமர்ந் தவள் ஆகிய மூவரும் திருமணக் கோலம் புனைந்து ஒன்றாகச் சேர்ந்து உலா வருவர்.

இவ்விழாவின் போது கோவிலை ஏலவார் குழலி அம்மை அடைந்ததும் சிவபெருமானது திருநடன பாவனைகள் நடத்துவர். அவர் ஆடியருளும் திருநடனங்கள் பலவாகும். அவற்றுள் முக்கிய மானது கால்மாறி ஆடிய நடனம்,[107] பாண்டரங்கம், கொடுகொட்டி, சந்தியா நிறுத்தம் சண்டைத்தாண்டவம், வீராட்ட காசம், கௌரி தாண் டவம், ஆனந்த நடனம், அனவரத தாண்டவம், பிரதம மகா சங்கார நிருத்தம் (அழிவுக் கூத்து) என்பவையாகும்.

இரவு விழாவில் உத்திர நட்சத்திரத்தில் ஏகாம்பரநாதருக்கும் ஏலவார்குழலி அம்மைக்கும் திருக்கலியாணம் நடக்கும். இறைவன் நித்திய கலியாண வடிவானவன் நமக்கு ஓர் ஆண்டு என்பது தேவர் களுக்கு ஒரு நாள் என்பர். எனவே நாம் ஆண்டுக்கொரு திருக்கலி யாணம் நடத்துவது தினமும் நடத்துவதாகும்.

தினமும் நடத்துவது ஏனெனில் சிவனிடமிருந்து சக்தி, பிரியாது இருந்து அம்மை அப்பராக இன்ப வடிவம் கொண்டு அருள் செய்வத னாலேயே நாம் உய்கின்றோம் என்பர். இதற்கு நாம் நன்றியறிதலைக் காட்டுவதற்காகவே இறைவர்க்கு ஆண்டுதோறும் மக்கள் திருக் கோயிலில் திருமணம் செய்வர்.

மக்கள் தம் மிகுந்த தொண்டினால் ஆதரவும் ஊக்கமும் மிகுந் திடவே மேற்கூறிய கலியாண விழாவைக் கொண்டாடுகின்றனர்.[108]

மறுநாள் விடியற்காலையில் தங்க இடப வாகனத்தில் திருக் கலியாணக் கோலத்தில் ஏகாம்பரநாதரும் ஏலவார்குழலியும் திருவீதி யுலா வருவர்.

ஏலவார்குழலி அம்மையாரின் திருக்கல்யாணத்திற்குப் பிறகு கோதரிசனவிழா (பசுக்காட்சி) நடைபெறும். இதனையும் மக்கள் கண்டு மகிழ்ச்சியடைவர்.

## பதினொன்றாம் திருவிழா

இவ்விழாவன்று காலை கந்தப்பொடி வசந்த விழா நடைபெறும். இதன் தத்துவம் மக்கள் தங்கள் வீடுகளில் வெயிலின் வெப்பம் தாங்காமல் வருந்தும் நேரத்தில், வெளியில் குளிர்ச்சியைத் தரும் படியான ஆற்றோரம், நந்தவனம், தடாகக்கரை முதலிய இடங்களுக் குச் சென்று, வெயில் தணியும் வரை அங்குத் தங்கி யிருந்து பின்னர், வீடு திரும்புவதைக் குறிக்கும்.

இதனுடன் மக்கள் செல்லும் இடங்களுக்கு இறைவனையும் அலங்கரித்து எழுந்தருளச் செய்வர். அவ்விடத்தில் பெருமானுக்குத் திருமுழுக்கு (அபிடேகம்) செய்து, தயிர் சாதத்தைப் (ததியோ தனம்) போன்ற உணவுகளைப் படைத்து, மக்களும் உண்பது வழக் கம். இரவில் இறைவனும் இறைவியும் உருத்திர கோடி விமானத் தில் எழுந்தருளுவர். இறைவன் பரிசேவையைச் செய்வார். இதனை வடமொழியார் 'மிருக யாத்திரை விழா' என்றும் 'சங்கார யாத்திரை' என்றும் கூறுவர்.

பன்றி போன்ற ஆணவ மலமும் மான் போன்ற கன்ம மலமும், பறவை போன்ற மாயா மலமும் ஆன்மாவைச் சார்ந்து நின்று துன்புறுத் துவனவாம். மேற்கூறிய மும்மலங்களை அடக்கிச் சிவபெருமான் சாயுச்சியம் (இறைவனோடு இரண்டறக் கலத்தல்) கொடுப்பதையே இவ்வேட்டைத் திருவிழா குறிக்கிறது.

பொன்னைத் தானமாக வழங்கல் நிமித்தமாகவே இவ்விழா வினை மக்கள் கொண்டாடுகின்றனர்.[109]

## பன்னிரண்டாம் நாள் விழா

இவ்விழாவின் காலையில் இறைவனும் இறைவியும் புருட மிருக வாகனத்தில் எழுந்தருளுவர். அஞ்ஞானத்தை உண்டாக்கும் ஆணவம், கன்மம், மாயை ஆகிய மலங்களை அடக்கிச் சிவபெருமான் சாயுச்சியம் (ஆன்மா கடவுளிடம் ஐக்கியமாகும் நிலை) கொடுப் பதையே வேட்டைத் திருவிழா என்று முன்பே குறிப்பிடப்பட்டிருப் பதால் அறியலாம்.

இரவில் ஏகாம்பர நாதர் தங்க இடபத்திலும், ஏலவார் குழலி வெள்ளி இடபத்திலும், விநாயகர் பெருச்சாளி வாகனத்திலும், முருகர் மயில் வாகனத்திலும், சண்டேசுவரர் வாகனந் தாங்கியிலும் எழுந் தருளுவர். இதனைப் பஞ்ச மூர்த்திகள் விழா என்பர். அன்று கடவு ளர்க்குரிய வாகனங்களைப் பூக்களால் மிக்க அலங்காரம் செய்வர்.

## பதின்மூன்றாம் நாள் விழா

பதின்மூன்றாம் நாள் விழா தீர்த்தவாரி விழாவாகக் கொண்டாடப் படுகிறது.

ஆறு, குளம், கடல் முதலிய இடங்களுக்குச் சிவபெருமானை எழுந்தருளச் செய்வது தீர்த்தவாரி விழா எனப்படும். அதன்படி ஏகாம் பர நாதர் கோவிலின் தீர்த்தவாரி விழாவிற்கு இவர் சர்வ தீர்த்தக் குளக்கரைக்கு எழுந்தருளுகிறார். அங்கே இருக்கின்ற ஆன்மாக் களுக்கு அருள் செய்வதே இவ்விழாவின் நோக்கமாகும்.

சிவபெருமான் தன்னை அடைந்து வணங்குபவர்களின் பிறவி யாகிய வெப்பத்தை நீக்கி முக்தியை அளிப்பர்.

இக்குளத்து நீரில் நீராடிய அடியவர்கள், திருவருள் என்னும் தீர்த்தத்தை அடைந்து, உடம்பிலுள்ள தூய்மையற்ற காற்றை நீக்கிப் புறத்தேயுள்ளத் தூய்மையான காற்றை ஏற்றுக் கொள்வர் என்னும் நியதிக்காக இவ்விழா கொண்டாடப்படுகிறது.

நீரில் அன்பர்கள் நீராடி, இறைனை வழிபட்டால், மும்மலங் களை (ஆணவம், கன்மம், மாயை) நீக்கி, வீடுபேற்றினை அடைவர். இரவில் ஏகாம்பர நாதரும், ஏலவார் குழலியும் யானை வாகனத்தில் எழுந்தருளி உலா வருவர். இவ்விழாவின் தத்துவமாவது இறைவன், ரிக், யசூர், சாமம், அதர்வணம் ஆகிய நான்கு வேதங்களையும் நான்கு கால்களாகப் பெற்ற பரஞானம் என்னும் யானையை உடையவர் என்பதாம்.

பதின்மூன்றாம் நாள் திருவிழா அன்றே திருக்கோயிலில் கொடி யிறக்கம் செய்யும் நிகழ்ச்சி நடைபெறும்.

## பதினான்காம் திருவிழா

இவ்விழாவன்று காலையில் விழா மூர்த்திகளுக்கு 108 கலசா பிடேகமும், 108 சங்காபிடேகமும் செய்வர். வலம்புரி, இடம் புரிச் சங்குகளை இறைவனும், இறைவியுமாகக் கருதிப் பிரதிட்டை (நிலை பெறுத்தல்) செய்வர்.

சங்குகள் ஒவ்வொன்றும் 'ஓம்' 'ஓம்' என்று ஒலித்துக் கொண் டிருக்கும். மக்கள் பல விளக்குகளை ஏற்றி அலங்கரிப்பர். இச்சங்கு அபிடேகத்தைக் கண்டு, இறைவனை வழிபடுகின்றவர்கள் எல்லாப் பேறுகளையும் பெறுவர் என்பர்.

மக்கள் சங்குத் தீர்த்தத்தைப் பெற்று சிறிதளவு உட்கொண்டு, எஞ்சியவற்றைத் தலை மீது தெளித்துக் கொள்வர்.

நம் மூதாதையர்களின் உடம்பையும் உள்ளத்தையும், உள்ளுறையும் பஞ்ச பூதங்களையும், தூய்மையாக்கும் பொருட்டு, மேற்கூறிய சங்கு அபிடேக வழிபாட்டு முறையை வகுத்துள்ளனர்.

மாலை 6 மணிக்கு யானை மேல் பொன் விமானத்தில் திருமுறைத் திருவிழா நடைபெறும். இரவு 8 மணி முதல் மறு நாள் காலை 6 மணி வரை காசி மடம் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமார சுவாமிகளின் அருளாணைப்படி, திருமுறைப் பாராயணம் திருவீதி நான்கிலும் நிகழும். பொது மக்கள் பலரும் இவ்வினிய இசையைக் கேட்டு மகிழ்ச்சியடைவர்.

பங்குனி உத்திரப் பெருவிழாவில் ஓர் அருச்சகர் இவ் விழாவின் தொடக்கத்தில் இருந்து கையில் மஞ்சள் கயிறு (காப்பு) கட்டிக் கொண்டு இருப்பார், விழா முடிந்தவுடன், அந்த அருச்சகரைப் பல்லக்கில் ஏற்றி, நான்கு மாட வீதிகளிலும் வலம் வருவர். இந்த நிகழ்ச்சியைப் 'பட்டணப் பிரவேசம்' என்பர்.

காஞ்சிமா நகரைப் "பலர் தொழ விழவு மேம்பட்ட பழவிறல் மூதூர்"[110] எனப் பெரும்பாணாற்றுப்படை பேசுகிறது. இந்நகரம் கல்வியிலும், சமயத் துறையிலும் பிற நகரங்களை விட உயர்ந்தது என்பது வரலாறு கண்ட உண்மையாகும். புத்தர் காஞ்சியில் அறிவுபதேசம் செய்தார். அவர் இருந்து உபதேசித்த இடங்களில் அசோகன் தூபிகளை அமைத்தான் என்று யுவான் சுவாங்கு என்ற சீன வழிப் போக்கன் கூறியுள்ளான்.[111]

காவிரிப் பூம்பட்டினம், காஞ்சி, வஞ்சி ஆகிய நகரங்களில் பல சமயங்கள் இருந்தன என்று மணி மேகலை கூறுதல் இங்கு நினைக்கத் தகும். எனவே, மதுரையில் பௌத்த, சமண, வைதீக நெறிகள் இருந்தாற் போலக் காஞ்சியிலும் பல சமயங்கள் தொண்டைமான் இளந்திரையன் காலமான சங்க காலத்தில் இருந்திருக்கலாம் என்று கூறுதல் பொருத்தமானதாகும்.

காஞ்சியில் பல சமயத்தார் கோயில்கள் இருந்தன. எனவே காஞ்சியில் அச்சமயத்தார்க்குரிய விழாக்கள் நடைபெற்றன என்பது தானே போதரும்.

செந்தமிழ் நாட்டின் விழாக்கள் அனைத்தின் சிறப்பையும் ஒரு சேரக் கண்டு மகிழுமிடம் காஞ்சித் திருவிழாக்களாகும்.

நாள் விழா, வார விழா, திங்கள் விழா, ஆண்டு விழா ஆகிய பல விழாக்கள் மிகுந்த நகர் காஞ்சிமா நகர். இதனாலன்றோ "விழவறாக் காஞ்சி" என்று மக்கள் சிறப்பாகப் போற்றுகின்றனர்.

காஞ்சி ஏகாம்பர நாதர் கோமில் மேன்மேலும் சிறப்படைவதற் கும், விழாக்களை முறைப்படி ஆன்றோரும், சான்றோரும் போற்றும் படி கொண்டாடுவதற்கும் சமூகத்தினரின் ஒத்துழைப்பு இன்றியமை யாததாகும். இறை வழிபாட்டினால் சமுதாயமும் மேன்மையடை கிறது. எனவே கோமிலும் சமுதாயமும் என்பது பற்றி ஐந்தாம் இய லில் நோக்குவோம்.

**அடிக்குறிப்புகள்**

1. "மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்
சொல்லிய முறையாற் சொல்லவும்படுமே"

தொல்காப்பியர், தொல்காப்பியம், இரண்டாம் பதிப்பு, பாலசுந்தரம். தி.சு., (உரை), (சென்னை: சை.சி. நூ. ப. க. 1954) ப.226.

2. பிள்ளை.கே.கே., தமிழக வரலாறு - மக்களும் பண்பாடும், மு. கா. நூ. ப. 169.

3. "கடவுள் மரத்த முள்மிடை குடம்பை"

அகநானூறு, வேங்கடசாமி நாட்டார். ந., (உரை), மூன்றாம் பதிப்பு, (சென்னை: சை.சி. நூ. ப. க. 1955)

4. திருஞான சம்பந்தர் தேவாரம், மு.கா.நூ. பா.270 வரி 12.

ப.314, 2-ஆம் திருமுறை திருவானைக்கா, பா.11 ப. 245.

5. சேக்கிழார். மு.கா. நூ. பூசலார் நாயனார் புராணம், பா-ள் 9-10, ப. 506.

6. திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரப் பதிகங்கள் (தலமுறை.) பட்டு சாமி ஓதுவார் (உரை.), (திருப்பனந்தாள்: காசிமடம், 1949). ப. 527

7. மேற்படி 5 ஆம் திருமுறை, இரண்டாம் தனிக்குறுந்தொகை,பா-7, பக். 498- 499.

8. கழகத் தமிழ் அகராதி, மு.கா.நூ. ப. 822

9. திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம், மு.கா.நூ., 4-ஆம் திருமுறை, தனித்திரு நேரிசை 3, பா.3 ப.485.

10. "இரண நல்குரவு இரும்பவம் இரும்பசியுரோகம்
அரணுறும் பயங்கிலேசங் கேதமவ மிருத்து
மரணவே தனையிவையெலா மகற்றென வணங்கி
புரண நாதனைப் பிரதோடத்திற் போற்றிடத் தகுமால்."

மகாப் பிரதோட விளக்கம். சம்பந்தனார். க. (தொகு.),(புலிசை: வெற்றிவேல் அச்சகம், 1981) ப. 17.

11. மெய்யப்பன், ச. மதுரை மீனாட்சி, (சிதம்பரம்: மணிவாசகர் பதிப்பகம், 1983), ப. 93.

12. திருமூலர் , திருமந்திரம் குமரகுருபரன் பிள்ளை டி.எம். (பதி.), (ஸ்ரீ காசி மடம்: ஸ்ரீ குமரகுருபரன் சங்கம், 1968) பா. 517, ப. 84.

13. மேற்படி பா. 518, பக். 84-85.

14. சோமசுந்தரனார், பொ.வே. (உரை) பரிபாடல், (சென்னை, சை.சி. நூ. ப. க. சனவரி 1957) பா. 8 வ-ள் 106, ப.118.

15. அருணந்தி சிவாச்சாரியர், சிவஞானசித்தியார் சு பக்கம், மறு பதிப்பு, (சென்னை, சை.சி. நூ. ப. க. 1954) பிரமாணவியல், இரண்டாம் சூத்திரம் பா. 25, ப. 110.

16. திருமூலர், மு.கா. நூ. பா. 1828, ப. 292.

17. சுப்ரபாதம் 14 ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்டதாகும்.

18. தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பெரிய புராணம் ஆகிய நூல்களில் உள்ள பாடல்கள் பஞ்ச புராணப் பாடல்களாகக் கருதப்படுகின்றன.

19. பின்னிணைப்பு - 4.

20. சிங்காரவேலு முதலியார். ஆ., அபிதான சிந்தாமணி, ப. 1591.

பின்னிணைப்பு - 5.

21. சூரியன் சந்திரன் பூமி ஆகிய மூன்றும் ஒரே நேர்க்கோட்டில் வரும் போது சூரியனைச் சந்திரன் மறைப்பதால் சூரிய கிரகணம் ஏற்படும். இது அமாவாசையில் நிகழும்.

சூரியன், பூமி, சந்திரன் ஆகிய மூன்றும் ஒரே நேர்க்கோட்டில் வரும் போது பூமி சூரிய ஒளி சந்திரன் மேல் விழாமல் தடுப்பதால் சந்திர கிரகணம் நிகழும். இது பௌர்ணமியில் வரும்.

22. Guy R. Welbon Religions festivals in South E. Yocum India and Sri Lanka, Manohar, 1982. p.28.

23. பின்னிணைப்பு - 6.

24. சேக்கிழார், மு.கா. நூ. திருக்குறிப்புத் தொண்டர் புராணம் பா.53 வரி - 3, ப. 174

25. மேற்படி பா -ள், 70-71 ப. 176;

Das. R.K., Temples of Tamil Nadu, op. cit., p.223.

26. பின்னிணைப்பு -1.
27. சேக்கிழர், பெரிய புராணம் மு.கா. நூ. திருமலைச் சிறப்பு பா. 34 ப -12
28. மேற்படி, திருக்குறிப்புத் தொண்ட நாயனார் புராணம் பா.66, ப. 175.
29. சிவஞான முனிவர், மு.கா. நூ. திருவேகம்பப் படலம் பா. 88 ப. 584
30. மேற்படி, பா -87, ப.584
31. காஞ்சிப் புராணம், திருவேகம்பப் படலம் பா. 86. ப. 584.
32. மேற்படி, திருவேகம்பப் படலம் பா-ள். 103-120, பக். 587-591.
33. திருஞானசம்பந்தர் தேவாரம், மு.கா.நூ., முதல்திருமுறை பதிகம். 133. பா.1, ப. 649.
34. மேற்படி, முதல் திருமுறை பதிகம் 12, பா. 9, ப. 650.
35. மேற்படி, இரண்டாம் திருமுறை, பா. 1, ப. 651
36. திருநாவுக்கரசர் தேவாரம், மு.கா.நூ.., நான்காம் திருமுறை பதிகம், 99. பா.6. ப.424.
37. "விண்ணாள்வார் அமுதுண்ண மிக்கபெரு விடமுண்ட
கண்ணாளா! கச்சியேகம்பனே! கடையானேன்
எண்ணாத பிழை பொறுத்து இங்கு யான் காண எழிற்பவள
வண்ணா! கண்ணளித் தருள்வாய் என வீழ்ந்து வணங்கினார்"

சேக்கிழார், மு.கா.நூ., ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணம், பா. 286. ப. 427.

38. சுந்தரர் தேவாரம், ஏழாம் திருமுறை, பதிகம் 61, பா.1.
* பின்னிணைப்பு - 7.
39. "பச்சிலை யிடினும் பக்தர்க் கிரங்கி
மெச்சிச் சிவபத வீடருள் பவனை"

பட்டினத்தடிகள், பிரபந்தத்திரட்டு, மு.கா.நூ., கச்சித் திருவகவல், ப. 463.

40. "மூவிரு முகங்கள் போற்றி முகம்பொழி கருணை போற்றி
ஏவரும் துதிக்க நின்றஈர் அறுதோள் போற்றி காஞ்சி
மாவடி வைகும் செல்வேள் மலரடி போற்றி அன்னான்
சேவலும் மயிலும் போற்றி திருக்கைவேல் போற்றி போற்றி"

கச்சியப்பசிவாச்சாரியார், கந்தபுராணம், மு.கா.நூ., சுப்பிரமணியர் காப்பு. பா. 8.

41. இரட்டைப்புலவர்கள் வில்லிபுத்தூராரின் காலத்தவர்கள். வில்லிபுத் தூரார் பதினான்காம் நூற்றாண்டின் இறுதியிலும் பதினைந்தாம் நூற் றாண்டின் தொடக்கத்திலும் வாழ்ந்தவர்கள் சதாசிவபண்டாரத்தார். தி. வை., தமிழ் இலக்கிய வரலாறு அண்ணாமலை நகர், அ.ப. கழகம். 1957. ப. 71.
42. S.I.I. Volume IV, No. 816 (A.R.No74 of 1893).

43. Ibid No.822 (A.R.No. 9 of 1893)

44. Ibid No.817 (A.R.No. 5A of 1893)

45. Ibid No.819 (A.R.No. 6 of 1893)

46. Ibid No.823 (A.R.No. 10 of 1893)

47. Ibid No.350 (A.R.No. 27 of 1890)

48. Ibid No.348 (A.R.No. 25 of 1890)

49. South Indian Temple Inscriptions (S.I.T.I) Vol. IV No. 454.

50. Ibid No.453.

51. S.I.I. Vol.IV No. 818 (A.R.No.58 of 1893)
Ibid No.822 (A.R.No. 9 of 1893)

52. Ibid Vol.IV. No.446.

53. கழகத்தமிழ் அகராதி, மு.கா. நூ., இரண்டாம் பதிப்பு, (சென்னை: சை. சி. நூ.ப.க.1969), ப. 858.

54. S.I.I. Vol.IV. No. 813.

55. சேக்கிழார்., மு. கா. நூ., திருஞானசம்பந்தர், பூம்பாவை, பா. 1087. ப. 381.

56. சீத்தலைச் சாத்தனார், மணிமேகலை, வேங்கடசாமி நாட்டார், ந. மு., மற்று துரைசாமிப் பிள்ளை, சு. ஔவை. (உரை), மறுபதிப்பு (சென்னை, சை.சி. நூ.ப. க.1964) விழாவறைகாதை, வ-ள் 71-73. ப. 14.

57. இவ்விழா பெரும்பாலும் ஆவணி அவிட்டத்தில் நடைபெறும். இதில் நித்திய பவுத்திர விழா, ஆண்டுப் பவுத்திர விழா என இருவகை யுண்டு. அன்றாடக் குறையைப் போக்கிக் கொள்ளச் செய்வது நித் திய பவுத்திர விழா, ஆண்டுக் குறையைப் போக்கச் செய்வது ஆண் டுப் பவுத்திர விழாவாகும்.

58. ஏலவார் குழலி என்ற பெயரை ஏகம்பத்தில் உமையம்மை இறை வனைப் பூசித்த நிலையில் பெற்றாள். ஏலம் என்பது மானுடப் பெண் கள் பூசுகின்ற வாசனைத் திரவியம். வார்குழல் என்பது நீண்ட கூந் தல். கூந்தலில் வாசனைத் திரவியத்தைத் தேய்த் தவளாய் மானுடப் பெண் வடிவம் கொண்டு உமையம்மை இறைவனைப் பூசித்தமை யால் ஏலவார் குழலி என்ற பெயர் பெற்றாள்.

59. திதி, வாரம், நட்சத்திரம், யோகம், கரணம் என்னும் ஐந்து அங்கங் களையும் பற்றிக் கூறுவதால் பஞ்சாங்கம் எனப் பெயர் பெற்றது. பஞ்ச + அங்கம்= பஞ்சாங்கம்.

60. சந்தன அபிடேகம் செய்பவர்கள் சுவர்க்க போகத்தைப் பெறுவர் என்பது நம்பிக்கை.

61. சமய குரவர் நால்வர் திருநட்சத்திரம்:-

"சித்திரைச் சதயம் அப்பர்; சிறந்தவை காசி மூலம்
அத்தரைப் பணிசம் பந்தர்; ஆனி மா மகத்தில் அந்த
முத்தமிழ் வாத வூரர், முதிய நல் ஆடி தன்னில்
சுத்தமாம் சுவாதி நாளில் சுந்தரர் கயிலை சேர்ந்தார்."

62. ஏகாம்பரநாதர், ஏலவார் குழலியம்மை, விநாயகர், முருகர், சண்டேசுவரர்.

63. Kane. P.V., History of Dharmasastra Vol. V. part I, p.339.

63.A. Jagadisa Ayyar . Op. cit. pp 124-134

64. ஆ. சிங்கார வேலு முதலியார், அபிதான சிந்தாமணி மு.கா. நூ. ப. 1440

65. Guy R. Welbon of Glenn.E.Yocum. o.cit. p.64.

66. சிங்காரவேலு முதலியார் , மு.கா. நூ., ப. 983.

67. புலவர் செந்துறை முத்து, திருக்கோவில்களும் வழிபாட்டு முறைகளும், மு.கா.நூ., ப.107.

68. Skanda Sasthi occured in the last day of Aippaci in 1969. Religious festivals in South India and Sri Lanka, p.8.

69. அகநானூறு, மு.கா. நூ. பா. 41, வரி. 141.

70. ஏகாம்பரநாதர், ஏலவார் குழலி, விநாயகர், முருகர், சண்டிகேசுவரர்.

71. சிங்காரவேலு முதலியார்., மு.கா. நூ. ப.415.

72. Natesa Sastri, Hindu feasts, fasts and ceremonies, part—II (Madras: M.E. publishing House,1903) p.119

73. முப்புரம்- திரிபுரம், அவை இருப்பு மதில்; பொன் மதில்; வெள்ளி மதில் என்பன. கழகத் தமிழ் அகராதி, மு.கா. நூ. ப. 774.

74. திருஞான சம்பந்தர் தேவாரம், மு.கா.நூ. மயிலாப்பூர் பதிகம், பா.3. ப. 692 -693.

75. "நலம்மிகு கார்த்திகை, நாட்டவர் இட்ட"

மதுரைக் கண்ணங் கூத்தனார், கார் நாற்பது, பதினெண் கீழ்க் கணக்கு (இரண்டாம் தொகுதி) விசுவநாதன், எஸ். (பதி.) சென்னை; சென்ட்ரல் ஆர்ட் அச்சுக்கூடம், 1959) பா. 26. வரி 1 ப. 402.

76. "கார்த்திகைச் சாற்றில் கழி விளக்குப் போன்றனவே"

பொய்கையார், களவழி நாற்பது, பதினெண்கீழ்க் கணக்கு விசுவ நாதன். எஸ். (பதி.) சென்னை, சென்ட்ரல் ஆர்ட் அச்சுக்கூடம், 1959) பா. 17, வரி .3.ப.413.

77. அகநானூறு, பா. 141, மு.கா.நூ. மணிமிடைபவளம் (வ-ள்) 8-11, ப. 43.

78. ஆசிரியர் நல்லந்துவனார், பரிபாடல், சோமசுந்தரனார், பொ.வே. (உரை) (சென்னை. சை. சி. நூ. ப. க. 1957) பா -11, வரி -78, ப. 182.

79. Kane P.V. History of Dharma Sastra Vol .V. part. I,p.222

80. ஓரம் போகியார், ஐங்குறு நூறு, துரைசாமிப் பிள்ளை, ஔவை. சு., (உரை) மதுரை: சி.எம்.வி. பிரஸ், 1957) மருதத்திணை. பா. 84 ப. 248.

மருதனிளநாகனார் கலித்தொகை, இளவழகனார் (உரை) (சென்னை: சை.சி. நூ.ப.க. 1967) மருதக்கலி, பா. 59ப. 172. ஆசாரியன் நல்லந்துவனார், பரிபாடல் சோமசுந்தரனார், பொ.வே. (உரை) (சென்னை.சை.சி.நூ.ப.க. 1957) பா.11. வரி-81. ப.182.

81. தூணி - நான்கு மரக்கால் அளவு, கழகத் தமிழ் அகராதி ப. 563.

82. பதக்கு - இரண்டு குறுணி கொண்டது மேற்படி ப. 638.

83. குறுணி - எட்டுப்படியளவு
கழகத் தமிழ் அகராதி, மு.கா. நூ. ப. 370.

84. S.I.I. Vol. IV No.813 (A.R.No.1 of 1893)

85. ARSIE, 1919, No.641

86. Ibid ..........No.664

87. Ibid ..........1956 No. 275

88. ARIE 1954-55 No.335

89. சாமம் - யாமம் - இரவு

கழகத் தமிழ் அகராதி, மு.கா. நூ. ப. 799

90. அபிதான சிந்தாமணி, ப. 665.

91. Kane. P.V., op.cit. p.229.

92. Sivaratri:- For all devote persons (especially Siva it is a time reserved for fasting, meditation, confession of sins and worships) of Siva. It is the Zenith of the year in both achronological (Adi month comes immediately after phalguna) and a religious sense.

Guy. R.Welbon & Glenn.E.Yocum,op.cit., p.194

93. Guy R. Welbon & Glenn E.Yocum, op.cit. p.60

94. செந்துறை முத்து, திருக்கோயில்களும் வழிபாட்டு முறைகளும் மு.கா.நூ. ப.80

95. "நீதியர்கிய புதல்வரைப் பெற்றுயர் நிமித்த"

கச்சாலையர், காஞ்சிப் புராணம் (சென்னை; இராசன் அண்டு கோ, 1983) ப.409.

96. கச்சாலையர், காஞ்சிப் புராணம், மு.கா. நூ. திருவிழாச் சருக்கம், பா.1192 ப.409.

97. கச்சாலையர், காஞ்சிப்புராணம், மு.கா. நூ. திருவிழாச் சருக்கம், பா. 1193. ப. 409

98. கடவுள் உருப்பெற்றிருத்தல்: கழகத்தமிழ் அகராதி மு.கா. நூ. ப. 442

99. "வஞ்சமே புரி நிசாசரர் முதலினோர் மாள"

மேற்படி மு.கா.நூ. திருவிழாச் சருக்கம் பா. 1194. ப. 410.

100. "ஏறுழ்வலி பெருங்கிரி யெனும் கரி மிசை யேற்றி"

மேற்படி, திருவிழாச் சருக்கம், பா. 1195 ப. 410.

101. "எழுத்தினத்தினி லுலக நல் லொழுக்கமே யிலக"

மேற்படி.....திருவிழாச் சருக்கம் . பா. 1196 ப. 410

102. பிட்சாடனத் திருக்கோலம் ஆடையின்றி இடக்கரத்தில் பிச்சைப் பாத்திரமும் வலக்கரத்தில் மதருகம் அல்லது மூலமும் தாங்கி, நான்கு திருக்கரங்களுடன் இடக்காலினைத் தரையில் ஊன்றி, வலக்கால் நடப்பதற்கு அறிகுறியாகச் சற்று வளைந்தும், சடா மண்டலம், இடையில் பாம்பு, நெற்றிப்பட்டம், முக்கண், நீலகண்டம் மார்பில் பூணூல் அகியவற்றுடன் விளங்கும். இடக்கரத்தில் பிச்சைப் பாத்திரமாகக் கபாலம (பிரமன் தலையோடு) ஏந்தியிருப்பார். இத் திருக்கோலத்தின் வலப்பக்கத்தில் ஒரு மானும் இடப் பக்கத்தில் ஒரு குறட் பூதமும் இருக்கும்.

103. குதிரை வாகனம் :- அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு பாதங்களையும் ஞானகாண்டம், கரும காண்டம், என்னும் காதுகளையும், பரஞானம், அபரஞானம் என்னும் கண்களையும் விதியாகிய முகத்தையும், விளக்காகிய வாலையும் ஆகமங்கள் என்னும் புறவணிகளையும், அவ்வாகமங்களிலே விளக்கமாகக் கூறும், மந்திரங்களாகிய சதங்கை, கிண்கிணி சிலம்பு என்பவற்றையும், சூரிய சந்திரர்கள் என்னும் குழம்பின் மேலிடத்துள்ள படைப்புக்களையும், பிரணவமாகிய கடிவாளத்தையும், அறுவகைப் புறச்சமயங்களாகிய போர்ப் படைகள் மூலத்தோடு அழியச் செய்யும் வெற்றியையும், பிரமனது முகங்களாகிய இலாயத்தையும், அதன்மேல் சுருதி என்னும் சேணத்தையும் உடைய குற்றமில்லாத வேதங்களையே குதிரையாகச் சிவபெருமான் கொண்டார் என்பது இதன்மூலம் விளங்குகின்றது.

104. "......................................மலத்தை

விண்டு நித்திய வீடுறத் திருவுலா வியந்தார்"

கச்சாலையர், காஞ்சிப்புராணம், மு.கா. நூ. திருவிழாச் சருக்கம். பா. 1197. ப. 410.

105. "நோக்குலாம் புவனித்திறம் வகுத்தனை குலாவ "

மேற்படி திருவிழாச் சருக்கம். பா 1198. ப. 510

106. ஆறு, குளம், முதலிய இடங்களுக்குச் சிவபெருமான் திருவுலா வருவதாகும்.

107. கால்மாறி ஆடியது: மதுரையம்பதியிலே வெள்ளியம்பலத்தில் எழுந்தருளிய இறைவன், விக்கிரம பாண்டிய குமாரனான இராச சேகர வழுதியினது வருத்தம் நீங்க, இடது திருவடியை ஊன்றியும், வலது திருவடியைத் தூக்கியும் கால்மாறி யாடியருளினர்.

108. "முத்த மப்பெருஞ் சேர்வையி னாதர வூக்க
மெத்தி யத்திரு மணத்தினுக் காவன விரித்தார்"

கச்சாலையர், காஞ்சிப் புராணம், திருவிழாச் சருக்கம், மு.கா.நூ. பா. 1199. ப. 411.

109. பூரி தானமோ முதலிய பொற்புறப் புரிந்தாங்கு மேற்படி ப. 411. திருவிழாச் சருக்கம். பா. 1200.

110. பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க் கினியருரையும்
சாமிநாதையர். வே (உரை) ப. 204.
பெரும்பாணாற்றுப்படை அடி 410-411

111. Neela Kanta Sastry, K. Foreign Notices of South India. p.102.

# கோவிலும் சமுதாயமும்

## கோவிலும் சமுதாயமும்

சமுதாயம் என்பது மக்களின் திரள்[1] ஆகும். அதாவது தனி மனிதர் பலர் இணைந்து வாழும் நிலை சமுதாயமாகிறது. தனிப்பட்ட வாழ்வில் இருந்து கூட்டு வாழ்வினை மேற்கொண்ட மனிதன் சிறு ஊர்களை அமைத்துக் கொண்டு வாழ்ந்தான். அந்தக் கூட்டு வாழ்வே பெரு நகர வாழ்வினையும் ஏற்படுத்தியது. அந்தக் கூட்டு வாழ்க்கையில் கோவில் வாழ்க்கை முக்கிய இடம் பெற்றது. கோவில்களின் மூலம் அந்தக் காலத்துச் சமுதாய நிலையையும் தொழில்களையும் நாட்டின் பொருளாதாரத்தையும் தெரிந்து கொள்ளலாம்.

நகரங்களுள் சிறந்ததாகக் கொள்ளப்படும் காஞ்சிமாநகரத்தில், பெரிய காஞ்சிபுரத்தில் அமைந்திருக்கிறது ஏகாம்பரநாதர் கோவில்.

ஏகாம்பரநாதர் கோவிலைச் சுற்றித் தென்கிழக்கே குமர கோட்டம், காமகோட்டம் ஆகிய இரு கோவில்களும், தெற்கே கச்சபேசுவரர் கோவிலும் மேற்கே திரு ஓண காந்தன்றளியும்[2] அமைந்துள்ளன.

காஞ்சிபுரத்தில் மேற்கூறியுள்ள பெரிய கோவில்களைச் சுற்றிப் பெரும்பாலும் சைவ சமயத்தைச் சார்ந்த அந்தணர்களே வாழ்ந்து வந்தனர். இவ்வாறு சைவ சமயத்தைச் சார்ந்த அந்தணர்கள் ஏகாம்பர நாதர், காமாட்சியம்மன், கச்சபேசுவரர் ஆகிய கோயில்களை அடுத்தும், வைணவ அந்தணர்கள் வரதராச பெருமாள், திருவெஃகா, அட்ட புயம் ஆகிய கோயில்களை அடுத்தும் வசித்து வந்துள்ளனர்.

பழைய காலத்தில் குலமுறைப்படி வாழுமிடங்கள் இருந்துள் ளன. இவ்விடங்களே தற்காலத்தில் பலகுல மக்களும் கலந்து வாழு மிடங்களாக மாறிவிட்டன.

காஞ்சிபுரத்தில் கோயிலைச் சுற்றிலும் அந்தணர்களின் இருக்கை இருந்ததற்குச் சான்றாக ஏகாம்பரநாதர் கோயிலையடுத்து, இலிங் கப் பையர் திருவீதி இருப்பதைக் காணலாம்.

காஞ்சிபுரத்தில் அரசகுலப் பெருந் தெருக்களும், ஆயுதங்கள் பயிலும் இடங்களும் இருந்தன என்பதனை இங்குப் பட்டாளத்தெரு, காவலன் தெரு, இராசவீதி, வணிகர் வீதி முதலிய தெருக்கள் இன்றும் இருப்பதால் அறியலாம்.

இங்கு வேளாண்குடிப் பெருஞ்செல்வர் வாழ்விடங்களும் இருந்தன. காஞ்சியில் அரச குமாரர்கள் யானையேற்றம், குதிரை யேற்றம் பயில்வதற்குரிய இடங்கள் இருந்துள்ளன. இதனைக் காஞ்சியில் யானை கட்டித் தெரு என்று ஒரு தெரு இன்றும் உள்ள தால் உணரலாம்.

பல்வேறு தொழில்களைச் செய்பவர்களும் ஏகாம்பரநாதர் கோவிலின் திருப்பணிகளைப் போட்டிப்போட்டுக் கொண்டு சிறப் பாகச் செய்து வந்துள்ளனர்.

காஞ்சிபுரத்தில் கலப்பு மணத்தால் பிறந்த அனுலோமர்[3] பிரதி லோமர் ஆகிய குடிமக்களும் ஏனையோர் போலவே தாங்கள் சாதி குல மரபுக்கேற்றவாறு தொழில்களைச் செய்து வாழும் பகுதிகள் இருந் துள்ளன. அனுலோமர் வகுப்பாருள் ஒரு பகுதியினர் கட்டடவேலை, தேர்வேலை, கோபுரங்கட்டல், மண்டபங்களிலும், கோபுரங்களிலும் சிற்பங்களை அமைத்தல் முதலிய பணிகளைச் செய்துள்ளனர்.

அனுலோமருள் மற்றொரு பகுதியினர் ஆடைகளை நெய்து அரசர்க்கும், அந்தணர்களுக்கும், கடவுளர்க்கும் அளித்து வந்தனர். இவருள் சிலர் இறையிலி[4] யாக நிலங்கள் பெற்று கோயிலுக்கும், மறையவர்களுக்கும் வேண்டிய ஆடைகளை நெய்து வந்துள்ளனர்.

## பிரம்மதேயமும் சதுர்வேதி மங்கலமும்

பொதுவாக அந்தணர்கள் வாழும் கிராமங்கள் பிரம்ம தேசங்கள் என்றும், சதுர்வேதி மங்கலங்கள் என்றும் அழைக்கப்பட்டுள்ளன.

சதுர்வேதி என்றால் நான்கு வேதங்களான ரிக், யசூர், சாமம், அதர்வணம் ஆகியவற்றில் வல்லவன் என்பது பொருள்.[5]

சதுர்வேதி மங்கலம் என்பது சில சிற்றூர்களைத் தன் கண் கொண்டதாகும். தனியூர்கூட, சில சமயங்களில் சதுர்வேதி மங்கலம் என்ற பெயரால் அழைக்கப் பெறுவதும் உண்டு. இதனை இக்காலத் தில் வட்டம் என்றும் கூறலாம். அக்காலச் சமுதாய அமைப்பில் முன்பு கூறியதுபோல் அந்தணர்களுக்கெனத் தனிக் குடியிருப்புகள் இருந்தன. அக்குடியிருப்புகளில் நான்கு வேதங்களிலும் வல்ல அந்தணர்கள் குடியேறினர். இத்தகைய குடியிருப்புகள் நான்கு

வேதங்கள் வல்லவர்களின் குடியிருப்புகளாதலின் சதுர்வேதி மங்கலங்கள் என்று அழைக்கப்பட்டன. இச்சதுர்வேதி மங்கலங்களுக்கு வரிகள் விதிக்கப்படவில்லை.

சமூகத்தில் மேலான நிலையில் இருந்த அந்தணர்களுக்கு அறங்கள் செய்வதைப் புண்ணியமாகக் கருதிய பழங்கால மன்னர்கள், நிலங்களையும் ஊர்களையும் அவ்வவ்விடத்திலுள்ள அந்தணர்களுக்குத் தானமாகத் தந்துள்ளனர். அவ்வாறு அந்தணர்களுக்குத் தானமாக அளிக்கப் பெற்ற வரியில்லாத நிலங்களே இறையிலி[6] என வழங்கப்படுகின்றன.

## பிரமதேயங்கள்

பிரமதேயம், சதுர்வேதி மங்கலம் என்று சொல்லப்படும் அந்தணர் வாழ்விடங்களாகக் குறிப்பிட்டுச் சொல்வதற்குரிய இடங்கள் காஞ்சிபுரத்தில் தற்காலத்தில் இல்லை எனலாம்.

தென்னிந்தியாவில் பிரமதேயம் என்ற கிராமத்தில் உள்ள நிலங்களை அந்தணர்கள் பயிர் செய்தும், மேற்பார்வை செய்தும் வந்துள்ளனர். இக்கிராமம் அந்தணர்கள் மத சம்பந்தமான கிரியைகளையும் விழாக்களையும் கோவிலில் செய்வதற்கு வழங்கப்பட்டதாகும்.

சைவ அந்தணர்கள் ஏகாம்பரநாதர் கோவிலின் அன்றாட நிகழ்ச்சிகளில் தொடர்பு கொண்டிருந்துள்ளனர். இறைவனிடத்தில் இடையறாப் பேரன்பும், தொண்டு செய்யும் மனப்பான்மையும் கொண்டவர்களே, இறைப்பணியில் ஈடுபட்டுள்ளனர்.

## அரசர், அந்தணர் அல்லாதார் பணிகள்

காஞ்சிபுரத்திலுள்ள வேளாளர்கள் நிலங்களைப் பயிர் செய்து வந்தனர். வைசியர்கள் என்ற வணிகப் பெருமக்கள் வாணிபம் செய்து வந்தனர். இவர்கள் கோவிலுக்கு அதிகமான பொருள்களைக் கொடுப்பர். சான்றாகக் காஞ்சிபுரம் ஏகாம்பர நாதர் கோயில் பங்குனி உத்திரப் பெருவிழாவில், இரண்டாம் நாள் பகல் விழாவினைக் காஞ்சிபுரம் மண்டித்தெரு மளிகை வியாபாரிகளும் இரவு விழாவினைப் பெரிய காஞ்சிபுரத்தில் பல சரக்கு மளிகை வியாபாரிகளும் பொறுப்பேற்று நடத்துகின்றனர்.

பொதுவாக ஏகாம்பரநாதர் கோயிலில் தாச நம்பிகளும், மன்றாடிகளும் பணியாற்றியுள்ளனர். தாசநம்பி என்பவர் கோயில் தோட்டங்களிலுள்ள பூக்களைப் பறித்து, மாலைகளாகக் கட்டிக் கோயிலுக்குக் கொடுப்பர்.

மன்றாடி என்னும் இடையர் கோயிலுக்குக் கொடுக்கப்பட்ட மாடுகளை மேய்ப்பதோடு, கோயிலுக்கு வேண்டிய பால், தயிர், நெய், வெண்ணெய் ஆகியவற்றையும் தந்துள்ளனர். மன்றாடிகள் பற்றிய விளக்கம் இவ்வியலில் பின்னர் விளக்கப்பட்டுள்ளது. இவர்கள் போலவே பல தொழில்களைச் செய்யும் பல இனமக்களும் பெரிய காஞ்சிபுரத்தில் வசித்திருந்தனர். அவர்கள் கோயிலுக்குக் கட்டடம் கட்டுதல், தச்சுவேலை, கருமான் வேலை, குடை தயாரித்தல், பாடு தல், நடனமாடுதல் போன்ற தொழில்களைச் செய்துள்ளனர்.

பொதுவாக மக்கள் அனைவரும் கோவில் விழாக்களிலும் மற்றும் பிற நன்னாளிலும் கோவிலில் ஒன்று கூடுவர்; இறை வனுக்கு அன்பு செலுத்தும் வகையில் ஆடியும் பாடியும் மகிழ்ந்தனர். இவ்வுண்மையைச் சைவ சமயப் பெரியோர்களாகிய திருஞான சம்பந் தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் போன்றோர் பாடியுள்ள தேவாரம், திருவாசகம், திருக்கோவையார் ஆகிய நூல்களிலிருந்தும் நாம் நன்கு அறியலாம்.

மாணிக்கவாசகர் தவிர மேற்கூறிய பெரியோர்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகளும், அவர்கள் நாட்டிற்குச் செய்துள்ள நற்சேவைகளும் மிகவும் விளக்கமாகச் சேக்கிழார் தம் பெரியபுராணம்[7] என்னும் நூலில் பாடியிருக்கின்றார்.

### நால்வகை நெறிகள்

கோவிலில் தொண்டு செய்வதற்கு அடிமைநெறி (தாச மார்க் கம்), மைந்த நெறி (சத்புத்திர மார்க்கம்) தோழமை நெறி (சகமார்க் கம்), அறிவு நெறி (ஞானமார்க்கம்) ஆகிய நான்கு நெறிகளை அடியார்கள் மேற்கொண்டுள்ளனர்.

அடிமைநெறி என்பது சிவனைத் தலைவனாகவும், தன்னை அடிமையாகவும் கொண்டு, தொண்டு செய்து முக்தியடைதலாகும். இந்நெறியைப் பின்பற்றுபவர்கள் இறைவனுக்குக் கோயிலில் விளக் கேற்றல், மலர்பறித்து மாலை தொடுத்தல், அலகிடல், மெழுகுதல், மணி அடித்தல் முதலிய தொழில்களைச் செய்வர். நாயன்மார்களுள் இந்நெறியைப் பின்பற்றியவர் திருநாவுக்கரசர்[8] ஆவார்.

மைந்தநெறி என்பது சிவனைத் தந்தையாகவும், அடியவன் தன்னைப் பிள்ளையாகவும் கொண்டு வழிபடுவதாகும். இந்நெறி யைப் பின்பற்றுபவர்கள் சிவனைப் பூசித்தல், தோத்திரப் பாராயணம் செய்தல், போற்றுதல், தியானித்தல், உருவ வழிபாடு செய்தல் முதலிய பணிகளைச் செய்வர்.

இந்நெறியை மேற்கொண்ட திருஞானசம்பந்தர் காஞ்சிபுரத்தில் உள்ள ஏகாம்பரநாதரைப் பாடி வணங்கியுள்ளார்.[9]

அடுத்து தோழமைநெறி என்பது இறைவனை நண்பனாகக் கொண்டு, தொண்டாற்றி முக்தியடையும் வழியாகும். இந்நெறியை மேற்கொண்ட சுந்தரர் ஏகாம்பரநாதரை வழிபட்டுத் தான் இழந்திருந்த இடக்கண் பார்வையைப் பெற்றுள்ளார்.[10]

முக்தி மார்க்கத்தில் சிறந்ததாகிய அறிவு நெறிக்குரிய நெறியினை மாணிக்கவாசகர் மேற்கொண்டிருந்தார் என்பர்.[11]

## கோவிலில் அந்தணர்களின் பணிகள்

சைவ சமய அந்தணர்கள் திருஞானசம்பந்தர் காலத்திற்குப் பின்னர் (கி.பி.ஆறாம் நூற்றாண்டுக்குப் பின்) ஏதாவதொரு கோவிலில் தம் பணிகளைச் செய்து வந்துள்ளனர். அந்தணர்கள் பூசை செய்பவர்களாகவும், கடவுளர் முன் மந்திரங்களை ஓதுபவர்களாகவும், பூசை செய்பவர்களுக்கு உதவியாளராகவும் தண்ணீர் கொண்டு வருபவர்களாகவும் உணவு சமைப்பவர்களாகவும் இருந் துள்ளனர்.

காஞ்சிபுரத்திலிருந்து வெளியிடங்களுக்கு வேலையின் நிமித்தமாகச் சென்றிருக்கும் அந்தணர்கள், கோயிலின் ஆண்டு விழாவில் மகிழ்ச்சியுடன் தொண்டாற்ற வருவர். இதிலிருந்து அவர்களுக்குச் சொந்த ஊரிலுள்ள கடவுள் மீது பற்றுதல் அதிகமாயிருப்பதை அறியலாம்.

கி.பி. ஆறாம் நூற்றாண்டில் காஞ்சிபுரத்திற்குத் திருஞானசம்பந்தர் வந்தபோது ஏகாம்பரநாதரை வணங்கியுள்ளார். பின்னர் ஏகாம்பரநாதர் கோமிலுக்குத் தென்திசைமிலுள்ள திருமேற்றளி நாதரை[12] வணங்கியுள்ளார். திருஞானசம்பந்தருக்கு ஆளுடைய பிள்ளையார் என்ற பெயரும் உண்டு. எனவே அவர் திருமேற்றளி நாதரை வணங்கி வந்ததைச் சுட்டும் பொருட்டே, அப்பகுதிக்கு மக்கள், கோமிலைச் சுற்றியுள்ள இடங்களைப் பிள்ளையார் பாளையம் என்று பெயரிட்டுள்ளனர். மேற்கூறிய திருமேற்றளி நாதரைத் திருநாவுக்கரசரும் வணங்கியுள்ளார்.[13]

தமிழகத்தில் முந்நூற்றுக்கு மேற்பட்ட சிவன் கோமில்களும் நூற்றுக்கு மேற்பட்ட வைணவக் கோமில்களும் தோன்றலாமின. நாயன்மார்கள் சைவசமயத்தையும், ஆழ்வார்கள் வைணவ சமயத்தையும் வளர்ச்சியடையச் செய்தனர்.

ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்விக்கப் பெற்ற வைணவக் கோயில்கள் மக்களால் பெருமையாகப் போற்றப்பட்டன. சான்றாகத் திருமங்கை ஆழ்வாரால் மங்களா சாசனம் செய்யப்பட்ட பெருமாள் ஏகாம்பரநாதர் கோவிலில் எழுந்தருளியுள்ளார். அப்பெருமாளின் பெயர் நிலாத்துண்டப் பெருமாள் என்பதாகும். இவ்வாறே பல சிவாலயங்களில் பெருமாள் எழுந்தருளியுள்ளார்.[14]

அந்தணர்கள் கல்வியைக் கற்றிருப்பதாலும், சீரிய ஒழுக்க நெறியைப் பின்பற்றி வருவதாலும், மதசம்பந்தமான வாழ்க்கையை மேற்கொண்டதனாலும், சமூகத்தில் மிகுந்த மரியாதைக்குரியவர்களாக விளங்கியுள்ளனர். ஆகவே, அந்தணர்களே கோவிற் பணிகளைச் செய்து வருதலைச் சமுதாயம் ஏற்றுக் கொண்டுள்ளது.

## கோவிலில் அரசர்களின் பணிகள்

நாடாளும் மன்னர்கள் காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோயிலுக்குத் தானமளித்துள்ளார்கள். அத்தானங்களுள் சிறந்தவற்றை நோக்குவோம்.

முதல் குலோத்துங்க சோழன் (கி.பி.1113) இராஜகுரு என்பவரின் வேண்டுதலின் பேரில் இராசேந்திர சோழர்சருப்பேடி மங்கலத்தையும், வேறு இரண்டு ஊர்களையும் அக்கிரகாரமாக்கி (அந்தணர்கள் சேர்ந்து வாழுமிடம்) அவற்றை வரியின்றி 108 சதுர்வேதி பட்டர்களுக்குப் பிரம்மதேயமாக அளித்துள்ளான்.[15] இந்த நன்கொடை வருவாய்த் துறைப் பதிவேட்டில் பதிவு செய்யப் பட்டுள்ளது.

பிரம்மதேயத்தில் அந்தணர்களே நிலங்களை அனுபவித்து வந்தனர். பிரம்மதேய கிராமங்களில் ஏகபோகம், கணபோகம் என்ற இரு வகை உரிமைகள் இருந்தன.

ஓர் அந்தணப் பெருமகனே பிரம்மதேயமாகப் பெற்று இறையிலி[16] உரிமையுடன் அனுபவித்து வந்தால், அவ்வூர் ஏக போகப் பிரம்ம தேயம் என்று கூறப்பட்டுள்ளது. சில கிராமங்களில் உள்ள நிலங்கள் அந்தணர்கள் எல்லோருக்கும் உரிமையாக இருந்தால் அதற்குக் "கணபோகம்" என்ற பெயர் வழங்கப்பட்டுள்ளது.

இரண்டாம் குலோத்துங்க சோழன் (கி.பி.1134) ஆட்சி நாள் 73-இல் இறையிலியிட்ட புதுப்பாக்கத்தில் சதுர்வேதி மங்கலம் நீக்கி இருபூவிளை நிலம் 69, ஒரு பூவிளை நிலம் 124½ தானமளித்துள்ளார்.[17] இதிலிருந்து நிலங்கள் கோயிலுக்கு நன்கொடையாக அளிக்கப்பட்டாலும், அந்த நாட்டிலுள்ள பிரம்மதேயத்தைச் சார்ந்த நிலங்களைத் தவிர்த்து விட்டே நன்கொடை அளித்திருக்கிறார்கள் என்பது தெரிகிறது.

கி.பி.1147இல் சாருக்கி நாராயணன், மனுமசித்தரசன் ஆகியோர் கோமிலுக்குப் பொன்மெந்த கம்பன் வளாகம் குழி ஆமிரத்தைத் தானமாக வழங்கியிருக்கிறார்கள்.[18] இதில் குழி என்பது பன்னீரடி சதுரக்குழியைக் குறிக்கும்.[19] அடுத்து, பெரிய நாட்டாரால் கி.பி. 13ஆம் நூற்றாண்டில் ஈசான தேவர் மடம் கோமிலுக்குத் தானம் செய்யப்பட்டுள்ளது.[20] இத்துடன் ஆமிரக்கால் மண்டபத்திலுள்ள தூண்கள் பதினைந்தில் இதே நூற்றாண்டிலேயே கோமிலுக்கு நன்கொடையளித்தவர்களின் பெயர்கள் பொறிக்கப்பட்டுள்ளன.[21]

சோழ அரசர்கள் நிலங்களையும் ஊர்களையும் கோமிலுக்குத் தானமளித்ததோடு பொன்னாலாகிய பொருள்களையும் தானமளித்துள்ளனர். சான்றாக மூன்றாம் குலோத்துங்க சோழன் (கி.பி.1216) மதுரையைப் பிடித்த மகிழ்வில் கோமிலுக்குப் பொன்னாலாகிய புட்பத்தைத் தானமாக வழங்கியுள்ளான் என்று ஒரு கல்வெட்டு குறிப்பிடுகிறது.[22]

இதுதவிர நிலங்களின் விலைக்காக மக்கள் பொன்னையும் கோமிலுக்குத் தானமாக அளித்துள்ளனர் என ஒரு கல்வெட்டில் எழுதப்பட்டிருக்கிறது. எடுத்துக்காட்டாகக் கோமிலுக்குச் சூரியதேவ ஆச்சானி, அன்புடையாச்சானி, சூரிய தேவாச்சானி ஆகிய மூவரும் நஞ்சை, புஞ்சை, நத்தம்[23] ஏரிகால், பயம் (குளம்) மாவடை,[24] மாவடைக் கிணறு ஆகியவற்றின் வரிக்காக ஆறு பொன்னும், விலைக்காக 300 பொன்னும் தானமாக வழங்கியுள்ளார்கள். இத்தானம் காஞ்சிபுரம் எப்பொழுதும் வாடாக் கடமைக்காகவும், சூலவரிக்காகவும் அளிக்கப்பட்டது.[25] இவற்றுள் வாடாக்கடமையென்பது நிரந்தரமாக அளிக்கப்படும் வரியாகவும் குலவரியென்பது சிவன் கோவிலைப் பராமரிப்பதற்காகக் கொடுக்கப்படும் வரியாகவும் கொள்வர். இத்துடன் நிலத்துக்குரிய எல்லைகளும் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளன. இதேபோல் இரண்டாம் ஜடாவர்ம சுந்தரபாண்டியன் இரண்டு வேலி நிலங்களைக் கோவிலுக்குத் தானமளித்துள்ளதாகவும் தெரியவருகின்றது.[26]

அடுத்து இராஜ நாராயணன் என்ற அரசன் கோவிலுக்கு ஒரு துலாபார மண்டபத்தைக் கட்டியுள்ளதாகவும், அங்குப் பணியாற்றும் வேலையாட்கள் கடைப்பிடிக்க வேண்டிய ஒழுக்க விதிகள் பற்றியும் ஒரு கல்வெட்டில் காணப்படுகிறது.[27] இதே மன்னன் கோமிலுக்கு ஒரு தேர் அளித்த செய்தியைப் பிறிதொரு கல்வெட்டில் காண முடிகிறது.[28] இவ்வாறு சோழ அரசர்கள் காலத்தில் (கி.பி.10 முதல் 13ஆம் நூற்றாண்டு) இந்துக் கோமில்களுக்கு அளிக்கப்பட்டவை தேவதானம் என்றும் திருவிடையாட்டம் என்றும் பெயர் பெற்றுள்ளன.

தமிழ் நாட்டில் சமணக் கோயில்களுக்கு அளிக்கப்பட்ட நிலத் தானம் பள்ளிச் சந்தம் என்றும், அந்தணர்களுக்கு அளிக்கப்பட்ட நிலம் பிரம்மதேயம் என்றும், மடங்களுக்கு அளிக்கப்பட்ட நிலம் மடப் புறம் என்றும் புலவர்க்கு அளிக்கப்பட்ட நிலம் 'புலவர் முற்றூட்டு' எனவும் பெயர் பெற்றுள்ளன.

மேற்கூறியவைகளிலிருந்து அரசர்கள் கோயிலுக்கு நிலங்களை யும் பொருள்களையும், மடங்களையும் தானமளித்திருக்கிறார்கள் என அறியப்படுகிறது. அடுத்துச் சமுதாயத்திலிருந்து கோவிற் பணி புரிவோருக்கும் கோவிலுக்குமுள்ள தொடர்பு நோக்கப்படுகின்றது.

காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவிலில் பணியாற்றுபவர்களை வெவ்வேறு பெயர்களால் அழைப்பர். அவர்களுள் முக்கியமானவர் களாகப் பரிசாரகர், திருப்பள்ளித் தாமம் தொடுப்பார், மன்றாடிகள், தேவரடியார் முதலியோரைக் கொள்ளலாம்.

### பரிசாரகர்

கோவிலுக்கு ஏவல் தொழில்களைச் செய்பவர் பரிசாரகர் என்று அழைக்கப்படுவர். இவர்கள் சமையல் தொழிலிலும் சிறந்து விளங் குவர். கோவிலுக்கு வேண்டிய உணவுகளை இவர்களே தயாரிப்பர்.

### திருப்பள்ளித் தாமம் தொடுப்பார்

இவர்கள் கோவிலில் நடராசர் நந்தவனத்தில் உள்ள பூக்களைப் பறித்து மாலைகளாகக் கட்டிக் கோயிலுக்கு அளிப்பர். இத்துடன் இவர்கள் கடவுளர்க்குரிய வில்வ இலைகளைத் தினந்தோறும் கொண்டு வருவதுடன், தங்கள் வாழ்நாளை இறைவனுக்காகவே அர்ப்பணித்துக் கொள்வர்.

### மன்றாடிகள்

இறைவனுக்கு அன்றாடம் பூசைக்கு வேண்டிய பால், தயிர் முதலியவற்றை அளிப்பவர்கள் மன்றாடிகள் எனப்படும் இடையர் களேயாவர். இவர்கள் கோவிலுக்குரிய மாடுகளை மேய்ப்பர். இவர் கள் தங்கியிருந்த இடத்திற்கு ஆயர்பாடி என்ற பெயர். 'ஆயர்' என் றால் இடையர் என்றும், 'பாடி' என்றால் ஊர் என்றும் பொருள் கொள்ளலாம்.

முற்காலத்தில் கோவிலில் நந்தா விளக்கு எரிய மாடுகளைக் கொடுத்த விவரம் நான்காம் இயலில் விளக்கப்பட்டிருக்கிறது. மாடுகள் மேய்க்கும் இடையர்களைக் 'கோனார்' என்றும் 'மன்றாடிகள்' என்றும் அழைப்பதுண்டு. மன்றாடிகள் கோவிலில் நந்தாவிளக்கு

எரிவதற்கான நெய்யினைத் தருவர். எனவே இவர்கள் 'கோவில் விளக்கு மன்றாடிகள்' என்றும் பெயரினைப் பெற்றிருந்தனர். இவர்கள் கோவிலுக்குக் கொடுக்கின்ற நெய்யினை அளக்கத் திருவேகம்ப நாழி[29] என்னும் அளவுக் கருவி பயன்படுத்தப்பட்டது.

மன்றாடிகள் மாடுகளை மேய்த்ததோடு, மாடுகளை இன விருத்தி செய்யவும் பாடுபட்டுள்ளனர். இவர்கள் முற்காலத்தில் திரு வேகம்பக் கோன், மலையக்கோன், சந்திரக்கோன் என்ற பெயர்களை வைத்திருந்துள்ளனர். கோன்[30] என்றால் இடையன் என்பதும் பொருள்.

## பெண்கள்

மேற்கூறிய மக்கள் தவிரப் பெண்களும் கோவிலில் குறிப்பிட் டளவு தொண்டாற்றியுள்ளனர். தென்னிந்தியாவில் பெண்கள் பொது வாக வீட்டு வேலைகளையே செய்து வந்துள்ளனர். மத சம்பந்தமான சடங்குகளைச் செய்யும் போது அந்தணப் பெண்கள் கணவனோடு பங்கேற்றிருந்தனர். எனினும் வேதங்களைப் பெண்கள் கற்கவில்லை. அப் பெண்கள் வேதங்களைத் தவிர புராணங்களையும், காவியங் களையும் கற்றிருந்தனர்.

தமிழ் நாட்டில், வைணவச் சமயத்தைச் சார்ந்த பெண்கள் நாலா யிரத்திவ்வியப்பிரபந்தப் பாக்களைக் கற்பதில் ஆர்வமாக இருந்துள் ளனர்; சைவப்பெண்கள் தேவாரம், திருவாசகம், திருப்பள்ளியெழுச்சி, திருப்புகழ் ஆகிய நூல்களில் உள்ள பாடல்களையே கற்க விரும் பினர். பல பெண்கள் இறைவனை வணங்கும் பாடல்களை மனப் பாடம் செய்திருந்தனர்.

பெண்கள் கூட்டமாகச் சேர்ந்து கோவில் தொண்டுகளைச் செய் வர். இவர்கள் கோவிலில் கோலம் போடுதல், தூய்மை செய்தல், சமைத்த பாத்திரங்களைத் துப்புர வாக்குதல், நெல் குற்றல், காய் கறிகளை நறுக்குதல் முதலிய பணிகளைக் காசுகள் பெற்றும், பெறா மலும் செய்துள்ளனர்.

பெண்களும் ஏகாம்பரநாதர் கோயிலுக்குப் பலவகை தானங் களைச் செய்துள்ளனர். சான்றாக, கி.பி.1365ஆம் ஆண்டில் கம்பண உடையார் மனைவி இராமாதேவி அம்மையார் என்பவர் கோயிலுக் குத் தேவதானமாக (கோயிலுக்கு விடப்பட்ட இறையிலி நிலம்) ஊற்றுக் காட்டுக் கோட்டத்து ஏகாம்பரநாத நல்லூரி, எயிற் கோட்டத் துக் காரையூர், திருவாய்ப்பாடி ஆகிய மூன்று ஊர்களைக் கொடுத் துள்ளார்.[31] இவற்றுடன் இராமாதேவி அவ்வையார், தன் பெயரால் கோவிலுக்குச் சிங்காரத் தோப்பு ஒன்றும் அளித்துள்ளார். இக்கல்

வெட்டு ஏகாம்பரநாதர் கோமிலில் நாயகர் மண்டபத்தின் தென்புறச் சுவரில் உள்ளது. பெண்களுள், இறைவன் முன் நடனமாடும் தேவரடியரார் என்பவர்களும், முற்காலத்தில் இருந்துள்ளனர்.

## தேவரடியார்

தென்னிந்தியாவில் காஞ்சிபுரத்தில் ஏகாம்பர நாதர் கோமிலில் தேவரடியார்கள் இருந்ததை ஒரு கல்வெட்டு குறிப்பிடுகிறது. இவர்கள் மக்கள் தேவதாசிகள் என்று அழைத்துள்ளனர். தேவரடியார்கள் பாட்டுக்கள் பாடுவதிலும், நடனமாடுவதிலும் வல்லவர்களாக இருந்துள்ளனர். இவர்கள் கோமிலில் குறித்த நேரத்தில் கடவுளின் முன்னிலையில் பாடுவதையும், நடனமாடு வதையும் மேற்கொள்வர். விழாக் காலங்களில் கடவுளர் ஊர்வலமாக வரும்போது, இவர்களும் உடன் வருவர். இவர்கள் மத சம்பந்தமான காரியங்களில் பொதுமக்களோடு தொடர்பு கொள்வர்.

தேவரடியார்கள் எப்பொழுது ஏகாம்பரநாதர் கோமிலில் நியமனம் பெற்றார்கள் என்று அறிய இயலவில்லை. ஆயினும் கி.பி.1558 ஆம் ஆண்டிலிருந்து, இவர்களைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.[32] இவர்களுக்குக் கோமிலில் படைக்கும் திருவமுதில் பங்குண்டு.[33] ஏகாம்பர நாதர் கோமிலில் கோனூர் தேவரடியார்களைப் பாராட்டி ஐந்து கழஞ்சு பொன்னும், சட்டிச் சோறு ஐந்தும் கொடுக்கப்பட்டதற்கான விவரம் கல்வெட்டொன்றில் காணப்படுகிறது.[34] தனவந்தர்கள் தங்களுடைய மகள்களைக் கடவுளுக்குத் தொண்டு செய்ய அர்ப்பணித்துள்ளனர்.[35] இவ்வாறு அர்ப்பணம் செய்த பெண்கள் திருமணம் செய்து கொள்வதில்லை. இவர்கள் கடவுளர்களுக்கு முன்பு திருவிளக்கு ஏந்தி வந்துள்ளனர். இவர்களே தேவரடியார் என்ற பெயரினைப் பெற்றுள்னர்.

தேவரடியார்கள் கோமில் நிலங்களை அனுபவித்ததுடன் ஊதியங்களைப் பணமாகவும், பொருளாகவும் பெற்றுக் கொண்டுள்ளனர். இவர்கள் பரம்பரையாகப் பாட்டுகளிலும், நடனக் கலையிலும் சிறந்து விளங்கியுள்ளனர். இவர்கள் பலவகையான கூத்துகளை நிகழ்த்தியுள்ளனர். அக்காலத்தில் நடைபெற்று வந்த கூத்து வகைகளில் சாந்திக்கூத்து, சாக்கைக் கூத்து, தெருக்கூத்து, ஆரியக் கூத்து எனச் சில வகைகள் இருந்துள்ளன. சில கூத்துகளில் பெண்களுடன் ஆண்களும் கலந்து கொள்வர். கூத்தாடுபவர்களைக் "கூத்தப் பெருமக்கள்"[36] என அழைப்பர். கோமில்களிலும் மடங்களிலும் கூத்துகள் நிகழ்ந்துள்ளன. கோமில்களில் மார்கழி மாதந்தோறும் திருவெம்பாவை ஓதப்பட்டது. இதற்காகவே சில தேவரடியார்கள்

இருந்தனர். தேவாரத் திருப்பதிகங்களை இவர்கள் பாடுவதற்குப் பல நிவந்தங்கள் அளிக்கப்பட்டுள்ளன. தேவாரம் பாடிய ஓதுவார்கள் "திருப்பாட்டு ஓதும் மாகேசுவரர்" என்று அழைக்கப்பட்டனர்.

இவ்வாறு தேவரடியார்கள் போன்று பல்வேறு கலைஞர்களும் கோவிலில் தொண்டாற்றியுள்ளனர்.

## கலைஞர்கள்

காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோயிலில் தேவாரம், திருவாசகம், திருப்புகழ் முதலிய நூல்களில் உள்ள பாக்களைப் பாடுவதற்குப் பாடகர்கள் இருந்துள்ளனர். தற்சமயம் இக்கோயிலில் மா. சம்பந்தம் என்பவர் பாடகராக இருக்கின்றார். இவர் நாள்தோறும் சிவமூர்த்தி யின் எதிரில் பாடுவார்.

நாதசுவரத்தில் தேர்ச்சி பெற்றவர்கள் முற்காலந்தொட்டுத் தற்காலம் வரை, கோயிலுக்கு இன்றியமையாதவர்களாக இருக்கின் றனர். இவர்களின் தொண்டு, கோயிலில் காலையிலும் மாலையிலும் சிறந்து விளங்குவதைக் காணலாம்.

கோயிலில் அவ்வப்போது வண்ணந் தீட்டுவோரும், சிற்பங்களைச் செதுக்கும் சிற்பிகளும் (ஸ்தபதிகளும்) துணி வெளுப்பவர்களும், தட்டார்களும் கருமான்களும் பணியாற்றினர். இவர்களைப் பற்றியும் இவர்கள் கடமைகள் பற்றியும் விரிவாக விளக்கப்பட்டுள்ளது.

ஏகாம்பரநாதர் கோயிலின் பக்கத்தில் கபாலிகள் மடம் ஒன்று இருந்துள்ளது. இம்மடத்தைப் பற்றிய செய்திகளை மகேந்திர வர்ம பல்லவன் எழுதியுள்ள மத்த விலாசப் பிரகசனத்தால் அறிந்து கொள்ளலாம்.

மத்த விலாசப் பிரகசனம் என்பது ஒரு நாடக நூல். இந்நாடகத் தினால் ஏகாம்பர நாதர் கோயிலுக்குச் சிறப்புத் தோன்றவில்லை எனலாம். இதற்கு முக்கிய காரணம் கபாலமும் (மண்டை ஓடும்) கையுமாக ஒருவன் அந்நாடகத்தில் வருகின்றான். அவனுடைய மதம் கபாலிக சைவம் அவன் பிச்சை எடுத்துச் சாப்பிடுபவனாக இருந்துள் ளான். அவ்வப்போது அவன் கள் குடிக்கிற பழக்கமும் உண்டு.

ஒரு நாள் அவன், தன் மனைவியோடு வீதி வழியே சென்றுள் ளான். அவ்வாறு அவன் செல்லும் போது காஞ்சி தேவி (காமாட்சி) கள்ளை விரும்புகிறாள் என்று குறிப்பிட்டுள்ளான். அவன் இறைவன் திருப்பெயரான நமச்சிவாயத்தை உச்சரித்துக் கொண்டிருப்பான். அவன் தனக்கு கள், பக்தி, ஞானம் ஆகியவை வேண்டும் என்று

இறைவனை வேண்டுவான். அவன் மேற்கூறிய வற்றால் பெறுகின்ற சிற்றின்பத்தைப் பேரின்பமாகக் கொள்கின்றான்.[37]

இக்கபாலிகனது போக்கைக் கண்டித்ததோடு, அக்காலத்தில் மக்களுக்கு மெய்யறிவு புகட்டியவர்கள் திருஞான சம்பந்தரும், திரு நாவுக்கரசரும் ஆவர். ஏகாம்பரநாதர் கோயிலுக்குத் தானமாக அளிக் கப்பட்ட சுந்தர மடம்[38] ஈசான தேவர் மடம்[39] ஆகியவற்றில் இசைப் பாடல்களைக் கற்க விரும்புகின்றவர்கள் தங்கித் தேர்ச்சி பெற்றுள் ளனர். சான்றாகக் காஞ்சிபுரத்தில் திரு. நயினாப்பிள்ளை அவர்கள் கோயிலில் உள்ள மடத்திலேயே தங்கி, மிகச் சிறந்த இசை வல்லுந ராகத் திகழ்ந்துள்ளதைக் கூறலாம்.

தேவாரம், திருவாசகம், திருப்புகழ், பெரியபுராணம், கந்த புரா ணம் ஆகிய நூல்களில் உள்ள பாடல்களைப் பொது மக்கள் கேட் பதற்குரிய இடமாக ஏகாம்பர நாதர் கோயில் விளங்கியுள்ளது.

வடமொழி கற்பதற்குரிய வேதப் பாடசாலை ஒன்று ஏகாம்பர நாதர் கோயிலுக்கு உரித்தாக இருந்துள்ளது. கி.பி.1930ஆம் ஆண் டிற்குப் பின்னர் வடமொழியைக் கற்பதற்கு யாரும் முன் வரவில்லை. எனவே அக்கட்டடத்தில் தற்காலத்தில் காஞ்சிபுரம் நகராட்சிப் பள்ளி, இயங்கி வருகிறது. இதற்கான வாடகையைக் கோயிலுக்கு நக ராட்சியார் கொடுத்து விடுகிறார்கள்.

இவ்வாறு கலை வளர்ச்சிக்கு உறுதுணையாக இருக்கும் ஏகாம்பர நாதர் கோயில், ஏழைகளுக்கும் பயனுடையதாய் விளங்கு கின்றது.

## ஏகாம்பர நாதர் கோயில் ஏழைகளுக்குப் புகலிடம்

ஏழை மக்களுக்கு உணவளிக்க ஏகாம்பர நாதர் கோயில் சிறந்த இடமாகப் பல்லாண்டுகளாக விளங்கி வருகிறது. திருவிழாக் காலங் களிலும், திருமணக் காலங்களிலும் இக்கோயில் மக்களுக்குப் புக லிடமாக இருந்துள்ளது. தென்னிந்தியாவில் உணவு அளிக்கும் சத் திரங்கள் விசய நகர அரசர்கள் காலத்திலிருந்துதான் ஏற்பட்டன என்று அறியப்படுகிறது. அதற்கு முன்பு ஏகாம்பர நாதர் கோயில் போன்ற கோவில்களே மக்களுக்குப் பொதுவிடங்களாக இருந்து வந்துள்ளன.

கி.பி.1725ஆம் ஆண்டில் ஏகாம்பர நாதர் கோயிலிலுள்ள ஆயிரக்கால் மண்டபத்தைத் "கைக் கோளர் சாவடி" என்று இரா. நாக சாமி தாம் பதித்துள்ள செங்கை மாவட்ட வரலாற்றுக் கருத்தரங்கு என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார்.[40]

கைக்கோளர்களின் தொழில் நெசவுத் தொழிலாகும். இதனால் ஏகாம்பர நாதர் கோயிலில் உள்ள ஆயிரக்கால் மண்டபம் நெசவுத் தொழிலுக்கும், அத்தொழில் செய்து வந்தவர்களுக்கும் மிகவும் பயன்பட்டிருக்க வேண்டும் என்பது தெளிவு. கைக்கோளர்களைச் செங்குந்தர் என்றும் அழைப்பர்.

பண்டைக் காலத்திலிருந்து நெசவுத் தொழில் என்ற தறித் தொழிலைச் செய்து வரும் கைக்கோளர் கோயம்புத்தூர், சேலம், திருச்சி மாவட்டத்திலுள்ள கரூர் முதலிய இடங்களில் வசித்து வருகின் றனர். காஞ்சிபுரம் கைக்கோளர்களின் தலைமை இடமாக விளங்கி யுள்ளது. எனவே இத்தலைமை இடத்திலிருந்து, தன் சமுதாயத்தை ஆள்பவன் "மகாநாட்டான்" என அழைக்கப்பட்டான். காஞ்சிபுரம் கைக்ககோளர்களுக்குப் பெரிய நாடாக விளங்கியுள்ளது. கி.பி. 1780ஆம் ஆண்டில் இரண்டாவது கைசூர்ப் போர் ஏற்பட்டபோது, ஆங்கிலேயர் ஏகாம்பரநாதர் கோயிலைக் கோட்டையாகப் பயன் படுத்தியுள்ளனர். இப்போர் ஐதர் காலத்தில் நடந்துள்ளது. ஐதர் காலத்தில் எறியப்பட்ட குண்டுகளின் வடுவை, ஏகாம்பரநாதர் கோயி லின் இராச கோபுரத்தில் இன்றும் காணலாம்[41].

ஐதர் இலிங்கம் என்ற பெயரில் ஏகாம்பர நாதர் கோயிலில் ஒரு இலிங்கம் உள்ளது. இந்த இலிங்கம் ஐதரை ஏமாற்றுவதற்குச் செய்யப்பட்ட இலிங்கம் ஆகும். அதாவது ஐதர் மூல இலிங்கத்தைப் பழுது செய்யக்கூடும் என்று கருதி, மக்கள் ஒரு புதிய இலிங் கத்தைக் கோயிலுக்கு முன் வைத்தனர். பின்னர் இந்த இலிங்கத் தைச் சுற்றிலும் சுவர்களை எழுப்பினர். அதுவே மூல இலிங்கம் போல ஐதருக்குக் காட்டப்பட்டது என்பர். இவர் காஞ்சிபுரத்தில் படையெடுத்தார் என்பதற்கு அடையாளமாக ஐதர் பட்டறைத் தெரு என்று ஒன்று இன்றும் உள்ளதை அறியலாம்.

ஏகாம்பர நாதர் கோயிலில் நடைபெறும் பெரிய திருவிழாவின் பங்குனி உத்திர நாளில் இறைவனுக்கும், இறைவிக்கும் திருமணம் நடக்கும். அவ்விடத்தில் அந்நேரத்திலேயே மக்களும், அன்பு வயப்பட்ட காதலர்களும் திருமணம் செய்து கொள்கின்றனர். இத் திருமணங்கள் சட்டப்படி யாவராலும் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன.

எதிர்பாராத நிலையில் வெள்ளம் வரும் போதும், ஏழை மக்கள் இருக்க இடமின்றி வருந்துகின்ற போதும் ஏகாம்பர நாதர் கோயிலில் உள்ள ஆயிரக்கால் மண்டபம் பேருதவியாய் அன்றும் இன்றும் இருந்து வருகின்றது.

பாமர மக்கள் ஆபத்தான சமயங்களில் தங்கள் மாடுகளை ஆயிரக்கால் மண்டபத்தில் கட்டிவிடுவர். சில நாட்கள் சென்றதும் அவரவர் தங்கள் இல்லங்களுக்கு மாடுகளை ஓட்டிச் செல்வர்.

இவ்வாறு ஏகாம்பர நாதர் கோயில் ஏழ்மையான மக்களுக்கும் உறுதுணையாக இருந்து வருகிறது. இவ்வாறு சமுதாயத்தால் ஏகாம்பரநாதர் கோவிலும் ஏகாம்பர நாதர் கோவிலால் சமுதாயமும் ஒன்றுக்கொன்று உறுதுணையாய் விளங்கி வருகின்றன. கோவில் பற்றிய தகவல்களைக் கூறியவர்களின் பட்டியலைப் பின்னிணைப்பு பத்தில் காணலாம்.

## வலங்கை இடங்கைக் குலங்கள்

சோழர் காலத்தில் (கி.பி. 10 முதல் 11 ஆம் நூற்றாண்டு) ஓங்கி வளர்ந்த குலவேறுபாடுகளில் மிகவும் தீய விளைவுகளுக்கு உட்பட்டிருந்தது வலங்கை, இடங்கை என்னும் பிரிவாகும். இப் பிரிவுகள் சோழப் பேரரசர்கள் காலத்திற்கு முன் தோன்றி, விசய நகர மன்னர்கள் காலத்திலும் தொடர்ந்திருந்தது. ஆனால் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வலங்கை, இடங்கை வேறுபாடுகள் மறைந்து விட்டன. முதலில் கரிகாற் சோழனே வலங்கை இடங்கைப் பிரிவுகளைத் தோற்றுவித்தான் என்று அறியப்படுகிறது.[42]

இம்மன்னனிடத்தில் இரு கட்சியினர் தமக்குள் ஏற்பட்ட பூசல் களைப் பற்றி முறையிடும்போது, ஒரு கட்சி மன்னனின் வலப் புறத் திலும், மற்றொரு கட்சி இடப்புறத்திலும் நிற்பதுண்டு. மன்னனின் வலப்புறம் நின்ற கட்சியினர் வலங்கையினர் என்றும், இடக்கைப் புறம் நின்றவர்களை இடங்கையர் என்றும் கூறப்பட்டு உள்ளனர்.

காஞ்சிபுரத்தில் வலங்கை இடங்கைக் குலமுறை இருந்ததாக அறியப்படுகிறது. அதனாலேயே இந்நகரத்தில் வலங்கை இடங் கைக் கோயில், வலங்கை இடங்கை மண்டபங்கள், வலங்கை இடங் கைத் தேவரடியார்கள் என்ற பாகுபாடு இருந்துள்ளமை குறிப்பிடப் பட்டுள்ளது.[43]

வலங்கையினர் விவசாயிகளுக்கு உதவுபவராயும், இடங்கை யினர் வாணிபம், கைத்தொழில் ஆகிய தொழில்களுக்கு உதவி செய்பவராகவும் விளங்கியுள்ளனர்.[44]

அடுத்து கோயில் நிலம் எவ்வாறு விவசாயிகளுக்கு பயன் பட்டது என்பது நோக்கப்படுகிறது.

## கோயிலின் நிலம்

மக்களின் வாழ்க்கைக்கு விவசாயம் இன்றியமையாததாகும். காஞ்சிபுரம் ஏகாம்பர நாதர் கோயில் அதிகமாக விவசாயம் செய்யக் கூடிய நிலங்களைப் பெற்றிருந்துள்ளது. இக்கோயிலின் நிலம் சோழர் காலத்தில் (கி.பி.907-1246) விருத்தியடைந்துள்ளது. எடுத்துக்காட்டாக, காஞ்சியில் முதலாம் பராந்தகன் (கி.பி. 907-55), பார்த்தி வேந்திரன் (கி.பி.956-69) உத்தம சோழன் (கி.பி.970-85) ஆகியோர் ஏகாம்பர நாதர், கயிலாச நாதர், பணி மணீசுவரன், சொக்கீசுவரன் முதலான கோயில்களுக்கு நன்கொடையளித்த செய்தி காணப் படுகிறது.[45]

கி.பி.1152 ஆம் ஆண்டில் இரண்டாம் இராசராசன் ஆட்சியில் மகாசபையார் கோயிலுக்கு நிலத்தானம் செய்துள்ளனர்.[46] சோழர் காலத்தைப் போலவே விசய நகர மன்னர்கள் காலத்திலும் கோயிலுக்குத் தானங்கள் பெருகின.

கி.பி.1510 ஆம் ஆண்டில் கிருட்டின தேவராயர் ஏகாம்பர நாதர் கோயிலுக்குப் புலியூர் கோட்டத்திலுள்ள குண்ணத்தூரைத் தான மளித்துள்ளார்[47] என்று நான்காம் இயலில் முன்னரே குறிக்கப் பட்டிருக்கிறது.

இதே போல் கி.பி.1533 ஆம் ஆண்டில் அச்சுதராயர் பெரிய காஞ்சிபுரத்திலுள்ள ஏகாம்பர நாதர் கோயிலுக்கும், சிறிய காஞ்சி புரத்திலுள்ள வரதராச பெருமாளுக்கும் சமமாக நிலங்களைத் தான மாகத் தந்துள்ளார்.[48]

இவ்வாறு மன்னர்களும், மக்களும் கோயிலுக்குச் செய்த தானங்களுள் அரசரின் தானங்கள் இரண்டு வகைப்படும். அவற்றுள் ஒன்று சர்வமயம்.

கிராமத்தின் முழு அதிகாரம் கோயிலுக்கே இருப்பதைச் சர்வ மயம் என்பர். இதனைத் திருவிடையாட்டம்[49] என்றும் கூறுவர். திரு விடையாட்டமாக விடப்பட்ட நிலங்களின் நான்கு எல்லைகளிலும் கற்கள் நடப்பட்டிருக்கும்.

அரசரின் தானங்களில் இரண்டாவதாகக் கருதப்படும் தான முறையாவது நிலங்களிலிருந்து கிடைக்கும் வருவாயில் அரசுக்குச் சேர வேண்டிய வரிகளைக் கிராமத்தினர் செலுத்திவிட்டு எஞ்சியதைக் கோயிலுக்குப் பயன்படுத்துவர்.

விசய நகர மன்னர் காலத்திற்குப் பின்னர், காஞ்சிபுரம் ஏகாம் பரநாதர் கோயிலுக்குப் பல மக்கள் பற்பல கிராமங்களைத் தான மளித்துள்ளனர். அக்கிராமங்கள் ஆரியப்பாக்கம், சிறுணைப் பெரு கல்,[50] நரப்பக்கம்,[51] பாலூர்,[52] திருமல்ராயன் தோட்டம்,[53] செட்டித் தாங்கல் முதலியன.

ஏகாம்பர நாதர் கோயிலுக்கு நன்செய், புன்செய் நிலங்கள் இர ண்டும் சேர்ந்து இருநூற்று ஐந்து ஏக்கரும் தொண்ணூற்று ஐந்து சென்டும் இருக்கிறதென்று மூன்றாம் இயலில் குறிப்பிடப்பட்டு இருக்கிறது. கோயிலுக்குரிய நிலங்களைக் கோயிலார் குத்தகைக்கு விட்டுள்ளனர். இதுவரையில் கோயிலுக்கு உள்ள நிலங்கள் குறித்து நோக்கப்பட்டது. அடுத்து அந்நிலங்கள் எவ்வாறு பயிர் செய்யப் படுகின்றன என்பது காணலாம்.

## கோயில் நிலங்களைப் பயிர் செய்தல்

காஞ்சிபுரம் ஏகாம்பர நாதர் கோயிலுக்குத் தூரத்திலும்,[54] அரு காமையிலும்[55] நிலங்கள் உள்ளன. இவற்றைக் கோயில் அதிகாரிகள் நேரிடையாகப் பயிர் செய்ய இயலாது. எனவே, பயிர் செய்வதில் ஈடு பாடு உடையவர்களிடம் கோயில் நிலங்களைக் குத்தகைக்கு விடுவர்.

உள்ளூர்ப் பெருமக்களின் மேற்பார்வையில் கோயிலுக்குச் சேர வேண்டிய மகசூல்களையும், தொகைகளையும் கோயில் அதிகாரிகள் நேரிடையாகப் பெற்றுக் கொள்கின்றனர். கோயில் நெல் அளப்பதற்கு 'அருமொழி தேவன் மரக்கால்' [56] பயன்பட்டுள்ளது. இந்த மரக்கால் அரசாங்க அளவையாக இருந்துள்ளது.

மிகுந்த திறமையுடன் பயிர் செய்பவர்களைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பு கோயில் நிர்வாகிகளிடம் இருந்தது. சிற்சில சமயங்களில் கோயிலுக்குத் தானம் செய்பவர்கள் திறமையான ஆட்களை நியமிப்பர்.

கோயில் நிலங்களைச் சிறப்பாகக் கண்காணிக்கும் வேலையில் இருந்துள்ளவர்கள் நாள் கூலியாக ஒரு பதக்கு நெல் பெற்றுள்ளனர். பதக்கு என்பது இரண்டு மரக்கால் நெல் ஆகும். கோயில் நிலங்களைக் கண்காணிக்கும் பொறுப்பில் இருந்துள்ளவர்கள் அந்தந்த வட்டாரத் திலுள்ள ஆட்களைப் பயிர்த் தொழிலுக்கு ஏற்பாடு செய்துள்ளனர். அவர்களுக்கு நாள் கூலியைப் பணமாகவும், பொருளாகவும் கொடுத் துள்ளனர். கி.பி. 16 ஆம் நூற்றாண்டில் குத்தகை முறை வழக்கத்தில் இருந்துள்ளது. இதன்படி பயிர் செய்பவர்களுக்கு மகசூலில் கால் பாகமும், கோயிலுக்கு மேல் வாரமாக முக்கால் பாகமும் பெற்றுக் கொள்ளப்பட்டது. கி.பி. 1535 ஆம் ஆண்டில் மேற்கூறிய விகிதத்தில்

மகசூலைப் பிரித்துக் கொடுத்ததாகக் குறிப்பேடொன்று விளக்கு கிறது.[57] சில சமயங்களில் வறட்சி ஏற்பட்ட காலங்களில் தென்னை, மா, வாழை ஆகிய மரங்கள் உள்ள நிலப்பகுதிகளில் மகசூலில் கோயிலுக்கு மூன்றில் இரண்டு பங்காகவும், மேற்கூறிய மரங்களை வளர்ப்பவர்களுக்கு மூன்றில் ஒரு பாகமும் கொடுக்கப்படுகிறது.

பச்சைப் பயிறு, எள், கொள்ளு, கரும்பு போன்றவற்றிற்குப் பக்கத்துக் கிராமங்கள் கோயிலுக்காகக் கொடுக்கின்ற விகிதம் பின் பற்றப்பட்டு வந்துள்ளது. கோயில் நிலத்தைப் பயிரிடும் குடியான வர்களுக்கு (விவசாயிகளுக்கு) வறட்சி ஏற்பட்ட காலத்திலும், மற்ற கடின காலத்திலும் கோயில் நிர்வாகிகள் போதிய சலுகைகளை அளித்து வந்துள்ளனர்.

கோயில் நிலங்களின் நீர்ப்பாசனம் முற்காலத்தில் கிணற்றின் மூலம் செய்யப்பட்டு வந்தது. ஏகாம்பர நாதர் கோயிலின் நிலங்கள் பருவ மழையினாலும் நிலங்களில் உள்ள கிணற்று நீரினாலும் பயிர் செய்யப்பட்டுள்ளன. இந்நிலங்களுக்குக் கிணற்றுப் பாசனமே சிறந்த தாக இருந்திருக்கிறது.

கி.பி. 19 ஆம் நூற்றாண்டில் செங்கை மாவட்டத்தின் ஆட்சி யாளராக இருந்த கிரோல் என்பவர் கிணற்றுப் பாசனத்தின் மூலம் பயிர் செய்பவர்களுக்குச் சிறந்த சலுகைகளைச் செய்துள்ளார். இவர், கற்கள் கழனிகளில் அதிகமாக இருந்ததால் சிறந்த மகசூலைப் பெற முடியவில்லை என்று கண்டு நீர்ப்பாசன வசதிகளை விரிவுபடுத்தி னார். சில இடங்களில் ஆறு, ஏரி, குளம் ஆகியவற்றின் மூலமும் கோயில் நிலங்கள் பயிரிடப்படுகின்றன. நிலங்களில் அதிகமான மகசூலுக்காக கோவில் நிலங்களை வைத்திருப்போர் அவ்வப்போது சீர்த்திருத்தங்கள் செய்து வந்துள்ளனர்.

## கோயில் நிலங்களைச் சீர்செய்வதற்கு மேற்கொண்ட முறைகள்

கி.பி. 1269 ஆம் ஆண்டு புவனேக வீரன் என்பவன் கோயிலுக் குச் சமர கோலாகல நல்லூரைத் தானமாகக் கொடுத்ததுடன் அவ் வூரிலுள்ள கிணற்றையும் குளத்தையும் சேர்த்துத் தானமாக அளித் துள்ளான். இவ்வாறு புவனேக வீரன் அளித்த கோயில் நிலங்களுக் குக் கிணற்றிலிருந்தும் குளத்திலிருந்தும் நீர் இறைத்துப் பயிர் செய்த குடியானவர்கள் மிகுந்த ஊக்கத்துடன், கடினமாக உழைத்துக் கோயிலின் வருமானத்தைப் பெருக்கியுள்ளனர்.

மேலும் கோயிலின் தரிசு (பயிர் செய்யாத நிலம்) நிலங்களைப் பண்படுத்தல் அவசியமென அறிந்து பொது மக்கள் அந்நிலங்களை மழைக் காலங்களில் எளிமையாகச் சீர்திருத்தியுள்ளனர். அந்நிலங் களைப் படிப்படியாக உழவு நிலங்களாக மாற்றியுள்ளனர். கோயில் நிலங்களை அடுத்துத் தோட்டங்களைக் காணலாம்.

## கோயிலின் தோட்டங்கள்

ஏகாம்பர நாதர் கோயிலில் நடராசர் நந்தவனம் உள்ளது. இங்குப் பூசைக்கு வேண்டிய பூக்களும், பழங்களும், தேங்காய்களும் கிடைக்கின்றன. இங்குள்ள வில்வ மரத்தின் இலைகள் முக்கியமாகப் பூசைக்குப் பயன்படுகின்றன. இங்குள்ள வாழை மரங்களும், தென்னை மரங்களும், எலுமிச்சை மரங்களும், பூ மரங்களும், நுணா மரம், வேப்ப மரம் ஆகியவையும் சிறந்து விளங்குகின்றன.

தோட்டத்தில் ரோசா, மல்லி, சாமந்தி ஆகிய பூச்செடிகளைக் கோயிலார் வளர்க்கிறார்கள். இத்தோட்டத்திற்கு ஆகும் செலவினை இக்காலத்திய சிறிய காஞ்சிபுரம் காந்தி சாலை எம்.வி.எம். பச்சை யப்ப முதலியாரின் குமாரர்கள் ஏற்றுக் கொண்டுள்ளனர். இக் கோவி லின் நிலங்கள், கூலி, காணி, மா, வேலி என்னும் அளவுகளால் அளவிடப்பட்டன.

நூறு கூலிகளையுடைய தரை (நிலம்) ஒரு மா எனப்படும். இருபது மா, ஒரு வேலி ஆகும். அக்காலத்தில் வேலி என்னும் அள வையே, பெரிய நில அளவையாக இருந்துள்ளது. எடுத்துக் காட் டாக கி.பி.1218 ஆம் ஆண்டில் சாளுக்கிய நாராயண சித்தராசா என்பவர் காஞ்சிபுரம் ஏகாம்பர நாதர் கோயிலுக்கு 1000 கூலி நிலத் தைத் தானமளித்துள்ளார்[58] என்று முன்னரே குறிக்கப்பட்டிருக்கும். இந்நிலம் அரை வேலிக்குச் சமமாகும்.

இரண்டாயிரம் கூலிகள் ஒரு வேலிக்குச் சமமாகும்.[59] இந்த அளவு முறைகள் நிலையானதல்ல; சீரான அளவுமுறையாகவும் இல்லாதபடியால் நிலம் அளவுகோல் வைத்து பிற்காலத்தில் அளக் கப்பட்டது. இவ்வளவு கோலின் நீளம் பதினாறு அடி ஆகும்.

கி.பி. 18 ஆம் நூற்றாண்டில் ஆங்கிலேயர் ஆட்சியின் சட்டப்படி பொது அளவான செண்டு, ஏக்கர் ஆகியவை ஏற்பட்டன. நூறு செண் டுகள் சேர்ந்தது ஓர் ஏக்கர் ஆகும். செண்டு என்பது சிறிய நில அளவாகும். ஏக்கர் என்பது பெரிய நில அளவாகும்.

நிலங்களில் விளையும் தானியங்கள் தானிய அளவைகளான கலம், மரக்கால், குறுணி, நாழி என்பனவற்றால்[60] அளக்கப்பட்டன.

அக்காலத்தில் பிற மாநிலங்களில் கீழ்க்கண்ட அளவு முறைகளை மக்கள் மேற் கொண்டிருந்தனர்.

தஞ்சை மாவட்டத்தில் இருந்த தானிய அளவு பின்வருவன :-

| | |
|---|---|
| 6 நாழி | 1 குறுணி |
| 15 குறுணி | 1 கலம் |

தமிழகத்தில் மற்றொரு அளவு முறை இருந்தது.

| | |
|---|---|
| 2 ஆழாக்கு | 1 உழக்கு |
| 2 உழக்கு | 1 உரி |
| 2 உரி | 1 நாழி |
| 8 நாழி | 1 குறுணி |
| 2 குறுணி | 1 பதக்கு |
| 2 பதக்கு | 1 தூணி |
| 3 தூணி | 1 கலம் |

மேற்கூறியுள்ள அளவு முறைகளால் குழப்பங்கள் ஏற்படாமல் இருப்பதற்கு ஏகாம்பர நாதர் கோயிலின் நிர்வாகிகள் ஒரு திட்டமான அளவை வைத்திருந்துள்ளனர். இக் கோயிலின் நெல் அளக்க அருமொழி தேவன் மரக்காலும், நெய் அளக்க திருவேகம்பன் நாழியும் பயன்பட்டுள்ளன. இந்த அளவுகள் சோழ அரசர்கள் காலத்திலும், விசய நகர அரசர்கள் காலத்திலும் வழக்கத்தில் இருந்துள்ளன.

கோயில் திரு அமுதிற்கு நிலங்களிலிருந்துதான் தானியங்கள் வந்துள்ளன. தானியங்கள் போலவே கோயிலில் வழிபாடு செய்வதற்குப் பால், தயிர், நெய் முதலியனவும் தேவையாக இருந்துள்ளன. அவற்றினை ஏகாம்பர நாதர் கோயிலில் திருவேகம்ப நாழியால்[61] அளந்தனர். சோழ அரசர்கள் காலத்திலும் இந்த அளவு முறை மிகவும் பயன்படுத்தப்பட்டுள்ளது.

பொருள்களை வாங்குவதற்கு சோழ அரசர்கள் காலத்தில் (கி.பி. 907-1246) பொன் நாணயங்கள் வழக்கத்தில் இருந்துள்ளன. சான்றாக கி.பி. 13 ஆம் நூற்றாண்டில் ஏகாம்பர நாதர் கோயிலில் தேவரடியார்களைப் பாராட்டி ஐந்து கழஞ்சு பொன் தானமளித்துள்ளமையைக் காட்டலாம்.[62] பொன் நாணயங்கள் நிலையான நாணயங்களாகும்.

மாடை என்பது அரை வராகன் எடைப் பொன்னாகும். இதற்குச் சமமானது கழஞ்சு என்பதாகும்.

கழஞ்சுக்குச் சமமானது எழுபது பொன் தானிய எடையாகும்.

காசு என்பது முப்பத்தைந்து தானியங்களின் எடையாகும். முதற் குலோத்துங்கன் காலத்தில் (கி.பி. 1070-1120) மதுராந்த கான் மாடை என்பது மதுராந்தக உத்தம சோழனால் கொண்டு வரப் பட்டதாகும்.

ஒரு கழஞ்சு இரண்டு காசுக்குச் சமமாகும். இந்த எடைகள் முதல் குலோத்துங்கன் காலத்தில் வழக்காற்றில் இருந்துள்ளன.

கோயிலில் பண்டாரமானது (Treasury) தேவர் பண்டாரம் என் றும் ஸ்ரீ பண்டாரம் என்றும் பெயர் பெற்றிருந்தன. கோயில் பண்டா ரத்தில் ' பொன்னை உரைத்துப் பார்க்கக் ' கட்டளைக் கல் ' இருந் துள்ளது.

மாற்றுக் குறையாத தூய்மையான பொன் என்பதற்கு, அடை யாளமாக அரசினரால், துளையிடப்பட்ட பொன் நாணயம் 'துளைப் பொன்' என்றும் 'துளை நிறை ' என்றும் வழங்கப்பட்டன.

தெலுங்கு அரசன் நந்த கோபாலன் காலத்தில் (13 ஆம் நூற் றாண்டு) நந்தகோபால நாணயங்கள் காஞ்சிமா நகரில் வழக்கத்தில் இருந்துள்ளன. இது நந்த கோபால மாடை அல்லது புதுமாடை என்று அழைக்கப்பட்டது.[63]

விசய நகர மன்னர்கள் காலத்தில் (கி.பி. 14,15 ஆம் நூற்றாண் டுகள்) பணம், நாணயம், வராகன் ஆகிய நாணயங்கள் வழக்கத்தில் இருந்துள்ளன. பிற் காலத்தில் நிலையான பொன் நாணயம் 52.7 கிராமில்[64] இருந்துள்ளது.

வராகத்தில் பாதி பிரதாப என்பதாகும். பணம் என்பது 1/10 பிரதாப எனலாம். இது 1/20 வராகத்திற்குச் சமமாகும்.

ஏகாம்பரநாதர் கோயில் அமைந்துள்ள இடத்தின் பரப்பு இன் றைய நிலையில் இருபத்து நான்கு ஏக்கர் என குறிப்பிடப்பட்டிருக் கிறது. இக்கோயிலின் தேவைகள் கி.பி. ஆறாம் நூற்றாண்டில் மிகக் குறைந்தவையேயாகும். அவை அரிசி, பூக்கள், சந்தனம், பால், நெய், எண்ணெய், விளக்கு என்பனவேயாகும்.

இக்கோயிலுக்குப் பல்லவர், சோழர், விசய நகர மன்னர், ஆங் கிலேயர் ஆகியோர் ஆட்சிகளில் அசையும் பொருள்களான மாடு, நகைகள், காசுகள் ஆகியவை அதிகமாகக் கிடைத்துள்ளன.

இவ்வாறு நிலையான பொருள்கள் கோயிலுக்குக் கிடைத்தமை யினால் நாள்தோறும் நடக்கும் பூசைகளையும், திங்கள் தோறும் நடக்கும் விழாக்களையும், ஆண்டுதோறும் நடக்கும் விழாக்களையும் சைவ சமய குரவர் விழாக்களையும் மிகச் சிறந்த முறையில் மக்கள் கொண்டாடி வருகின்றனர்.

கோயிலில் எப்போதும் சுவையான உணவுகள் தயாரிக்கப் பட் டன. குறிப்பாக விசய நகர மன்னர் காலத்தில் தயாரிக்கப்பட்ட சுவையான உணவு குறித்து தென்னிந்திய கோயில் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. கோயிலில் சுவையான உணவுகள் தயாரிப்பதற் கும், பூசைகளுக்கும் அரிசி, பருப்பு, புளி, உளுந்து, மிளகு, வெல் லம், உப்பு, கற்பூரம், குங்குமம், தேங்காய். பழங்கள், பால், தயிர், நெய், எண்ணெய், தேன், பன்னீர் முதலான பொருள்கள் மிகுதியாகத் தேவைப்பட்டன.

மேற்கூறிய பொருள்களுடன் கோயிலுக்குத் துணிகள், மரச் சாமான்கள், பொன், வெள்ளி, நகைகள், செப்பு உலோகப் பாத்திரங் கள், அழகுப் பொருள்கள் முதலியவையும் இன்றியமையாது வேண் டப்பட்டன.

ஏகாம்பரநாதர் கோயிலை நிர்வாகம் செய்தவர்கள் கோயில் வட்டாரத்தில் கிடைக்கும் பொருள்களையே அதிகமாக வாங்கிப் பயன்படுத்தியுள்ளனர். இவ்வாறு காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோயில் உள்ளூர் வணிகத்தைப் பெருகச் செய்கின்றது. காஞ்சியில் கிடைக் காத பொருள்களைக் கோவிலுக்கு வெளியூர்களிலிருந்து வாங்கிக் கொள்வர்.

கி.பி.15ஆம் நூற்றாண்டில் விசய நகர அரசர்கள் ஆட்சியில் ஏகாம்பர நாதர் கோயில் ஒளிமயமாக விளங்கியுள்ளது. இக்கோயி லால் பல அந்தணர்களுக்கு வேலை வாய்ப்பு ஏற்பட்டுள்ளது. மேலும் இக்கோயிலுக்கு வேலையாட்கள் நாளுக்கு நாள் அதிகமாகத் தேவைப்படும் நிலை உள்ளது. விசய நகர அரசர்கள் வைணவர்களே எனினும் அவர்களுக்கு மற்ற சமயங்களிடத்தில் வேறுபாடு இல்லை. சைவ சமயம் நாட்டில் சிறந்த சமயமாய் இருந்துள்ளது.

சங்க காலத்திலிருந்து வந்த பௌத்த மதமும் சமண மதமும் சிறு அளவிலாவது நிலைத்துள்ளது குறிப்பிடத்தக்கது.

சோழர் காலத்தில் கட்டப்பட்டுப் பழுதுற்ற கோவில்களை விசய நகர அரசர்கள் செப்பம் செய்தனர். இவர்கள் கோவில்களை நன்கு

பாதுகாக்க அறக்குழுவினரை ஏற்படுத்தினர். கோவில் நிலங்களை யும் மற்றவற்றையும் கோவில் நலம்கருதி வாங்கவும், விற்கவும் அறங்காவலருக்கு உரிமையளித்தனர். இவற்றால் காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவில் சிறப்புற்று விளங்கி வந்துள்ளது. இக் கோவில் தொழும் இடமாக மட்டும் இல்லாது மக்களின் பொது வாழ்வு மலரத்தக்க வகையில் துணை புரியும் நல்லதொரு இடமாக வும் இருப்பது போற்றத்தக்கதாகும்.

இக் கோயிலுக்கென பாடகர்களும், நடன மாதர்களும் இருந் துள்ளனர். கோவில் வழிபாட்டினால் மக்கள் தூய்மையான வாழ்க்கை யையும், பண்பாடுடன் வாழும் முறையையும், கல்வி கற்க வேண்டிய தன் அவசியத்தையும் நன்கறிந்து கொண்டுள்ளனர்.

இக்கோயில் நெஞ்சுக்கு நிறைவளிக்கும் தன்மை வாய்ந்தது. கலையோடு, தத்துவத்தோடு, நம்பிக்கையோடு, கோயிலுக்குச் செல்லும் மக்களின் மனத்தினைக் கட்டுப்படுத்துகிறது. இதனால் மக்களுக்கு மன அமைதி ஏற்படுகிறது.

மக்கள் சமூகத்தோடு இணைந்து வாழ்வதற்கும், கவலை யின்றி இருப்பதற்கும் கோயில் அவசியமாக இருந்திருக்கிறது. கோயில் தொண்டில் மனோவியல், மருத்துவ இயல், சமூகவியல், மரபியல் முதலிய அறிவியல் கூறுகள் அடங்கியிருக்கின்றன.

மேலும் விளம்பரம், பதவி, பொருள் முதலிய இன்பங்களை வேண்டாத ஞானிகளையும், கற்றவர்கள், கல்லாதவர்களையும் பக்குவமானவர்களாகச் செய்வது கோயிலாகும். அன்பு வயப்பட்ட பக்தி நெறியில் மக்களை ஈடுபடச் செய்வது கோயில்களேயாகும். இம் முறையில் காஞ்சிபுரம் ஏகாம்பர நாதர் கோவில் மன அமைதி தரும் தூய்மையான ஆன்மீக வழிபாட்டிற்குப் பேருதவியாய் விளங்கு கிறது.

**பின்குறிப்புகள்**

1. கழகத் தமிழ் அகராதி, மு.கா. நூ. , ப. 426
2. திரு ஓணகாந்தன்றளி காஞ்சிபுரத்தில் சருவதீர்த்தத்தின் வடக்கில் உள்ளது. ஓணன், காந்தன் என்னும் இரு அசுரர்கள் பூசித்த இரண்டு மூர்த்திகள் இங்குள்ளனர். சுந்தரர் இக்கோயிலில் பதிகம் பாடிப் பொன் பெற்றுள்ளார். மூவர் தேவாரம், மு.கா.நூ., மூர்த்திநாயனார், திருவோணகாந்தன்றளி பா-ள் . 1-10. பக்.1307-1309
3. அனுலோமர் என்பவர் உயர்குலத்தந்தைக்கும், இழிகுலத் தாய்க்கும் பிறந்தவராவர். மு.கா.நூ., கழகத் தமிழ் அகராதி, ப. 66

பிரதிலோமர் என்பவர் உயர்குலத் தாய்க்கும், இழிகுலத்தந்தைக்கும் பிறந்தவராவர்.

4. வரி நீக்கப் பெற்ற நிலம், கழகத் தமிழ் அகராதி, மு.கா.நூ.,ப. 138.

5. மேற்படி, ப. 420.

6. மேற்படி, ப. 138.

7. சேக்கிழார் பெரியபுராணம், மு.கா.நூ., தடுத்தாட்கொண்ட புராணம், திருஞானசம்பந்த மூர்த்திபுராணம், திருநாவுக்கரசு நாயனார் புராணம், பக். 33, 269, 196.

8. திருநாவுக்கரசர், திருக்கச்சியேகம்பம், மூவர்தேவாரம், மு.கா.நூ., ப.1288.

9. திருஞானசம்பந்தர், திருக்கச்சியேகம்பம், மூவர்தேவாரம்,மு.கா.நூ., ப. 1281.

10. சுந்தரர் திருக்கச்சியேகம்பம், மூவர்தேவாரம், மு.கா.நூ., ப. 1301.

11. மாணிக்கவாசகர், திருவாசகம், புலியூர் தேசிகன் (உரை), இரண்டாம் பதிப்பு (சென்னை: ஸ்ரீ மகள் அச்சகம், 1963) போற்றித் திருவகவல், திருப்பொற்சுண்ணம், திருப்பூவல்லி, பக். 64, 175, 213.

12. கழகத்தமிழ் அகராதி, மு.கா.நூ., ப. 89

13. திருநாவுக்கரசு நாயனார், திருக்கச்சிமேற்றளி மூவர் தேவாரம், மு.கா.நூ., பக். 1304 -1307.

14. பின்னிணைப்பு - 9 இல் காண்க.

15. Mysore Archaeological Report (M.A.R.) 1917 (Mysore) General and Revenue Department 1916) pp. 42-44.

16. சில நிலங்களுக்கு உரிய வரியை ஒரே வகையாகச் செலுத்திவிடின் அந்நிலங்களுக்கு ஆண்டுதோறும் வரி விதிப்பதில்லை. எனவே, அவை இறையிலி என்று கருதப்படும்.

17. S.I.I. Vol.IV, No.824
(Annual Report (A.R.) No.II of 1893.)

18. மே.கா.நூ. No.821 (A.R.) No.8 of 1893.

19. கழகத்தமிழ் அகராதி, மு.கா.நூ., ப. 365

20. ARSIE 1939 - 1940 No. 340 p.69

21. ARSIE No. 350

22. ARE No. 452 கழஞ்சு என்பது பன்னிரண்டு பணவெடையாகும். கழகத்தமிழ் அகராதி, ப. 298. காசு என்பது ஒரு பொன் நாணயம். மேற்படி - ப. 313, மஞ்சாடி என்பது இரண்டு குன்றிமணி எடை மேற்படி, - ப. 263.

23. நத்தம் -ஊரின் குடியிருப்பிடம் 'கழகத்தமிழ் அகராதி' மு.கா.நூ., 589.

24.. மாவடை : ஊரிலுள்ள பசுக்களை எங்குப் பட்டிப் போடுகிறார்களோ, அந்தப் பட்டியையும் பயன்படுத்தும் உரிமை (கிராமத்தில் கால் நடை அடையும் இடம்). தமிழ்ப் பேரகராதி, ஐந்தாம் புத்தகம். பகுதி -1 ( சென்னை: சென்னைப் பல்கலைக் கழகம், 1974) ப. 3179.

25. S.I.I. No. 825 (A.R. No. 12 of 1893)

26. ARSIE, 1909 No. 310.

27. Indian Historical Quarterly (I.H.Q) Vol. VI p.522.

28. Ibid

29. S.I.I. Vol.IV No.350 (A.R. No.27 of 1890)

30. கோன் - இடையன் : கழகத்தமிழ் அகராதி, மு.கா.நூ., ப. 410.

31. S.I.I. Vol.IV No.351 (A.R. No.28 of 1890)

32. Raman K.V. Sri Varadaraja Swami-Temple-Kanchi (New Delhi, Abhinav publications, 1975) p.136.

33. S.I.I. No.847 (A.R. No.54 of 1893)

34. Ibid No.847 (A.R. No.54 of 1893)

35. Raman K.V. op.cit p.136.

36. பிள்ளை. கே.கே. தமிழக வரலாறு - மக்களும் பண்பாடும் மு.கா. நூ., ப. 330.

37. பொன்னுசாமி பிள்ளை. வ. பல்லவர் காலம் (கி.பி. 250 -900) தமிழக வரலாறு (மு.கா.நூ.) ப. 93.

38. ARSIE No. 346.

39. ARSIE 1939-1940 No.343 p.69.

Srinivasan. C.R. op.cit. p.252.

40. செங்கை மாவட்ட வரலாற்றுக் கருத்தரங்கு, நாகசாமி. இரா. மு.கா.நூ. , (பதி), ப. 70

41. பாலூர் கண்ணப்ப முதலியார், தொண்டை நாட்டுப் பாடல் பெற்ற சிவத்தலங்கள் மு.கா.நூ. , ப. 16

42. பிள்ளை. கே.கே. தமிழக வரலாறு மக்களும் பண்பாடும், மு.கா.நூ. , ப. 314.

43. மேற்படி. ப. 315.

44. பரம சிவானந்தம் அ.மு. இலக்கிய வரலாறு மு.கா.நூ. , ப. 304.

45. Srinivasan C.R. op.cit. p.248.

46. S.I.I. Vol IV. No. 822 (A.R. No.9 of 1893)

47. Annual Report of Indian Epigraphy (ARIE) 1955-56 No. 275.
48. ARSIE 1919 No. 584, 544, and 547.
49. Raman . K.V. op.cit. p.139.
50. பசலி 1364 குத்தகைக்கு விடப்பட்டுள்ளது.
51. பசலி 1390
52. பசலி 1396 குத்தகைக்கு விடப்பட்டுள்ளது.
53. பசலி 1385 முதல் 1389 வரை.
54. பாலூர், பொடாவூர், நரப்பாக்கம் போன்ற ஊர்கள்.
55. செட்டித்தாங்கல், திருமலராயன் தோட்டம், சிறுணைப் பெருகல் முதலியன.
56. S.I.I. Vol IV. No. 867 (A.R. No.54 of 1893)
57. Raman K.V. op.cit. p.140.
58. Srinivasan C.R. op.cit. p.110.
59. This is in accordance with the ration given in inscriptions of Thanjavur and chingleput areas. Appadurai. A., Economic conditions of South India I, p.405 Sri Varadaraja Swami - Temple Kanchi p.141.
60. S.I.I. No. 813 (A.R. No.1 of 1893)
61. Ibid. Vol.IV No. 350
62. Ibid. No.867 (A.R. No.54 of 1893)
63. Raman K.V. op.cit . p.141.
64. Ibid. p.141.

